# சங்கத் தமிழ்

# 4

## வினையியல்

( வினையெச்சம் - 1 )

டாக்டர் ச. அகத்தியலிங்கம்
M.A., Ph.D. (Kerala)., Ph.D. (Indiana, U.S.A.)
பேராசிரியர், மொழியியல் உயர் ஆய்வு மையம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்
அண்ணாமலைநகர்
608 002

நூலின் பெயர் : சங்கத் தமிழ் – IV
ஆசிரியர் : சண்முகம்பிள்ளை அகத்தியலிங்கம்
பதிப்பகம் : அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்
மொழி : தமிழ்
பதிப்பு : முதற் பதிப்பு
பதிப்பு ஆண்டு : 1986
நூலின் அளவு : 21 × 14 செமீ
அச்சமைப்பு : 10 புள்ளி
பக்கங்கள் : 294 + iv
விலை : ரூ 40–00
அச்சகம் : ஸ்ரீ ராமகிருஷ்ணா பவர் பிரஸ் சிதம்பரம்

---

நூல் கிடைக்கும் இடங்கள்:

1. அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்
அண்ணாமலைநகர் 608 002
2. பாரி நிலையம்
59 பிராட்வே. சென்னை 600 001
3. மீனாட்சி புத்தக நிலையம்
60 மேலக் கோபுரத் தெரு, மதுரை 625 001
4. மணிவாசகர் நூலகம்
மேல சன்னதி, சிதம்பரம் 608 001

# முன்னுரை

சங்கத் தமிழ் என்ற வரிசை நூல்களில் இது நான்காவது நூல். முதல் நூல் பழந்தமிழ் நூல்களில் சொல்லப்படும் செய்திகள், குகைத்தமிழ். தொல்காப்பியம், முன்பழந்தமிழ் நூல்கள், பின்பழந்தமிழ் நூல்கள் ஆகியவற்றையும், அவற்றுள் குறிப்பாகப் பழந்தமிழ் நூல்கள் தொகுக்கப்பட்ட கால வரிசை முறை, அவற்றிற்குரிய காரணங்கள் போன்ற இன்னோரன்ன செய்திகளை விளக்கி நிற்கும். இரண்டாவது நூல் பழந்தமிழில் காணப்படும் பலவேறு இலக்கணக்கூறுகளில் வினைமுற்றுக்களில் காணப்படும் தன்மை, முன்னிலை விகுதிகளைப் பற்றிப் பரக்க ஆராய்ந்து நிற்பது.

பொதுவாக, விகுதிகளைப் பற்றி ஆராயும்போது அவற்றின் எண்ணிக்கை, அவை வரும் இடங்கள், தொல்காப்பியத்தில் அவை பற்றிக் கூறப்படும் செய்திகள், உரையாசிரியர்களின் கருத்துக்கள், அவைகளை ஒட்டிப் பின்னர் எழுந்த இலக்கணங்கள் கூறும் செய்திகள், மொழியியல் கருத்துக்கள் போன்ற பல செய்திகள் விளக்கப்படுகின்றன.

இதைப் போன்றே மூன்றாவது நூல் பழந்தமிழ் நூல்களில் காணப்படும் படர்க்கை விகுதிகளைப் பற்றி ஆராய்வது. தமிழ்மொழியில் காணப்படுகின்ற இடம், திணை, பால் பகுப்புக்களின் அடிப்படை, அது பற்றிக் கூறும் இலக்கண, மொழியியல் ஆசிரியர்களின் கருத்துக்கள், பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் உயர்வு ஒருமை, ஆண், பெண், பலர்பால் விகுதிகள், அஃறிணை ஒருமை, பன்மை விகுதிகள் போன்றவை மொழியியல் கண்ணோட்டத்தோடு ஆராயப்படுகின்றன.

சங்கத்தமிழ் என்ற வரிசை நூல்களில் இது நான்காவது நூல். வினையெச்சம் பற்றி ஆராய்வது இது. பொதுவாக, தொல்காப்பியம் பலவேறு எச்சங்களை வினையெச்சம் என்ற ஒரு தலைப்பின் கீழ் அடக்கினும் இதனைக் காலவெச்சம், குறையெச்சம், நிபந்தனையெச்சம் எனப் பிரிக்கலாம். வினையெச்சங்களில் காலவெச்சமே இந்நூலின் கருவாக அமைந்து உள்ளது. அதிலும் குறிப்பாக, செய்து, செய்யூ, செய்பு, செய்யா, செய்யாமை, செய்யாமல் ஆகிய வாய்பாட்டுக் கால வெச்சங்களை இந்நூலின்கண் விரிவாக விளக்கப்படுகின்றன.

இவ்வாய்பாடுகள் விளக்கப்படுகின்றபோது பழந்தமிழ் இலக்கியங்களில் இவ் வாய்பாட்டுச் சொற்கள் எவ்வெவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்றும், என்னென்ன பொருள் களில் அவை வருகின்றன என்றும் மிக விரிவாக ஆராயப்படு கின்றது. பொதுவாகத் தொல்காப்பியர் இவ் வாய்பாடுகள் பற்றிப் பேசுகின்றாரேயன்றி இவை காட்டும் பொருள்கள் பற்றிப் பேசுவதில்லை. ஆயினும் உரையாசிரியர்கள் ஆங் காங்கே ஒருசில பொருள்களைச் சுட்டிச் செல்லுதல் காண லாம்.

பொதுவாக, காலவெச்சங்கள் ஒப்புமைக் காலத்தைக் காட்டும் என அறிஞர்கள் கருதுவர். இது ஓரளவுக்கு உண்மை யேயாயினும் இவை காட்டும் காலத்திற்கும் பொருளுக்கு மிடையே ஒருவகைத் தொடர்பு இருத்தலைக் காணலாம். காலவெச்சங்கள் வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப்பொருள், நிலைமைப்பொருள், காரணப்பொருள் ஆகியவற்றைக் காட் டும்போது இறந்த காலத்தையும், உடனிகழ்ச்சிப்பொருளில் வரும்போது நிகழ்காலத்தையும், தாக்கப் பொருளிலும், நோக்கப்பொருளிலும் வரும்போது எதிர்காலத்தையும் காட் டும் (காண்க. 3.1.3.6, 3.2.1.5, 3 3.1.5, 3.4.1.5, 3 5.1.5).

இதுபோன்றே இக்காலவெச்சங்களும் அவை கொண்டு முடியும் வினைகளும் ஒரே எழுவாயைக் கொண்டு முடிவன வா அல்லது இருவேறு எழுவாய்களைக் கொண்டு முடிவனவா

என்ற ஆராய்ச்சி தமிழ் இலக்கண அறிஞர்களிடையே அன்று முதல் இன்று வரை இருந்து வருவதைக் காணலாம். பழந் தமிழ் நூல்களில் காலவெச்சங்களின் வரவை நோக்கும் போது அவை காட்டும் பொருளுக்கும் அவை ஏற்கும் எழுவாய்களுக்கு மிடையேயும் கூட தொடர்பு ஒன்று இருப்பதைக்காணமுடியும், வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள் ஆகியவற்றில் மிகப்பெரும்பான்மையான இடங்களில் ஒரே எழுவாயும் (3.1.3.5.1, 3.1.3.5.2,) தாக்கப்பொருளில் வரும்போது இரு வேறு எழுவாய்களையும் கொண்டு வந்திருத்தல் காணலாம் (3.1.3.5.6).

இந்நூல் ஆறு இயல்களைக் கொண்டது. முதல் இயல் வினையெச்சங்களைப் பற்றிய பொதுவான சில கருத்துக்களை ஆராய்ந்து செல்வது. இதன் பெயர், விளக்கம், வகைப்பாடு உடன்பாடு, எதிர்மறை போன்றவற்றை ஆராய்ந்து நிற்கும்

இரண்டாவது இயல் காலவெச்சம்பற்றி ஆராய்ந்து நிற்கும். இதன் விளக்கம், வெவ்வேறு பெயர்கள், இவற்றின் அமைப்பு, இவை காட்டும் பொருள், இவை காட்டும் காலம் ஆகியவற்றைப் பரக்கக் கூறும்.

பின்னர்க் காணப்படும் இயல்கள் பலவேறு காலவெச்ச விகுதிகளைப் பற்றிக் குறிப்பிடும். அவற்றின் அமைப்பு, அவை பற்றித் தொல்காப்பியம் கூறும் செய்திகள், உரையாசிரியர் களின் கருத்துக்கள், தொல்காப்பியத்தில் அவை காணப்படும் நிலை, பழந்தமிழ் இலக்கியங்களில் அவற்றின் வரவு, அவை காட்டும் பொருள்கள், அவை எடுக்கும் எழுவாய், அவை காட்டும் காலம போன்ற இன்னோரன்ன செய்திகளை ஏராள மான எடுத்துக்காட்டுக்களுடன் ஆராய்ந்து செல்லுவன வாகும். இந்நிலையில் இவற்றைப் பற்றிய நல்லதொரு ஆராய்ச்சியை இந்நூலின்கண் காணலாம்.

முன் வரிசை நூல்களில் குறிப்பிட்டது போன்று பழந் தமிழ் இலக்கியங்களுக்கு ஒருசேர நல்லதொரு இலக்கணம் இல்லையே என்ற ஏக்கத்தில் எழுந்தனவே இவ் வரிசை நூல்கள்.

மேலும் தமிழ்மொழி வரலாறு எழுதுவதற்கும் இந்நூல்கள் துணை புரியும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழ் மொழியின் அமைப்பினை அறுதியிட்டுக் கூறுவதற்கும் இந்நூல்கள் துணைபுரியும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

இத்தகைய வரிசை நூல்களை உருவாக்குதல் ஒரு தனி மனிதனால் முடியாத ஒன்றாகும். எத்தனையோ அறிஞர்கள் ஆக்கித் தந்த டாக்டர் பட்ட ஆய்வேடுகள், அவற்றோடு இணைந்த சொல்லடைவுகள், பல அறிஞர்களின் கட்டுரைகள், விளக்கங்கள் இவையெல்லாம் இருந்த நிலையில்தான் இத்தகைய வரிசை நூல்கள் உருவாகின்றன. இவர்களுக்கெல்லாம் என் நன்றியைக் காணிக்கையாக்கி மகிழ்கிறேன்.

இதைப் போன்றே இந்நூல் உருவாவதற்கு இரவு பகலாக உழைத்தவர்கள் பலர். எனினும், சிலர் குறிப்பிடத்தக்கவர். டாக்டர் செ. வை. சண்முகம், டாக்டர் ந. குமாரசாமி ராஜா, டாக்டர் கே. பாலசுப்ரமணியன், டாக்டர் சீ. ஜெயபால், டாக்டர் திருமதி எம். சுசீலா சேகரன் போன்றவர்களின் உழைப்பும் உறுதுணையும் குறிப்பிடத் தக்கவை. இவர்களுக்கு என் நன்றியும் கடப்பாடும் என்றும் உரியன.

இவர்களைப் போன்றே என் ஆய்வுமாணவர்கள் பலரும் அயராது உழைத்தனர். அவர்களுள் ஆ. கோ. நடராசன் அ. பூலோகரம்பை ஆகியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இந்நூலினை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ இராமகிருஷ்ணா அச்சகத்தினருக்கும் என் நன்றி.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், தமிழ் வளர்க்கும் தனிப் பெரும் கழகம். இக்கல்விக் கோயிலில் பயிலவும் மட்டுமின்றிப் பணி புரியும் மாபெரும் பேற்றினையும் பெற்றவன் நான். என் சிந்தனைக்கும் செயலுக்கும் வாழ்வும் வளமும் அளித்து வேராகவும் விதையாகவும மட்டுமின்றிக் காயாகவும் கனியாகவும் நிற்கும் கன்னித் தமிழ்க் கோயில் இது. இக்கோயிலில் நாளும் வலம் வரும் நான் இதற்கு என்றும் கடமைப்பட்டவன். இத்தகைய கழகத்திற்கு, கலங்கரைவிளக்

கத்திற்கு என் நன்றியைக் காணிக்கையாக்கி நிற்பதில் பெருமை அடைகிறேன். இவ் வரிசை நூல்களை வெளியிட அனுமதி தந்த என் அன்னைக்கோயிலுக்கு மீண்டும் என் நன்றி.

புத்தம் புதிய கலைகளுக்கும் ஆய்வு எண்ணங்களுக்கும் ஆராய்ச்சி உணர்வுகளுக்கும் தமிழகத்தில் என்றுமே வரவேற்பும் வாழ்வும் உண்டு என்பதற்கு என் அனுபவமே சான்றாக நிற்கும். என்னால் எழுதப்பட்ட அத்தனை நூல்களுக்கும் தமிழகம் தந்த ஆசியும் ஆதரவும் மறக்க முடியாதன. இந் நிலையில் இவ்வரிசை நூல்களுக்கும் உங்கள் அன்பும் ஆசியும் என்றும் உண்டு என்ற நம்பிக்கையில் இவற்றை உங்கள் முன் சமர்ப்பிப்பதில் பெருமையோடு பெருமகிழ்ச்சியும் அடைகிறேன்.

வினையெச்சங்கள் பற்றி அதிலும் குறிப்பாகக் காலவெச்சம்பற்றிப் பலவேறு அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். தொல்காப்பிய உரையாசிரியர்கள் மட்டுமன்றிப் போப் (1855), ஆர்டன் (1969 மறுபதிப்பு), லிண்ட். ஹோம் (1975), போன்ற மேனாட்டு அறிஞர்களும் மீனாட்சிசுந்தரம் (1945), இசரயேல் (1973) அண்ணாமலை, நடராஜன் (1976), முத்துச்சண்முகன் (1977, (1970), சித்திரபுத்திரன் (1983) சண்முகம் (1978, 1984), மாதையன் (1978), கோதண்டராமன் (1978), வேணுகோபால் (1984) போன்றவர்கள் காலவெச்சம் பற்றிப் பலவேறு கோணங்களில் ஆராய்ந்துள்ளனர். இவர்களின் ஆராய்ச்சிகள் அனைத்தும் வினையெச்சங்களின் பலவேறு பண்புகளைக் காட்டுவனவாக உள்ளன. இவை அனைத்தும் இந்நூலின்கண் கூறப்படும் செய்திகளுக்குப் பல வழிகளில் உதவுவனவாக உள்ளன.

பொதுவாக வினையெச்சம், அதிலும் குறிப்பாகக் காலவெச்சம் தமிழ் இலக்கணக் கூறுகளில் சிக்கல் நிறைந்த ஒரு கூறு என்பது குறிப்பிடத்தக்கது. முடிந்த முடிவாகக் கூறப்பட முடியாத அளவுக்குச் சிக்கல் நிறைந்து காணப்படும் நிலையில் இது பற்றி மேலும் மேலும் ஆராய்தல் நலம் பயக்கும். பலவேறு கோணங்களில் இருந்து புதிய கொள்கைகளின் மூலம் ஆராய்தல் ஒரு தெளிவினைக் கொடுக்கும் என எண்ணலாம்

—o—

# சொற் சுருக்க அடைவு

| | |
|---|---|
| அகம் | அகநானூறு |
| இளம் | இளம்பூரணர் |
| எழுத்து | எழுத்ததிகாரம் |
| ஐங் | ஐங்குறுநூறு |
| கல் | கல்லாடனார் |
| கலி | கலித்தொகை |
| குறள் | திருக்குறள் |
| குறு | குறுந்தொகை |
| சிலம்பு | சிலப்பதிகாரம் |
| சிறு | சிறுபாணாற்றுப்படை |
| சூத் | சூத்திரம் |
| சேனா | சேனாவரையர் |
| சொல் | சொல்லதிகாரம் |
| திரு | திருமுருகாற்றுப்படை |
| தெய்வ | தெய்வச்சிலையார் |
| தொல் | தொல்காப்பியம் |
| நச் | நச்சினார்க்கினியர் |
| நற் | நற்றிணை |
| பட் | பட்டினப்பாலை |
| பத்து | பத்துப்பாட்டு |
| பதி | பதிற்றுப்பத்து |
| பரி | பரிபாடல் |
| பொருள் | பொருளதிகாரம் |
| மணி | மணிமேகலை |
| மதுரை | மதுரைக்காஞ்சி |
| மலை | மலைபடுகடாம் |

# உள்ளுறை

# 1

# வினையெச்சம்

## 1.1 வினைச்சொல்லின் இடம்

தமிழ் இலக்கண உலகில் வினைச்சொற்களின் பங்கு மிக முக்கியமானதாகும். பொதுவாகத் தமிழ் மொழியில் காணப்படும் வாக்கியங்களை எடுத்து ஆராயின் மிகப் பெரும்பாலானவை வினைச்சொற்களைக் கொண்டே காணப்படுகின்றன. இந்நிலையில்தான் வினைச் சொற்கள் முக்கியமான ஒரு சொல்வகையாகக் கருதப்படுகின்றன. இவ்வினைச்சொற்களும் பல வேறு உருவங்களில் வாக்கியங்களில் வரக் காணலாம். முற்றுவினையாகவும், எச்சவினையாகவும், தொழில்பெயராகவும் இன்னும் பலவேறு உருவங்களிலும் இது வருதல் உண்டு.

*கண்ணன் வந்தான்*

என்பதில் முற்றுவினையைக் காண்கிறோம். ஆனால்

*கண்ணன் உண்டு வந்தான்*
*கண்ணன் உண்ண வந்தான்*

போன்றவற்றில் எச்சவினையைக் காண்கிறோம். இதே போன்றுதான்

*கண்ணன் வந்தால் நான் வருவேன்*
*கண்ணன் வந்தாலும் நான் வருவேன்*

போன்ற வாக்கியங்களிலும் வேறு சில வினை உருவங்களைக் காணுகிறோம். இவை அனைத்தும் வினைச்சொற்களின் வெவ்வேறு உருவங்களே ஆகும்.

பொதுவாக மரபிலக்கண அறிஞர்கள் உண்டு, வந்தால் போன்றவற்றை வினையெச்சம் என்றே குறிப்பிட்டுச் செல்வர். தொல்காப்பியர்

> "செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" சூத். 713

எனக் கூறுவதும், நன்னூலார்

> "செய்து செய்பு செய்யாச் செய்யூச்
> செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
> வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
> ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்" நன்.343

எனக் கூறுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

வினையெச்சம்,பெயரெச்சம் என நாம் இன்று குறிப்பிடுவன வற்றைக் குறிக்க வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சு கிளவி என்ற சொற்களைத் தொல்காப்பியர் பல இடங்களில் பயன் படுத்திய போதிலும் எச்சம் என்ற சொல்லையும் ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளமை இங்கு நினைவுகூரத்தக்கது.

## 1.2 எச்சம் என்ற சொல்

வினையெச்சம் பற்றிக் கூறும் வினையியலிலேயே எச்சம் என்ற சொல் பயன்படுவது இங்கு உணரத்தக்கது. செய்து, செய்யூ, செய்பு ஆகிய மூன்று எச்சங்களும் எவ்வாறு முடியும் எனக் குறிப்பிட்டுவிட்டுத் தொடர்ந்து

"ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்
தாமியல் மருங்கின் முடியும் என்ப" சூத். 717

என்ற சூத்திரத்தில் இவற்றை எச்சம் எனக் குறிப்பிடுதல் காணலாம். இதே போன்று பின்னர் "தத்தம் எச்சம்" எனக் குறிப்பிடுவார் அவர்.

"தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்" சூத். 722

என்பது சூத்திரம்.

மேலும் செய்தென் எச்சம் எனக் குறிப்பிட்டுக் கூறுதலும் காணத்தக்கது.

"செய்தெ னெச்சத் திறந்த காலம்
எய்திட னுடைத்தே வாராக் காலம்" சூத். 724

எனினும் இச் சூத்திரங்களுக்கு முன்னரும் பின்னரும் பல இடங்களில் பெயரெஞ்சு கிளவி, வினையெஞ்சு கிளவி என்ற சொற்களையே மிக அதிகமாகப் பயன்படுத்தியுள்ளார் தொல்காப்பியர்.

## 1.2.1 இருபொருள்

1. எச்சம் என்ற சொல்லையே இவர் இரு பொருள்களில் பயன்படுத்துதல் காணலாம். "ஒன்றை ஒழிபாக உள்ளது அல்லது கொண்டு முடிவது" என்ற பொருளில் இச்சொல் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. வினையெச்சம், பெயரெச்சம் போன்றவற்றில் எச்சம் என்ற சொல் இப்பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. வினையெச்சம வினைச் சொற்களைக் கொண்டு முடிதலின் வினையெச்சம் எனவும், பெயரெச்சம் பெயர்ச்சொற்களைக் கொண்டு முடிதலின் பெய

ரெச்சம் எனவும் இவற்றைப் போன்றே பிரிநிலை எச்சம் போன்றவை அவற்றை உணர்த்தும் சொற்களைக் கொண்டு முடிகின்ற நிலையில் எச்சங்கள் எனவும் கருதப்பட்டன என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

> ''வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
> நினையத் தோன்றிய முடிபா கும்மே
> ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே" சூத். 432

என்ற சூத்திரத்திற்குப் பொருள் எழுதப் போந்த சேனாவரையர்

"வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையுங் குறிப்புவினையும் ...... முடிபாம்." (சேனா. 432) எனக் கூறுவது இதனை வலியுறுத்தும்.

இதைப் போன்றே பெயரெச்சம் பெயரைக் கொண்டு முடிவதும், 'தானே கொண்டான்' என்ற ஏகாரப் பிரிநிலை எச்சம் 'பிறர் கொண்டிலர்' எனப் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லால் முடிவதும் காண்க.

2. எச்சம் என்றே சொல்லே இன்னொரு பொருளிலும் பயன்பட்டிருக்கக் காணலாம். எச்சவியல் என்ற சொல்லிற்குப் பொருள் எழுதப்போந்த சேனாவரையர் ''கிளவியாக்கமுதலாக உரியியலிறுதியாகக் கிடந்த ஓத்துக்களுள் உணர்த்துதற்கு இடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சி நின்ற சொல்லி லக்கணமெலலாந் தொகுத்துணர்த்திய வெடுத்துக்கொண்டார்" (397) எனக் கூறும்போது ''எஞ்சியவை'' அல்லது ''மீதி உள்ளவை'' என்ற பொருளிலும் வந்துள்ளமை காணலாம்.

### 1.2.2 எது எச்சம்?

செய்து, செய்யூ போன்றவை வினையை ஒழிபாகக் கொண்டிருத்தலின் இவையே வினையெச்சமாகக் கொள்ளத் தக்கன என்பது விளங்கும். எனினும் சில நேரங்களில் மயக்க நிலையும் உரையாசிரியர்களிடையே இருப்பதைக் காணலாம்.

"தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்" சூத்.237

என்ற சூத்திரத்திற்கு உரை எழுதப் போந்த சேனாவரையர் "தத்தமெச்சமாகிய வினையோடும் பெயரோடும் ..." (237) எனக் கூறுவது ஊன்றி உணரத்தக்கது. வரும் வினையும் பெயரும் எச்சமாகக் குறிப்பிடப்படுகின்றன. இந்நிலையில் பெயரையும் வினையையும் ஒழிபாகக் கொண்ட வந்த, வந்து போன்றவை எச்சமாகக் கருதப்படுவது மட்டுமின்றி வரும் பெயரும் வினையும் கூட எச்சமாகக் கருதப்படுகின்றன. ஒன்றை எஞ்சி நிற்பதும் (வந்து, வந்த) முடிக்கும் சொல்லாக நிற்பதும் (உண்டான் பையன்) எச்சமாகக் கருதப்படுகின்றன.

இதே நிலையைத்தான் நச்சினார்க்கினியரிடமும் காண்கிறோம். சேனாவரையரை அப்படியே பின்பற்றி "தத்தம் எச்சமாகிய வினையொடும் பெயரொடும். ..."(239) எனக் கூறி நிற்பார். தெய்வச்சிலையார் எச்சம் என்பதற்கு முடிக்குஞ் சொல் எனப் பொருள் கூறிப் "பெயரெச்சமும் வினையெச்சமும் தம்மை முடிக்குஞ் சொல்லோடு" (230, எனக் கூறி நிற்பார். இங்கும் எச்சம் என்பது முடிக்குஞ் சொல்லாகிய பெயரையும் வினையையுமே குறித்து நிற்கிறது.

எனவே எச்சம் என்பது முடிவதற்காக எஞ்சி நிற்பதையும் முடிக்கும் சொல்லாக வருவதையும் சுட்டும் என எண்ணலாம் எனினும் முடிவதற்காக நிற்கும் வந்து, வந்த, போன்றவைகளே வினையெச்சங்களாகவும் பெயரெச்சங்களாகவும் கருதத் தக்கவை.

"செய்தெ னெச்சத் திறந்தகாலம்"

என்ற தொடர் இதனை வலியுறுத்தும். இதனால்தான் வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சு கிளவி என்ற சொற்களைத் தொல்காப்பியர் கையாண்டார் போலும்.

## 1 2.3 இலக்கண உலகில்

இலக்கண உலகில் எச்சம் என்ற சொல் கொண்டு முடிவது அல்லது ஒழிபாக உள்ளது என்ற பொருளிலேயே வழங்கக் காணலாம். தொல்காப்பியர் காலத்தில் பெயரெஞ்சு கிளவி, வினையெஞ்சுகிளவி என்ற கலைச்சொற்களே பெரும் பாலும் பயன்பட்டாலும் எச்சம் என்ற சொல்லும் வழக்கில் இருந்துள்ளது என்பது முன்னர் கூறப்பட்டது. ஆனால் பிற்கால இலக்கண ஆசிரியர்கள் இவற்றை வினையெச்சம், பெய ரெச்சம் என்றே குறித்துச் செல்லுகின்றனர். இதே நிலையினைத் தான் தொல்காப்பிய உரையாசிரியர்களிடமும் காணுகிறோம். வினையெஞ்சு கிளவி என்பதற்கு வினையெச்சம் என்றும், பெய ரெஞ்சுகிளவி என்பதற்குப் பெயரெச்சம் என்றும் குறித்துச் செல்லுகின்றனர். "செய்தென்பது முதலாகச் சொல்லப்பட்ட ஒன்பதும் வினையெச்சமாம்'' என்பது சேனாவரையம் (228).

## 1.2.4 எஞ்சு பொருட் கிளவி

மேலும் "எஞ்சு பொருட்கிளவி" என்பதும் எச்சம் என்ற பொருளில் பயன்பட்டிருத்தல் காணலாம். எச்சவியலில் பலவேறு எச்சங்களைப் பற்றிக் கூறும்போது.

"பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சு பொருட்கிளவி"
சூத். 913

எனக் குறிப்பிடுவார் தொல்காப்பியர். இச்சூத்திரத்தில் சொல்லப்படும பத்தும் எஞ்சுபொருட் கிளவிகளாகும். உரை எழுதும் சேனாவரையர் "எஞ்சு பொருட் கிளவி யெனினும் எசசமெனினு மொக்கும்" (430) எனக் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. நச்சினார்க்கினியர் இவற்றை ' எச்சச் சொல்" என்பார் (430).

இன்றைய வழக்கில் எச்சம் என்ற சொல்லே நிலைபெற்றிருத்தல் காணலாம். இந்நிலையில்தான் இங்கும் பெயரெச்சம், வினையெச்சம் என்ற சொற்கள் கையாளப்படுகின்றன.

### 1.3 தொல்காப்பியமும் வினையெச்சமும்

வினையெச்சம் பற்றிக் கூறப் போந்த தொல்காப்பியர் வினையியலின்கண் இதுபற்றிப் பரக்கப் பேசுதல் காணலாம். பல நூற்பாக்களில் (707, 710, 713-718, 722, 724) வினையெச்சம் பற்றிப் பேசும் தொல்காப்பியர் வினையெச்சம் விரவு வினைகளில் ஒன்று என்று கூறி நிற்பார்.

> "முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
> இன்மை செப்பல் வேறென் கிளவி
> செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
> அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
> பிரிவுவேறு படூஉஞ் செய்திய வாகி
> இருதிணைச் சொற்குமோர் அன்ன உரிமைய"
> சூத். 707

என்னும் சூத்திரத்தில் இதனை விரவுவினை என்பார். பின்னர்

> "செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" சூத். 713

எனக் குறிப்பிட்டு வினையெச்ச வாய்பாடுகளைத் தந்து நிற்பார்.

இதுபோன்றே

> "பின் முன் கால் கடை வழி இடத்து என்னும்
> அன்ன மரபின் காலங் கண்ணிய
> என்ன கிளவியும் அவற்றியல் பினவே" சூத். 714

என்ற சூத்திரத்திலும் வேறொரு வகையான வினையெச்சங் களைக் குறிப்பிடுவார் எனப் பலர் கருதுகின்றனர். இவை மட்டுமின்றி எழுத்தியலில் செய்யா எனும் வாய்பாட்டு வினை யெச்சம் பற்றியும் 222, வேறு இரு நூற்பாக்களையும் (236, 237) காணலாம். இன்னும் வினையெச்சம் பற்றிப் பேசும் நூற்பாக் கள் சில எச்சவியலின் கண்ணும் உள்ளன (913, 915, 940). தெய்வச்சிலையார் இவற்றை வினையியலில் அடக்கி நிற்பார். இந் நிலையில் தொல்காப்பியர் பதினைந்துக்கும் அதிகமான நூற்பாக்களில் வினையெச்சங்களைப் பற்றிக் குறிப்பிடுவ தாகக்கருதலாம்.

### 1.3 1 வினையெஞ்சு கிளவி

தொல்காப்பியர் இக்குறிப்பிட்ட இலக்கணக் கூறினைப் பொதுவாக வினையெஞ்சுகிளவி என்றே குறிப்பிடுகிறார் எனக் கருதலாம். எழுத்ததிகாரத்தில் ஆறு இடங்களிலும் (204, 210, 222, 236, 237, 265) சொல்லதிகாரத்தில் ஏழு இடங்களிலும் (707, 713, 718, 721, 913, 915, 940) இச்சொல் வரக் காணுகிறோம். இவ்விடங்கள் அனைத்திலும் வினையெச் சத்தையே இவர் வினையெஞ்சுகிளவி எனக் குறிப்பிட்டுச் செலலுகிறார் எனக் கருத இடமுண்டு. இன்று நாம் வினை யெச்சம் என்று குறிப்பிடுவதைத்தான் தொல்காப்பியர் வினை யெஞ்சுகிளவி என்று குறிப்பிட்டுச் சென்றார்.

வினையெச்சம் என்ற சொலலே இன்று இலக்கண உலகில் பயன்படுதலைக் காணலாம். எனினும் தொல்காப்பியரே எச்சம் என்ற சொல்லினைப் பயன்படுத்தியுள்ளார் என்பது முன்னரே தெளிவாகக் காட்டப் பட்டது. இந்நிலையில்தான் இங்கும் வினையெச்சம் என்ற சொல் கையாளப்படுகிறது.

### 1.4 விளக்கம்

வினையெச்சம் என்றால் என்ன என்பதை விளக்கும் இலக்கண ஆசிரியர்கள் வினையினைக் கொண்டு முடிவதே வினையெச்சம் எனக் குறிப்பிட்டுச் செல்லுவர்.

இளம்பூரணர் "வினையை ஒழிபாக நிற்றலின் வினை யெச்சம் எனப்பட்டது" (சூத். 224) என்று கூறுவார். சேனா வரையரும் வேறொரு சூத்திரத்தில் "வினையெஞ்சு கிளவி வினையை யொழிபாகவுடைய வினை" (சூத். 222) என்பார் இவரைப் பின்பற்றி நச்சினார்க்கினியரும் (224) "வினையை ஒழிபாக உடைய வினைச்சொல்" எனக் கூறுவார். தெய்வச் சிலையார் 'வினையெச்சமாவது மற்றொரு வினைச்சொல்லோ டல்லது முற்றுப்பெறாது நிற்கும்" (222) எனத் தெளிவாகக் கூறி நிற்பார்.

தொல்காப்பியர் வினையெச்சத்தைப் பற்றிப் பல்வேறு நூற்பாக்களில் குறிப்பிட்டுச் சென்றாலும் பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பவணந்தியார் தம்முடைய நூலில்

"தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே" சூத் 342

என்ற நூற்பாவில் வினையெச்சம் என்றால் என்ன என்பதற்கு இலக்கணம் கூறிப் போந்தது போன்று தொல்காப்பியர் திட்ட வட்டமாக வரையறை செய்யவில்லை என்று பலர் (Ilakkuvanar 1946:122: 1963:336) கருதுவர்.

மேலும் வினையெஞ்சுகிளவி என்ற சொல்லாலேயே வினை யெச்சத்தின் விளக்கத்தைக் குறிப்பாகக் கூறியிருக்கிறார் என் பது அவ்வறிஞர்களின் முடிபாகும். வினையை எஞ்சி நிற்கும் அல்லது கொண்டு முடியும் சொல் என்ற பொருள் இதன்கண் அடங்கியிருப்பது உணரத்தக்கது. எனினும் தொல்காப்பியர் இக்குறியீட்டோடு அமையவில்லை என்பதும் நல்லதொரு விளக்கத்தைத் தந்துள்ளார் என்பதும் பின்னர் எடுத்துக் காட்டப்படும்.

### 1.4.1 வினைகொண்டு முடிவன எல்லாம் வினையெச்சமா?

வினைகொண்டு முடிகிற சொற்கள் அனைத்தும் வினை யெச்சம் அல்ல என்பதும் பெயர் கொண்டு முடிகிற சொற்கள்

எல்லாம் பெயரெச்சம் அல்ல என்பதும் உணரத்தக்கன. முன்னர் வேறு கட்டுரைகளில் குறிப்பிட்டபடி (அகத்தியலிங்கம் 1968, 1972) இனி, நன்கு, மேலும் போன்ற சொற்கள் வினையைக் கொண்டு முடிவனவே.

இனிச் செய்வான்
நன்கு உண்டான்
மேலும் தந்தான்

போன்ற வாக்கியங்கள் இப் பண்பினைக் காட்டும். தெய்வச்சிலையார் இவற்றையெல்லாம் வினையெச்சம் என்று குறிப்பிடினும் (223) இவற்றை வினையெச்சங்களாகக் கருத முடியாது. வினையோடு முடிகின்ற ஒரே காரணத்திற்காக இவற்றை வினையெச்சமாகக் கருதவேண்டிய ஒரு கட்டாய நிலைமை ஏற்படும். எனவே வினையெச்சத்தின் பண்பு வினையை மட்டும் கொண்டு முடிகின்ற ஒன்றாக இருக்க முடியாது.

## 1.4.2 வாய்பாடுகள்

இந்நிலையில் தொல்காப்பியர் வாய்பாடுகளாகக் கூறிய நிலையைப் பற்றி நன்குச் சிந்தித்தல் அவசியமாகும். இதைப் போன்றே நன்னூலார்

"தொழிலும் காலமுந் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே" சூத். 342

எனக் கூறிச் செல்லுவதையும் நன்கு ஆராய்தல் வேண்டும்.

தொல்காப்பியர் செய்து, செய்பு, செய்யூ போன்ற வாய்பாடுகளைத் தந்து வினையெச்சங்களின் அமைப்பினைக் கூறி அவற்றை வினையெச்சம் எனக் குறிப்பிடுகிறார். இந்த வாய்பாடுகளே வினையெச்சங்கள் எவை என்பதை நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றன. மேலும் எச்சவியலில் இவை வினைகொண்டு முடியுமென்றும் அவ்வினைகள் தெரிநிலை வினைக

ளாகவோ அல்லது குறிப்புவினைகளாகவோ இருக்கலா மென்றும் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

"வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே" சூத். 915

என எச்சவியலில் தொடரியல் அடிப்படையிலும், வாய்பாடுகள் தந்த நிலையில் சொல்லியல் அடிப்படையிலும் விளக்கம தருகிறார் அவர். இந்நிலையில் நன்னூலார் இவர் கூறியதைவிட மிகுதியாக எதையும் சொல்லியிருப்பதாகக் கருத இடமில்லை.

## 1 5 கூட்டு வினையெச்சம் (Compound Verbal Participle)

மேலே கூறிய வாய்பாட்டுச் சொற்கள் மட்டுமின்றி 714-ஆவ்து நூற்பாவில் வேறு சிலவற்றையும் பற்றிக் குறிப்பிடு வார் தொல்காப்பியர்.

"பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே"

என்பது சூத்திரம். இதுபற்றி எழுதும் இளம்பூரணர் செய்து, செய்யூ என்று தொடங்கும் சூத்திரத்தினையும் இதனையும் இணைத்து "இச்சூத்திரம் என்நுதலிற்றோ வெனின், வினை யெச்சங்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று" எனக் குறிப்பிடுவார். இதே நிலையினைத்தான் சேனாவரையரிடமும் காண்கிறோம். இச்சூத்திரத்திற்கு உரை எழுதப் போந்த அவர் "பின்னும், முன்னும், காலும், கடை யும், வழியும், என்னுமீற்றவாய் வருவனவும், அவைபோலக் காலங் கண்ணி வருவன பிறவும், வினையெச்சமாம்" (சூத். 229) என்று கூறிச் செல்லுவார். அவைபோலக் காலங் கண்ணி வருவன என்பதற்குக் காலம் கண்ணிய சொற்களை உதாரண மாகத் தராமல் உண்பான், வருவான், உண்பாக்கு போன்ற வற்றைத் தருவது பொருத்தமாக இல்லை.

இதே நிலையைத்தான் இளம்பூரணரிடமும் காண்கிறோம். நச்சினார்க்கினியரும் இவரைப் பின்பற்றி இவை "வினையெச்சத்திற்கு வாய்பாடாம் இயல்புடைய" என்பார். கல்லாடனாரும், நச்சினார்க்கினியர் கூறியது போன்றே இவை "வினையெச்சத்திற்கு வாய்பாடாம் இயல்புடைய" (231) என்றே குறிப்பிடுவார். எனவே இவர்கள் அனைவரும் வந்தபின் போன்ற தொடர்கள் செய்து போன்றவற்றைப் போன்று வினையெச்சங்களே என்று கருதுகின்றனர் என்று எண்ணலாம்.

## 1.5.1 வினையெச்ச இயல்பின

ஆனால் தெய்வச்சிலையாரோ "பின் முதலாக ஓதப்பட்டனவும், அத்தன்மையாகிய மரபினாற் காலங் குறித்து வரும் எல்லாச் சொல்லும் வினையெச்ச இயல்பின" (சூத். 222) என்பார். எனவே தெய்வச்சிலையாருக்கும் பிற உரையாசிரியர்களுக்குமிடையே ஒரு வேறுபாட்டினைக் காண்கிறோம். பிற உரையாசிரியர்கள் எல்லாம் இவற்றை வினையெச்சமாகவே கருத, தெய்வச்சிலையார் இவை வினையெச்சத்தைப் போன்று வருவன எனக் கருதுகிறார் என எண்ணலாம். இதனால் தான் அவர் மீண்டும் தெளிவாக "எனவே, மேற்சொல்லப் பட்டவற்றோடு ஒருநீர்மைய அல்ல என்பது பெறப்பட்டது" என்று கூறுவார்.

வினையெச்சம் பற்றி ஆராய்ந்த பல்வேறு ஆசிரியர்களும் இவற்றை வினையெச்சம் என்றே குறிப்பிட்டுச் செல்லுதல் இங்கு உணரத்தக்கது. அகத்தியலிங்கம் (1972) இதுபற்றிக் குறிப்பிடும்போது "714-ஆம் நூற்பாவும் வினையெச்சத்தைப் பற்றித்தான் பேசுகிறது" எனக் கூறுவது இங்குக் குறிப்பிடத் தக்கது. சண்முகம் இவற்றை "கூட்டுவினையெச்சங்கள் (Compound verpal participles)" என்பார் (1972). இது பற்றிக் கூறும் அவர்

"Tolkappiyar, in the Sutra 229, has mentioned that the particles like pin, mun, kaal, katai, vali, itattu and such

other items indicating time are of the same nature (i. e., verbal participle)"

எனக் கூறுவார்.

### 1.5.2 வேறுபாடுகள்

இந்நிலையில் பெரும்பான்மையான அறிஞர்கள் இவற்றை வினையெச்சமாகவே கொண்டுள்ளனர் எனக் கருதலாம். எனினும் இவற்றிற்கும் செய்து போன்ற வினையெச்சங்களுக்கும் இடையே வேற்றுமைகள் பல உண்டு. அமைப்பிலும், அவை தரும் பொருளிலும் வேறுபாடுகளைக் காணலாம். அமைப்பில் இவை இரண்டும் மாறுபட்டவை என்பது நன்குத் தெரியவரும்.

உரையாசிரியர்கள் அனைவரும் இதற்கு உதாரணம் தரும்போது,

> கூறிய பின்
> கூறுகின்ற பின்
> தின்னா முன்
> விடுத்தக்கால்
> நாடுங்கால்
> வந்தக்கடை
> உரைத்த வழி
> உரைக்கும் வழி
> உரைத்த விடத்து
> உரைக்குமிடத்து

போன்றவற்றையே தந்து நிற்பர். இவை அனைத்தும் பெயரெச்சத்தொடர்களையே கொண்டுள்ளமை இங்கு நினைவு கூரத் தக்கது. எனவே பெயரெச்சங்களை அடுத்துப் பின், முன் போன்றவை வரும் நிலையிலேயே அவை வினையெச்சமாகக் கருதப்படவேண்டியவை என எண்ணினர். ஆனால் இதனைத் தெளிவாக உரையாசிரியர்கள் யாரும் விளக்கவில்லை. எனினும் இவ்வாறு அவர்கள் இவ்வுதாரணங்களைத் தந்திருப்பது பொருத்தமாகவே தோன்றுகிறது.

### 1.5.3 அமைப்பு

வினையைக் கொண்டு முடிவன எல்லாம் வினையெச்சம் அல்ல என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. இந்நிலையில் காலத்தைக் காட்டக் கூடிய பின், முன் போன்றவையும் வினையெச்சம் அல்ல என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

பின் வந்தான்
முன் வந்தான்

போன்றவற்றை யாரும் வினையெச்சமாகக் கருதுவதில்லை. ஆனால்

வந்த பின்
போன பின்

போன்றவற்றை வினையெச்சமாகக் கருதலாம் என்பது பலரது எண்ணம் என்பது முன்னர்க் குறிப்பிடப்பட்டது. எனவே எச்சங்களின் அமைப்பும் (Structure மிக முக்கியமான இடத்தைப் பெறும் எனக் கருதலாம்.

வினையெச்சங்கள் எல்லாம் வினைச்சொல்லிலிருந்து உருவாவன. இதனால்தான் வினையெச்சங்களை வினையியலில் குறிப்பிட்டுச் செல்வார் தொல்காப்பியர். செய்து, செய்யூ போன்ற வினையெச்ச வாய்பாடுகள் அனைத்தும் வினைச் சொல்லிலிருந்து உருவானவை. ஆனால் பின், முன்போன்றவை இடைச்சொற்களே. அவை தனியாக நின்று வினைச்சொல்லை ஏற்று வரினும் அவை வினையெச்சமாகக் கருதப்படமாட்டா. ஆனால் காலத்தைக் காட்டக்கூடிய வினைகளோடு ஒரு சொல் நீர்மைத்தாய் நின்று வருமானால் அவற்றை வினையெச்சம் போன்று கருதலாம். அவற்றைத்தான் தொல்காப்பியர் இச்சூத்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார் என எண்ணலாம். இதனை வெளிப்படையாக உரையாசிரியர்கள் கூறாவிடினும் வினையெச்ச அமைப்பு எது எனத் தங்கள் நுண்மாண் நுழை புலத்தினால் நன்கு அறிந்திருந்த காரணத்தினால்தான் இத்தகைய உதாரணங்களைத் தந்து நின்றனர்.

இந்நிலையில் இத்தகைய வினையெச்சங்கள் ஒரு திட்ட வட்டமான அமைப்பைக் கொண்டவை எனக் கருதலாம். பெயரெச்சங்களையொட்டி பின், முன் போன்ற இடைச் சொற்கள் வந்து ஒரு சொல் நீர்மைத்தாய் நிற்பனவே வினை யெச்ச இயல்பினவாய் உள்ளவை எனக் கருதலாம்.

$$\text{பெயரெச்சம்} + \left\{ \begin{array}{l} \text{பின்} \\ \text{முன்} \\ \text{கால்} \\ \text{கடை} \\ \text{வழி} \\ \text{இடத்து} \end{array} \right\}$$

போன்றவை வினையெச்ச இயல்பினவாகும் (காண்க. 1.5.4).

### 1.5 4 'காலங்கண்ணிய'

இந்நிலையில் காலங்கண்ணிய என்பதற்குக் "காலத்தைக் காட்டக்கூடிய வினையுடன் இறுகக் கட்டிய அல்லது பிணைத்த" என்று பொருள் கூறுதல் பொருந்தும். காலத்தைக் காட்டும் வினை என்பது எச்சவினையை, அதிலும் பெயரெச்சத் தையே எனக் கொண்டு பெயரெச்சத்தோடு இறுகப்பிணைந்து வரும் பின், முன் போன்றவை எனப் பொருள் கூறுதல் பொருத்தமாகும்.* முன்னர்க் குறிப்பிட்டபடி உரையாசிரியர் கள் சரியான உதாரணங்களைத் தந்த போதிலும் பெயரெச் சங்களோடு பின், முன் போன்றவற்றை இறுகப்பிணைக்கும் போதுதான் இத்தகைய வினையெச்சங்கள் உண்டாகின்றன எனத் தெளிவாகக் கூறவில்லை.

மேலும் காலங் கண்ணிய என்பதற்குப் பொருத்தமான பொருளையும் தந்ததாகத் தெரியவில்லை.

இதற்கு உரை எழுதிய சேனாவரையர் "காலங் கண்ணி வருவனவும்" என எவ்வித விளக்கமும் இன்றிக் கூறிச் சென் றிருப்பதும், நச்சினார்க்கினியர் "அம் முறைமை போல

---

* வந்த நேரத்திற்குப் பின் போன்று வருவனவற்றை வினை யெச்சங்களாகக் கருதுவதில்லை. ஆகவே வந்த பின் போன்றவற்றையே இங்கு நாம் கொள்ளவேண்டும்.

காலத்தைக் குறித்த எல்லாச் சொற்களும்" எனவும், தெய்வச் சிலையார் "அத்தன்மையவாகிய மரபினாற் காலங் குறித்து வரும் எல்லாச் சொல்லும்" எனவும் குறிப்பிடுதல் இங்கு உணரத் தக்கன. இந்நிலையில் பின், முன் போன்றவை மட்டுமின்றிப் பிறவற்றையும் வினையெச்சங்களாகக் கொள்ளுதல் தகும் என்று இவர்கள் கருதியுள்ளனர். இதனால்தான் தெய்வச்சிலையார் (226) அன்ன மரபிற் கொள்ளப்படுவன ஆல், பான், இனி என வருவனவும் பிறவும் எனக் கருதுவதும் இங்கு உணரத்தக்கது. எனவே இவர் கருத்துப்படி இச்சூத்திரம் வந்தபின், போனபின் போன்றவற்றையும் காலங் கண்ணி நிற்கின்ற அல்லது காலத்தைக் காட்டும் இனி போன்றவற்றையும் குறிக்கும். இதனால்

இனிக் கொண்டான்
நனி வந்தான்

போன்றவற்றைத் தெய்வச்சிலையார் உதாரணமாகத் தருவார். ஆனால் புதிய விளக்கத்தின்படி இச்சூத்திரம் பெயரெச்சத்தோடு ஒருசொல் நீர்மைத்தாய் நிற்கின்ற

வந்த பின்
போன பின்

போன்றவற்றையே குறிக்கும். இனி, நனி போன்றவை வினையெச்சங்கள் அல்ல என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது. காலங் கண்ணிய என்பதற்குக் காலத்தைக் காட்டும் சொற்கள் எனப் பொருள் கொண்டமையால் இத்தகைய தவறுகள் நேர்ந்தன எனக் கருலாம்.

காலங் கண்ணிய என்பதற்குக் காலங் காட்டும் எனப் பொருள் கொண்டமையால்தான் சேனாவரையர்

நீர் பொய் கூறிய பின் மெய் கூறுவார் யார்
நீ யில்வாறு கூறுகின்ற பின் உரைப்ப துண்டோ

ஆகியவை இறப்பும் நிகழ்வும் பற்றி வந்தவை என்றும்

மருந்து தின்னாமுன் நோய் தீர்ந்தது

என்பது இறந்தகாலம் பற்றி வந்தது என்றும் இன்னோரன்ன எடுத்துக்காட்டுக்களையும் தந்து காலங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து இவை இன்னின்ன காலங்களைக் காட்டும் எனக் கூறிச் செல்லுகிறார். இவர் கருத்துப்படி காலங் கண்ணிய என்பது காலத்தைக் காட்டும், வந்தபின், போன பின் போன்ற வையே வினையெச்சங்களாகக் கருதத் தக்கவை என்பதாகும்.

நின்றவிடத்து நின்றான்

போன்றவற்றில் வரும் இடத்து போன்றவை பெயர் என்பதும் இந்நிலையில் இவை பெயரெச்சம் + பெயர் எனக் கொள்ளப் படுமேயன்றி இடைச்சொற்களாகக் கொள்ளப்படா என்றும் இவை ஒரு சொல் நீர்மைத்தாய் இல்லை என்பதும் உணரத் தக்கன. இதுபற்றிப் பின்னர்க் காண்போம்.

மேலும் இவர் கூதிர் போய பின் வந்தான் என்பது காலம் கண்ணாது எனக் கூறுவது பொருத்தமாக இல்லை.

பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனாரும் (1965 : 82) காலங் கண்ணிய கிளவி என்பது பின், முன் போன்றவற்றைக் குறிப்பது என்றே கொள்ளுகிறார்.

பின், முன் என்பவை இடத்தைக் குறிக்காமல் காலத் தைக் குறிக்கும்போது அவை வினையெச்சங்களாம் என உரை யாசிரியர்கள் விளக்கம் கூறிச் செல்கின்றனர்.

10 மணிக்குப் பின்
இரவுக்குப் பின்
10 மணிக்கு முன்

போன்றவற்றில் வரும் பின், முன் போன்றவை காலத்தைக் குறிப்பனவே. எனினும் இவற்றை யாரும் வினையெச்சமாகக் கொள்ளுவதில்லை. இவற்றைப் போன்றே

அவன் வந்ததற்குப் பின்
அவன் வருவதற்கு முன்

போன்றவையும் காலத்தைக் குறிப்பனவே. இவற்றையும் நாம் வினையெச்சமாகக் கொள்ளுவதில்லை. இந்நிலையில் பெய

ரெச்சத்திற்குப் பின்னர் வரும் பின், முன், கால், கடை, வழி போன்றவை மட்டுமே வினையெச்சங்களாக வரத்தக்கன எனக்கொள்ளுவதில் தவறில்லை. பின், முன் போன்றவை காலத்தைக் காட்டுவனவே. எனினும் தொல்காப்பியர் இவற்றைக் குறிக்கும் பொருட்டு காலங் கண்ணிய என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை என்பதும், பெயரெச்சத்தைக் குறிக்கவே இதனைப் பயன்படுத்தினார் என்பதும் தெளிவாகும்.

### 1.5.5 பெயரெச்சமும் இடப் பொருளும்

அடுத்துப் பெயரெச்சத்தின் பின் இக்கிளவிகள் வரும்போது இடத்தைக் குறிக்குமா என்றும் ஆராய்தல் நலம்.

வந்த வழி
வந்த இடம்

போன்றவை இடப்பொருளைத் தருவனவே. வழி, இடம் போன்றவை பெயர்ச்சொல்லாக வருவனவே தவிர பின், முன், போன்று வருவதில்லை. இந்நிலையில் இவற்றைப் பெயரெச்சத்துடன் வரும் பெயராகக் கொள்ள வேண்டுமே அன்றி வினையெச்சமாகக் கொள்ளுதல் கூடாது. மேலும் இவற்றிற்கு வினையெச்சத்தில் காணப்படுவது போன்று 'ஒரு சொல் நீர்மைத்தாய் நிற்கும் தகுதியும் இல்லை. இவற்றை,

வந்த அவ்வழி
வந்த பெருவழி

போன்று இடையே வேறு சொற்களை இட்டுக் கூறுதல் அத்தனை கடினமன்று. இந்நிலையில் இடப்பொருள் உணர்த்தும் இச்சொற்கள் வினையெச்சமாக ஆக முடியாது. எனவே காலங்கண்ணி ஒரு சொல் நீர்மைத்தாய் நிற்றல் வினையெச்சத்திற்கு உரிய ஒரு பண்பாகும்.

### 1.6 வான், பான் ஈற்று எச்சங்கள்

தமிழ் இலக்கிய உலகில் தொல்காப்பியர் குறிப்பிட்டுச் சென்ற வாய்பாடுகள் மட்டுமின்றி உண்பான், செய்வான் போன்ற வாய்பாட்டு வினையெச்சங்களையும் காணலாம். இவ்வாய்பாட்டு வினையெச்சங்களைப் பற்றித் தொல்காப்பியர்

குறிப்பிடவில்லையே என்ற எண்ணம் சேனாவரையர் போன்ற உரையாசிரியர்களுக்கு எழுந்த நிலையில்தான் அவற்றையும் இச்சூத்திரத்தில் அடக்க எண்ணினர்.

சேனாவரையர்

"அன்ன மரபிற் காலங் கண்ணிய என்ன கிளவியும் என்றதனால் உண்பாக்கு, வேபாக்கு என வரும் பாக்கீறும், உண்பான், வருவான் என ஆனீறும்......"
எனவரும் எனக் குறிப்பிடுவார். நச்சினார்க்கினியரும்

"அன்ன மரபின் என்றதனால் பான், பாக்கு, வான், வாக்கு என்பனவுங் கொள்க" (231)
எனக் கூறுவார்.

சங்க இலக்கியங்களை ஆராயின் வான், பான், ஈற்று வினையெச்சங்கள் மிக மிகக் குறைவாகவே வருகின்றன. நற்றிணை (1) கலித்தொகை (2) பரிபாடல் (2) சிலப்பதிகாரம் (1) ஆகிய நூல்களில் எல்லாம் மொத்தம் ஆறு இடங்களிலேயே இவை வருகின்றன. முன்பழந்தமிழ் நூல்கள் எனக் கருதப்படும் நூல்களில், அதாவது பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானாறு. நற்றிணை, குறுந்தொகை, புறம், பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் ஒரே ஒரு இடத்தில்தான் வானீற்று எச்சம் காணப்படுகிறது. இந்நிலையில் தொல்காப்பியர் இது பற்றிக் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று கருதுவது பொருந்தாத ஒன்றாகும். இதனால்தான் தொல்காப்பியர் இவை பற்றிக் குறிப்பிடவில்லை. எனினும் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் ஆகிய உரையாசிரியர்கள் அனைவருமே இவ்வாறு என்ன கிளவியும் என்றதனால் இவையும் வரும் என்று குறிப்பிட்டுச் செல்லுதல் பொருந்தாது.

பானீற்று வினையெச்சத்திற்கு இளம்பூரணர்

உண்பான் வந்தான்

எனவும், சேனாவரையர்

உண்பான் வருவான்

எனவும், நச்சினார்க்கினியர்

"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலும் குற்றம்"

என்பதையும், தெய்வச்சிலையார் நச்சினார்க்கினியர் தந்த உதாரணத்தையும், கல்லாடர்

உண்பான் வந்தான்

என்பதையும் உதாரணமாகத் தருவர்.

இளம்பூரணரும், தெய்வச்சிலையாரும் பானீற்று எச்சங்களை மட்டும் குறிப்பிட்டுச் செல்ல, சேனாவரையரும் நச்சினார்க்கினியரும், கல்லாடனாரும் பான், வான் என இரு ஈற்று எச்சங்களையும் குறிப்பிடுவர். இவற்றிற்கு, உதாரணமாகச் சேனாவரையர்

வருவான்

என்பதையும், நச்சினார்க்கினியர்

'கொள்வான் கொடித்தானைக் கொண்டெழுந்தான்'

என்பதையும், கல்லாடர்

கொள்வான் வந்தான்

என்பதையும் தருவர்.

முன்னர்க் குறிப்பிட்டபடி சங்ககால இலக்கியங்களில் இவ்வெச்சம் மிகமிகக் குறைவாகவே வந்துள்ளது.

> "..................... தமியே
> குழைவான் கண்ணிடத்து ஈண்டித் தண்ணென
> வாடிய இளமழைப் பின்றை
> வாடையுங் கண்டிரோ வந்துநின் றதுவே" நற் 229-9

> "........... ஓர் பொன்னங் கொம்பு
> பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள்"
> பரி 7-57

"கன்னியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய வீகைப் பயன்கொள்வீர் ஊர்டலால்"
பரி 16-51

"ஏதமன் றெல்லை வருவான் விடு" கலி 113-13

துறைமேய் வலம்புரி மணல் உழுத
தோற்ற மாய்வான்
பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து நுண்டாது
போர்க்குங் கானல்" சிலம்பு 7-8-1

"காண்பான் யான் தங்கினேன்" கலி 97-7

என ஆறு இடங்களில் இவ்வீற்று எச்சங்கள் வருதல் இங்குக் குறிப்பிடத்தக்கது.

1.6.1. ஆன் ஈறா?

இவ்வெச்சங்கள் பற்றிக் குறிப்பிடும்போது சேனாவரையர்

"உண்பான், வருவான் என்னும் ஆனீறும்"

எனக் குறிப்பிடுவார். எனவே இவர் இவற்றைப் பான் ஈறு, வான் ஈறு என எண்ணாமல் ஆன் ஈறு எனவே எண்ணி உள்ளார் என்பது விளங்கும். ஆனால் நச்சினார்க்கினியரோ இவற்றைப் பான், வான் என்றே குறிப்பிடுவார். இதே நிலையைத்தான் கல்லாடனாரிடமும் காணுகிறோம்.

"என்ன கிளவியும் என்றதனால் பான், பாக்கு, வான் வாக்கு எனவும் பிறவானும் வருவன கொள்க" (231) என்பது கல்லாடம்.

நன்னூலாரும் இவற்றை வான், பான் என்றே குறிப்பிடுவார்.

"செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்" சூத். 343

என்பது நன்னூல். இதேநிலையைத்தான் வீரசோழியம் (67), நேமிநாதம் (43), இலக்கணவிளக்கம் (246), தொன்னூல் விளக்கம் (120), முத்துவீரியம் (130) ஆகிய நூல்களிலும் காணுகிறோம். இலக்கணிகள் எவரும் இவற்றை ஆனீறாகக் கொள்ளவில்லை.

சேனாவரையர் கருத்துப்படி இவற்றை ஆன் ஈறாகக் கொண்டால் பகர, வகரத்தைக் கால இடைநிலைகளாகக் கொள்ள வேண்டிய நிலை வரும். இவ்வெச்சங்கள் செயவென் வாய்பாட்டு எச்சத்தைப் போன்றவை. செயவென் எச்சத்தில் கால இடைநிலைகளை நாம் காண்பதில்லை. இதேநிலையைத் தான் செய்யிய, செய்யியர், ஆகிய வினையெச்சங்களிலும் காணுகிறோம். இந்நிலையில் இவற்றை ஆனீற்று எச்சம் என்று கொள்வது தவறாகும்.

மேலும் செய்ப, வருப போன்றவற்றை நாம் பகர இறுதியாகவே கொள்ளுகிறோம். (அகத்தியலிங்கம் 1984: 118-120 செ. வை. சண்முகம் (1978). இதைப்போன்றே மாரீற்று வினையெச்சத்தையும் மார் ஈறாகவே கொள்ளுகிறோம். (அகத்திய லிங்கம், 1984, 1985). இந்நிலையில் காண்பான், செய்வான் போன்றவற்றையும் ஆன் ஈறாகக் கொள்ளுதல் பொருந்தாது. இதனால்தான் சேனாவரையரைப் பெரும்பாலும் அடியொற்றிச் செல்லும் நச்சினார்க்கினியர் கூட இதனை வான், பான் ஈறாகவே கொண்டார்.

உண்பாக்கு, வேபாக்கு என்பவற்றைச் சேனாவரையர் பாக்கு ஈறாகவே கொண்டுள்ளாரே அன்றி "ஆக்கு" ஈறாக அவர் குறிப்பிடவில்லை. இந்நிலையில் உண்பான், வருவான் ஆகியவற்றைப் பான், வான் ஈறாகக்கொள்ளுவதே பொருத்தம்.

### 1.6.2 வானீறும், பானீறும்

மரபு இலக்கண அறிஞர்கள் இவற்றைக் தனித்தனி ஈறுகளாகக் கொண்டுள்ளனர். இவ்விரண்டு ஈறுகளும் துணை நிலை வழக்கில் வருவனவாகும். வல்வினை, இடைவினைகளில் (கொடு, அடி, எடு போன்றவை வல்வினைகள்; உண், காண் போன்றவை இடைவினைகள். அகத்தியலிங்கம் 1982:82)

பானீறு வர, மெல்வினைகளில் (செய், வா, தா போன்றவை) வானீறு வந்து நிற்கும். இந்நிலையில் இவற்றை மாற்றுருபு களாகக் கருதலாம்.

### 1.6.3 பாக்கு

வினையெச்சத்தைப் பற்றிப் பேசும் உரையாசிரியர்கள் இவை மட்டுமின்றி பாக்கு, வாக்கு ஆகிய ஈற்று எச்சங்களை யும் குறிப்பிடுவர்.

இளம்பூரணர்

உண்பாக்கு வந்தான்

என்பதை உதாரணமாகத் தந்து விளக்கம் எதுவும் கூறாமல் செல்லுவார்.

சேனாவரையர்

"அன்ன மரபிற் காலங் கண்ணிய வென்ன கிளவியு மென்றதனான் உண்பாக்கு, வேபாக்கு என வரும் பாக்கிறும்..."

என்வும், நச்சினார்க்கினியர்

"அன்ன மரபின் என்றதனால் பான், பாச்கு, வான், வாக்கு என்பனவுங் கொள்க"

எனவும் கூறுவர். கல்லாடனாரும் பாக்கு, வாக்கு என் இரண்டு ஈறுகளைப் பற்றியும் குறிப்பிடுவார். இவற்றிற்கு உதாரணம் கூறப்போந்த சேனாவரையர்

உண்பாக்கு, வேபாக்கு

என்பவற்றையும், நச்சினார்க்கினியர்

புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார்
கொள்வாக்கு வந்தான்

என்பவற்றையும், கல்லாடர்

உண்பாக்கு வந்தான்
கொள்வாக்கு வந்தான்

என்பவற்றையும் உதாரணமாகத் தருவர். உரையாசிரியர்கள் இத்தகைய உதாரணங்களைத் தரினும் பாக்கு, வாக்கு ஈற்று வினையெச்சங்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படுவ தில்லை. இதனால்தான் தொல்காப்பியர் இவற்றைக் குறிப் பிட்டுச் செல்லவில்லை.

மேலும் பாக்கு ஈற்று எச்சமே பிற்கால நூல்களில் காணப் படுகிறது போலும். இதனால்தான் சேனாவரையர் பாக்கு ஈறு மட்டுமே குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியரும் பாக்கு ஈற்று எச்சத்திற்குக் கார் நாற்பதிலிருந்து உதாரணம் தர வாக்கு ஈற்று எச்சத்திற்குத் தாமாகவே உதாரணத்தை உண்டாக்கிக் கொள்கிறார் (கொள்வாக்கு வந்தான்). கல்லாடனாரும் தாமே சமைத்த உதாரணங்களையே தந்து செல்லுகிறார்.

வினையெச்ச வாயபாடுகள் பற்றிப் பேசும் நன்னூலாரும் பாக்கீறு பற்றிப் பேசுவாரே ஒழிய வாக்கீறு பற்றிப் பேசுவ தில்லை. நன்னூலைப் பின்பற்றி இலக்கண விளக்கமும், தொன் நூல் விளக்கமும் பாக்கு பற்றிப் பேசுமேயன்றி வாக்கு பற்றிப் பேசுவதில்லை. தமிழ் இலக்கியப் பரப்பிலும் 'கொள்வாக்கு' போன்ற சொற்கள் வருவதில்லை என எண்ணலாம். நச்சினார்க் கினியர் தரும் தருபாக்கு என்பது மெல்வினை என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

## 1.7 எதிர்மறை

வினையெச்சங்கள் உடன்பாட்டில் மட்டுமன்றி எதிர்மறை யிலும் வருதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. இந்நிலையில்

செய்யாது, செய்யா, செய்யாமை, செய்யாமல் ஆகிய வாய்பாட்டுக் காலவெச்சங்களும் இவற்றோடு ஒப்பவைத்து எண்ணப்படற்பாலன. இதனால்தான் தொல்காப்பியர் வினையியலில்

"பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா"

எனக் கூறிப் போந்தார்.

இதற்கு உதாரணம் கூறப போந்த உரையாசிரியர்கள் பலரும் பலவேறு உதாரணங்களைத் தந்துள்ளனர்.

இளம்பூரணர் எதிர்மறை வினையெச்சங்களுக்கு

உண்ணாது வந்தான்

எனவும், சேனாவரையர்

உண்ணாது வந்தான்
உண்ணாமைக்குப் போனான்

என்பவற்றையும், நச்சினார்க்கினியர்

உண்ணாது
பெய்யாது
பெய்யாமல்

போன்றவற்றையும், தெய்வச்சிலையார்

உண்ணாது வந்தான்

மழை பெய்யாமையின் மரம் இறந்தன

என்வற்றையும், கல்லாடனார்

உண்ணாது வந்தான்
மழை பெய்யாமல் மரம் குழையாதாயிற்று.
மழை பெய்யாவிடின் அறம் பெறாது
உண்ணாமல்
உண்ணாமை
உண்ணாமே
உண்ணாதபின்
உண்ணாதமுன்
உண்ணாக்கால்
உண்ணாக்கடை
உண்ணாதவழி
உண்ணாதவிடத்து

போன்றவற்றையும் தந்து செல்வர்

சேனாவரையர் எதிர்மறை வினையெச்சங்களுக்கு உதாரணம் கூறும்போது,

உண்ணாமைக்குப் போயினான்

என்பதைத் தந்துள்ளார். இதுபோன்றே தெய்வச்சிலையாரும்

மழை பெய்யாமையின் மரம் இறந்தன

என்பதைத் தந்துள்ளார். உண்ணாமைக்கு, பெய்யாமையின் என்ற இரு சொற்களும் வினையெச்சங்களா என்பது ஆராய்தற்குரியது. செய்யாமை என்ற சொல் வினையெச்சமாகவும் வரும்.

செய்யாமை வந்தான்
காணாமை போனான்

போன்றவற்றில் வரும் செய்யாமை, காணாமை ஆகியவை வினையெச்சங்களே.

இவை முறையே

செய்யாமல் வந்தான்
காணாமல் போனான்

எனப் பொருள்படும். ஆனால் இவர்கள் காட்டும் உதாரணங்களோ இந்நிலையில் இல்லை. வேற்றுமை உருபுகளை ஏற்ற சொற்களாகவே இவை காணப்படுகின்றன. சேனாவரையர் தருவது குகர வேற்றுமை எடுத்த சொல்லாகவும், தெய்வச்சிலையார் தருவது இன் அல்லது ஐந்தாவது வேற்றுமை ஏற்ற சொல்லாகவும் காணப்படுகின்றன. இந்நிலையில் இவற்றை வினையெச்சங்களாகக் கருதமுடியாது.

சங்ககால இலக்கியங்களை நோக்கின் செய்யா, செய்யாது செய்யாமல், செய்யாமை ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்கள் வருதல் காணலாம். இறற்றுள் செய்யாது வாய்பாட்டு வினையெச்சமே மிக அதிகமாகக் காணப்படுகிறது. மட்டுமின்றிப் பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இது வந்து நிற்கும். இதனை அடுத்து செய்யாவாய்பாட்டு வினையெச்சம்

வருவது குறிப்பிடத்தக்கது. எனினும் இது மிகமிகக் குறைவாகவே உள்ளது. புறநானூற்றில் இரண்டும், அகநானூற்றில் எட்டும், குறுந்தொகையில் மூன்றும், ஐங்குறுநூற்றில் ஒன்றும், நற்றிணையில் இரண்டும், பரிபாடலில் ஒன்றும், கலித்தொகையில் இரண்டும், குறளில் பதினாறும், சிலம்பில் ஒன்றும் என்ற எண்ணிக்கையில் வந்துள்ளது. பதிற்றுப்பத்திலும், பத்துப் பாட்டிலும், மணிமேகலையிலும் இது காணப்படவில்லை.

இதைப் போன்றே மல் ஈற்று வாய்பாட்டுச் சொல்லும் மிகக் குறைவாகவே உள்ளது. முன்பழந்தமிழ் நூல்கள் பல வற்றில் இது காணப்படுவதில்லை. பத்துப்பாட்டில்தான் இது முதன்முதலாகக் காணப்படுகிறது.

-மை ஈற்றுச் சொல்லோ பழந்தமிழ் இலக்கியங்களில் ஐங்குறுநூறு, குறுந்தொகை ஒழிந்த நூல்களில் எல்லாம் ஆனால் மிகக் குறைவாகவே வந்துள்ளது.

எதிர்மறை வினையெச்சங்களை "அன்ன மரபிற் காலங் கண்ணிய" என்ற நிலையில் கொள்ளலாம் என்பது சேனா வரையர் கருத்து.

"எதிர்மறை பற்றிக் 'கூறாமற் குறித்ததன்மேற் செல் லும்' (கலி-க என வரும் மல்லீறும் 'கூறாமை நோக்கிக் குறிப் பறிவான்' (குறள்- எ.க) என்னும் மகர வைகார வீறுங் கொள்க" என்பது சேனாவரையம். ஆனால் இளம்பூரணரோ, அல்லது நச்சினார்க்கினியரோ, தெய்வச்சிலையாரோ, கல்லாடனாரோ இவ்வாறு கொள்வதில்லை. இவர்கள் எதிர்மறை வினையெச்சங்களை "எதிர்மறுத்து மொழியினும்" என்னும் சூத்திரத்தின் கீழேயே கொண்டுவருவர்.

## 1.8 வினையெச்சப்பாகுபாடு

வினையெச்சங்களையும் காலவெச்சம் **(Verbal participle)**, குறையெச்சம் **(Infinitive)**, நிபந்தனை எச்சம்**(Conditional)** என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முன்னர்க் குறிப்பிட்டபடி தொல்காப்பியர் இப் பிரிவு பற்றிக் குறிப்பிடவில்லை. வினை கொண்டு முடிகின்ற பண்பிலும், பிற பண்புகளிலும் ஒன்றாக்

வருகின்ற எல்லா வினையெச்சங்களையும் தொகுத்து வாய் பாடுகளாகக் குறிப்பிட்டுச் செல்லுகின்றாரேயன்றி இவற்றைப் பொருள் அடிப்படையிலோ, அல்லது பிற அடிப்படைகளிலோ பாகுபாடு செய்ததாகத் தெரியவில்லை.

தொல்காப்பியர் குறிப்பிடும் ஒன்பது வாய்பாடுகளில் செய்து, செய்பு, செய்யூ, செய்யியர், செய்யிய, செயின், செய ஆகிய ஏழு வாய்பாடுகளைப் பற்றி இவை வினையெச்சங்கள் தானா என்பதில் கருத்து வேறுபாடு இல்லை.

செய்தென என்பது செய்து + என என இரண்டாகப் பிரிக்கலாம் எனவும், எனவே இதனை ஒரு வினையெச்சமாகக் கொள்ளுவது அவ்வளவு பொருந்தமில்லை எனவும் கருதலாம். இதுபோன்றே செயற்கு என்பதும் வினையெச்சம் அல்ல என்பது அறிஞர்களுடைய கருத்தாகும். தொல்காப்பிய உரை யாசிரியர்கள் அனைவரும் இதனை வினையெச்சமாகவே கருதுவர். ஆனால் வினையெச்சம் அன்று என்பதே நம்முடைய கருத்தாகும்

இவை ஒழிந்த எஞ்சிய ஏழு வாய்பாட்டு எச்சங்களையும் பல பிரிவுகளாப் பிரிக்கலாம். செய்து, செய்யூ செய்பு ஆகிய வற்றையும், எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட செய்யா வாய்ப் பாட்டு வினையெச்சத்தையும் தனி ஒரு பிரிவாகப் பிரிக்கலாம். இவைஅனைத்தும் காலத்தைக் காட்டி நிற்பதால் இவை கால எச்சம் என அழைக்கப்படுகின்றன. இது பற்றிய விரிவான ஆராய்ச்சி பின்னர் மேற்கொள்ளப்படுகிறது.

செயற்கு என்பது வினையெச்சமா என்பதில் அறிஞர்க ளிடையே வேறுபாடு உண்டு. உரையாசிரியர்களே இதுபற்றி தடைவிடைகளை எழுப்பிநிற்பர். இதுபற்றிப் பின்னர் விரி வாகக் காண்போம்

இவற்றைப் போன்றே செய, செய்யிய, செய்யியர் ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்களும், மாரீற்று எச்சமும் இன் னொரு பிரிவாகக் கருதப்படுகின்றன. காட்டும் பொருள் களிலும் அமைப்பிலும் இவை அனைத்தும் ஒரே மாதிரியாகக்

கருதப்படுவதால் இவையும் தனி ஒரு பிரிவாகக் கொள்ளப்படு கின்றன. இந்நிலையில்தான் இவை குறையெச்சம் **(Infintive)** என அழைக்கப்படுகின்றன. இது பற்றியும் பின்னர் விரிவாகக் காணலாம். வான், பான் ஈற்று எச்சங்களும் இதன்பாற்படும்.

இவற்றைப் போன்றே செயின் வாய்பாட்டு வினையெச்ச மும் தனிப் பிரிவாகக் கருதப்படவேண்டிய ஒன்றாகும். இது நிபந்தனைப் பொருளைக் காட்டுவது இங்குக் குறிப்பிடத் தக்கது. இதனால்தான் இது நிபந்தனை எச்சம் என அழைக் கப்படுகிறது. இவ் வாய்பாட்டு எச்சம் மட்டுமின்றிச்செய்தால் வாய்பாட்டு எச்சமும் பிற வாய்பாட்டு எச்சங்களும் இதனுள் அடங்கும்.

# 2

# கால எச்சம்

## 2.1 விளக்கமும் வெவ்வேறு பெயர்களும்

வினையெச்சங்களில் காலஎச்சம் மிக முக்கியமானது. இவை கால இடைநிலைகளைக் கொண்டு காணப்படுவதால்தான் கால எச்சம் என இங்குக் குறிப்பிடப்படுகின்றன. செய்து, செய்பு செய்யூ, செய்யா ஆகிய உடன்பாட்டு வினையெச்சங்களும் இங்குக் கால எச்சம் எனப்படுகின்றன. தொல்காப்பியம் போன்ற மரபிலக்கணங்கள் பலவேறு உருபுகளைக்கொண்ட இவ்வெச்சங்களை இணைத்து ஒரு தலைப்பின் கீழ் குறிப்பிடாமல் செய்து, செய்பு போன்ற வாய்பாடுகளின் அடிப்படையில் குறிப்பிட்டுச் செல்கின்றன. எனினும் செய்யூ, செய்து, செய்யா ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்கள் ஒரே மாதிரியாகக் கருதப்படத்தக்கவை.

இவற்றின் அமைப்பு, காட்டும் காலம், பொருள் போன்றவற்றில் இவை ஒரே மாதிரியாகவே உள்ளன எனவே இவை மூன்றும் ஒரு உருபனாக உள்ளவை என்று முடிவு கட்டலாம்.

கண்டு வந்தான்
காணூ வந்தான்
காணா வந்தான்

போன்றவற்றில் இப்பண்பைக் காணலாம். இவை மூன்றும் ஒரே பொருளையே தந்துநிற்கின்றன. இந்நிலையில் இவற்றை ஒரே உருபனின் மாற்றுருபுகளாகக் கருதவேண்டும்.

தொல்காப்பியர் இவற்றை வேறுபடுத்திக் கூறியிருப்பினும் உரையாசிரியர்கள் ஒன்றாகக் கருதுவது போன்று தோன்று கின்றது. செய, செய்யிய, செய்யியர் போன்றவற்றை வேறு படுத்திக் காட்டுவது போன்று இவற்றை இவர்கள் காட்டுவ தில்லை. செய்து என்னும் வாய்பாட்டு எச்சமும் ஆடி, ஓடி போன்ற எச்சங்களும் ஒன்றே என்று கருதுவதும் மேலும் இவை இறந்தகாலம் காட்டும் என்று கூறுவதும் இவற்றைப் போன்றே செய்யூ வாய்பாட்டு எச்சமும் இறந்த காலம் காட்டும் என்று கூறுவதும் இந்நிலையை நன்கு விளக்கும்.

"ஊகாரம் உண்ணூஉ வந்தான், தின்னூஉ வந்தான், எனப் பின் வரும் தொழிற்கு இடையின்றி முன் வரும் தொழிலின் மேல் இறந்த காலம் பற்றிவரும்" எனக் கூறுவதும் மேலும் செய்யா என்னும் வாய்ப்பாட்டு எச்சத்தை இணைத்து,

"அஃது உண்ணா என ஆகாரமாயும் வரும்" எனச் சேனா வரையர் (229) கூறுவதும் இங்கு நினைவு கூரத்தக்கன.

செய்யூ வாய்பாட்டு எச்சமும் செய்யா வாய்பாட்டு எச்ச மும் ஒன்றே என்பதை வெளிப்படையாகக் குறிப்பிட்டுச் செல்லுவார் இவர். இவற்றைப் போன்றே எதிர்மறை வினை யெச்சங்கள் எனக் கருதப்படும் செய்யாது, செய்யாமல், செய் யாமை ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்களும் இவற்றினுள் அடங்குவனவாகும். இந்நிலையில்தான் இவையனைத்தும் ஒரே மாதிரியாகக் கருதப்படவேண்டியவை என முடிவு கட்டலாம்.

இவற்றைப் போன்றே செய்பு வாய்பாட்டு வினையெச்ச மும் காலவெச்சங்களில் ஒன்றாகக் கருதப்படத் தக்கது. பகரம் இறப்பில் காலத்தைக் காட்டுவது போலத் தோன்றும் காரணத் தால் இது கால எச்சமா என்ற ஐயம் எழுவது இயற்கையே. எனினும் இப்பகரம் காலம் எதையும் காட்டுவதில்லை. இதனால்தான் இதனைப் புகர ஈற்று வினை எச்சமாகக் கொள்ளுகிறோம். எவ்வாறு காண்பான், வருவான் போன்ற வற்றில் எச்ச விகுதிகளாகப் பான், வான் ஆகியவற்றைக் கொள்ளுகிறோமோ அதேபோன்று இதுவும் புகரவீறாகக்

கொள்ளப்படுகிறது. இந்நிலையில் இதனையும் காலவெச்சங் களில் ஒன்றாகக் கொள்ளுகிறோம். இதுபற்றிப் பின்னர் விரிவாகக் காணலாம்.

காலவெச்சம் பற்றிக் குறிப்பிட்டுச் சென்ற சில மேனாட்டு அறிஞர்களும் சில கீழை நாட்டு அறிஞர்களும் இவ்வினை யெச்சத்தின் தனித்தன்மையை நன்கு உணர்ந்திருந்தனர். மட்டு மன்றி இவற்றின் பல பண்புகளுக்கேற்பப் பலவேறு பெயர் களாலும் அழைத்துள்ளமை காணலாம். ஜான் லாசரஸ் (Lazarus 1878:128) சட்டர்ஜி (Chatterji 1926:863) போன்ற அறிஞர்கள் இதனை "adverbial participle" என அழைப்பர். போப் (G. U. Pope 1859:67), கால்டுவெல் (1857) போன்றோர் "verbal participle" எனக் கூறுவர். இன்னும் சிலர் (Linguistic Survey of India) இதனை "conjunctive participle' எனக் கூறுவர். இன்னும் சிலரோ (P. S. Subrahmanya Sastri 1934:187 இதனைப் பண்டைத் தமிழ் மரபிலக்கணப்படி "வினை யெச்சம்" என்றே குறிப்பிடுவர். இதுபற்றிப் பேசும் சாஸ்திரி செய்து, செய்பு, செய்யூ, செய்யாது ஆகியவற்றை இப்பெயருள் அடக்குவார். ஆனால் ஆங்கிலத்தில் எல்லா வினையெச்சங் களையும் இவர் "infinitive" என அழைப்பார் (1945 முதல் பதிப்பு. 1979 இரண்டாவது பதிப்பு).

## 2.2 கால எச்சங்களில் காலம்

இவ்வெச்சங்கள் அனைத்திலும் கால இடைநிலைகளைக் காணுகிறோம். செய்து, ஆடி போன்ற எச்சங்களில் வெளிப்ப டையாகக் கால இடைநிலைகள் உள்ளன. ஆனால் செய்யூ போன்றவற்றிலோ வெளிப்படையாகக் கால இடைநிலைகள் இல்லாவிடினும் பூஜ்ய (zero) இடைநிலை இருப்பதாகக் கொள்ளலாம். ஆனால் எதிர்மறை காட்டும் செய்யாமல் செய்யாது போன்றவற்றில் கால இடைநிலை இல்லையே என்ற எண்ணம் சிலருக்குத் தோன்றலாம். தமிழ்மொழியில் காணப் படும் வினைகள் காலம் காட்டும் உருபுகளையோ அல்லது எதிர்மறை காட்டும் உருபுகளையோ கொண்டிருக்குமேயன்றி இவ்விரண்டையும் கொண்டிருப்பதில்லை. இதனால்தான்

மொழியியல் அறிஞர்கள் வினைச்சொல்லின் அமைப்பைக் குறிப்பிடும்போது

வினை அடி + { காலம் / எதிர்மறை } + விகுதி

எனக் குறிப்பிடுகின்றனர். காலவெச்சங்களில் காலம் அல்லது, எதிர்மறையைக் காண்கிறோம். இரண்டையும் ஒரு சேரக் காண முடிவதில்லை.

வந்திலன்
செய்திலன்

போன்ற சொற்களில் இரண்டும் வந்திருப்பினும் இதனை

வந்து + இலன்

எனப் பிரித்து (அகத்தியலிங்கம், 1982:188) இரண்டு சொற்களாகவும் கருதலாம். எதிர்மறைச் சொற்கள் கால உருபை ஏற்காத நிலையில் குறிப்பிட்ட ஒரு காலத்தைக் காட்டும் பண்பு எதிர்மறைகளுக்கு இல்லை. இதனால்தான் ஒரே சொல் பல வேறு காலங்களைக் காட்டி நிற்கக் காண்கிறோம்.

வந்த, வருகிற, வரும் என்ற மூன்று காலப் பெயரெச்சங்களுக்கு இணையாக வராத என்ற எதிர்மறைச் சொல் ஒன்றே பயன்படக் காணுகிறோம்.

(1) நான் நேற்று வந்த பையனைக் கண்டேன்
நான் நேற்று வராத பையனைக் கண்டேன்

(2) இன்று வருகிற வண்டி
இன்று வராத வண்டி

(3) நாளை வரும் வண்டி
நாளை வராத வண்டி

வந்தவன்
வருகிறவன் } வராதவன்
வருபவன்

போன்றவற்றில் இப்பண்பைக் காணுகிறோம்.

கால எச்சங்கள் அனைத்தும் இறந்தகால இடைநிலை களைக் கொண்டிருந்தாலும் அவை கொண்டு முடியும் வினை கள் காட்டும் காலங்களுக்கு ஏற்பவே இறந்தகாலத்தைக் காட்டுவனவாக அமைகின்றன.

கண்ணன் உண்டு வந்தான்

என்பதிலுள்ள உண்டு என்னும் வினையெச்சம் இறந்த காலத் தைக் காட்டுவது உண்மையே. ஆனால்

கண்ணன் உண்டு வருவான்

என்பதில் காணப்படும் உண்டு என்ற சொல் இனி நடக்கும் உண்ணல் தொழிலையே காட்டிநிற்கிறது. ஆனால் வரும் தொழிலுக்கு முன்னால் நடைபெறும் தொழிலை உணர்த்தி நிற்கும். இந்நிலையில் கொண்டு முடியும் வினை காட்டும் தொழிலுக்கு முன்னால் வரும் தொழிலைக் காட்டும் நிலை யில் இதனை "ஒப்புமை" இறந்தகாலத்தைக் காட்டும் எனக் குறிப்பிடலாம். இக்கருத்தினை மரபிலக்கண ஆசிரியர்கள் பலரும் நன்கு விளக்கியுள்ளனர். இவை காட்டும் காலத்தை நாம் பேசுகின்ற நேரத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் (absolute tense) ஒப்புமைக் காலமாகவே (relative tense) கொள்ள வேண்டும்.

இதனைத் தொல்காப்பியர்

"செய்து என்எச்சத்து இறந்த காலம்"
எய்து இடன் உடைத்தே வாராக் காலம்" சூத். 724

என்ற சூத்திரத்தில் கூறுவதாகக் கருதுவர் உரையாசிரியர்கள், இதுபற்றிக் கூறும் சேனாவரையர்

"ஈண்டுச் செய்தெனெச் சத்திறந்தகாலமென்றது முடிபாய் வரும் வினைச் சொல்லாலுணர்த்தப்படும் தொழிற்க அவ் வெச்சத்தாலுணர்த்தப் படுந்தொழில் முன் நிகழ்தலை" (239) எனக் கூறுவார். இதனையே நச்சினார்க்கினியரும்,

"நீ உண்டு வருவாய், என்பது நாளை உண்டு வருவாய் என்னும் பொருள் உணர்த்தவும், வருதல் தொழிலுக்கு உண்டல் தொழில் முன் நிகழ்ந்து, ஆண்டும் தன் இறந்த காலமே உணர்த்திற்றாம்" என்பார் (241).

## 2.3 காலஎச்ச அமைப்பு

எல்லாக் காலவெச்சங்களும் கால இடைநிலைகளைக் கொண்டு வரும் நிலையில் இவற்றின் அமைப்பைக் கீழ்க் கண்டவாறு அமைக்கலாம்.

வினை அடி + { இறந்த காலம் / எதிர் மறை } + எச்ச விகுதி

காலஎச்ச விகுதிகளாக —உ, —φ, —ஊ, —உ, — ஆ, —பு, —மை, —மல் ஆகியவை பழந்தமிழில் காணக் கிடக்கின்றன.

| | | |
|---|---|---|
| —உ | செய்+த்+உ | > செய்து |
| | செய்+ஆத்+உ | > செய்யாது |
| —φ | ஆடு+இ+φ | > ஆடி |
| | அளை+இ+φ | > அளைஇ |
| | போ+ய்+φ | > போய |
| | செய்+ஆ+φ | > செய்யா (எதிர் மறை) |
| —ஊ(உ) | செய்+φ+ஊ | > செய்யூ |
| | செய்+φ+ஊ உ | > செய்யூஉ |
| —ஆ | செய்+φ+ஆ | > செய்யா (உடன்பாடு) |
| —பு | செய்+φ+பு | > செய்பு |
| —மை | செய்+ஆ+மை | > செய்யாமை |
| —மல் | செய்+ஆ+மல் | > செய்யாமல் |

## 2 4 காலவெச்சம் காட்டும் பொருள்கள்

காலவெச்சம் வரிசைப்பொருள் (Sequential), துணை நிகழ்ச்சிப் பொருள் (Part of an action), உடனிகழ்ச்சிப் பொருள் (Simultaneous), நிலைமைப்பொருள் (Stative), காரணப் பொருள் (Casual), தாக்கப்பொருள் (Effective) வினையடைப் பொருள் (Adverbial) ஆகிய பொருள்களில வரக் காண்கிறோம. மட்டுமன்றித் துணைவினைகளின் நிலைக்களனாகவும் (வந்திருந்தான்) இவை செயல்படுகின்றன. ஒரு சில இடங்களி அதுவும் பழந்தமிழ் இலக்கியங்களில் தொழில பெயராகவும் பயன்படுகின்றன.

### 2.4 1 வரிசைப்பொருளும் துணைநிகழ்ச்சிப் பொருளும்

மேலே கூறப்பட்ட பொருள்களில் வரிசைப் பொருளும் துணை நிகழ்ச்சிப்பொருளும் அதிகமாக வருதல காணத்தக்கது. பொதுவாகக் காலவெச்சங்கள் ஒன்றன்பின்னொன்றாக நடக்கும நிக்ழ்ச்சிகளையே குறித்து நிற்கும். உடனிகழ்ச்சிப் பொருள், தாக்கப்பொருள், வினையடைப்பொருள் ஆகியவற்றில் இந்நிலைமை இல்லையாயினும் பிற பொருள்களில் இப்பண்பைக் காணலாம். வரிசைப் பொருளிலும் துணை நிகழ்ச்சிப் பொருளிலும் இப்பண்பை நன்குக் காணமுடியும்.

பொதுவாக வினையெச்சங்களைப் பற்றிப் பேசும் அறிஞர்கள் பலர் வரிசைப்பொருள்பற்றிக் குறிப்பிடுவதைக் காணலாம். கால்டுவெல், (1956:488) ஆர்டன் (1969:200) போன்ற மேனாட்டு அறிஞர்களும் இதுபற்றிக் கூறியுள்ளனர்.

1. நான் வீட்டிற்குப் போய் சாப்பிட்டேன்
2. நான் கடைக்குப் போய் புத்தகம் வாங்கினேன்
3. நான் சென்னை போய் மதுரை போவேன்

போன்ற வாக்கியங்களில் இப்பண்பினைக் காணலாம். இவ் இரண்டுவகையான வாக்கியங்களும் இரண்டு நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஒரு நிகழ்ச்சி நடந்த பின்னரே மற்றொரு நிகழ்ச்சி நடப்பதை இவ்வாக்கியங்கள் காட்டு

கின்றன முதல் வாக்கியத்தில் வீட்டிற்குப் போன பின்னரே சாப்பிடும் தொழில் நடைபெறுகிறது. இதைப் போன்றே இரண்டாவது வாக்கியத்திலும் கடைக்குப் போன பின்னரே வாங்கும் தொழில் நடைபெறுகிறது. இதைப்போன்றே மூன்றாவது வாக்கியத்திலும் சென்னைக்குப் போன பின்னரே மதுரைக்குப் போகும் தொழில் நடைபெறுகிறது. எனவே இம்மூன்று வாக்கியங்களிலும் நிகழ்ச்சிகள் வரிசையாக நடப்பதைக் காண்கிறோம்.

இதே நிலையைப் பழந்தமிழ் நூல்களிலும் காண முடிகிறது.

''வயவர் வீழ வாளரின் மயக்கி
இடங்கவர் கடும்பி னரசுதலை பணிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே'' பதி 12-1

என வரும் பதிற்றுப்பத்து அடிகளும்

''வெண்டலைப் புணரி ஆயமொ டாடி
மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகப்
பல்பூங் கானல் அல்கினம் வருதல்'' அகம் 20-8

என வரும் அகநானூற்று அடிகளும் இப்பண்பினைக் காட்டும்.

## 2 4.2 வரிசைப் பொருள் (Sequential)

இவை அனைத்தும் ஒன்றன்பின் ஒன்றாக வரும் நிகழ்ச்சிகளைக் குறிப்பிடினும் இவற்றிடையே ஒருசில வேற்றுமைகளையும் காணலாம். சில நிகழ்ச்சிகள் தம்முள் எவ்விதத் தொடர்புமின்றி, சில முன்னர் நடக்க, சில பின்னர் நடைபெறுகின்றன. குறிப்பிட்ட நிகழ்ச்சியே முன்னர் நடைபெற வேண்டுமென்ற நியதி இல்லை. எடுத்துக்காட்டாக

அவன் எங்கள் விட்டிற்கு வந்து உங்கள் வீட்டிற்கு வந்தான்

அவன் அங்கு போய் இங்கு வந்தான்

போன்ற வாக்கியங்களில் காணப்படும் செய்திகளில் முன்னர்க் கூறப்படும் நிகழ்ச்சி பின்னர்க் கூறப்படும் நிகழ்ச்சிக்கு முன்னர் நடைபெற வேண்டுமென்ற நியதி இல்லை. பின் நிகழ்ச்சி

நடந்த பின்னரும் முன் நிகழ்ச்சி நடைபெறலாம். வாக்கியங்களில் இந்நிகழ்ச்சிகள் ஒரு வரிசையில் நடக்கின்றனவே அன்றி அப்படித்தான் நடக்கவேண்டுமென்ற நியதி இல்லை.

இங்குக் காணப்படும்

எங்கள் வீட்டிற்கு வருதல்
உங்கள் வீட்டிற்கு வருதல்

என்ற இரு தொழில்களுக்குமிடையே எவ்விதத் தொடர்பும் இல்லை. எதுவானாலும் முதலில் நடைபெறலாம். மேலே குறிப்பிட்ட வாக்கியத்தில்

எங்கள் வீட்டிற்கு வருதல்

முதலில் நடைபெற்றுள்ளது. அதனால்தான் அதனை வினை-யெச்சமாகக் குறிப்பிட்டுப் பின்னர் நடந்த தொழில் பின்னர்க் குறிப்பிடப்பட்டுள்ளது.

உங்கள் வீட்டிற்கு வருதல்

முன்னர் நடைபெற்றால்

அவன் உங்கள் வீட்டிற்கு வந்து எங்கள் வீட்டிற்கு வந்தான்

எனவும் இது போன்று இரண்டாவது வாக்கியத்தையும்

அவன் இங்கு வந்து அங்கு போனான்

எனவும் கூற முடியும்.

### 2.4.3 துணை நிகழ்ச்சிப் பொருள்

இரண்டு அல்லது மூன்று நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது ஒருசில இடங்களில் முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சி பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிக்கு அடிகோலுவதாக அமையக் காணலாம். அதாவது வினையெச்சத்தால் குறிப்பிடப்படும் நிகழ்ச்சி நடைபெறாமல் பின்னர் நிகழும் நிகழ்ச்சி நடைபெற முடியாது. எடுத்துக்காட்டாக

வீட்டுக்குப் போய் சாப்பிட்டான்

என்ற வாக்கியத்தில் குறிக்கப்படும் சாப்பிடும் நிகழ்ச்சி வீட்டிற்குப் போகாமல் நடைபெறாது. இந்நிலையில்தான் முதல் நிகழ்ச்சி இரண்டாவது நிகழ்சசிக்கு வழிவகுக்கிறது. அல்லது துணை நிற்கிறது. இதைக் கருத்தில் கொண்டுதான் .ஆர்டன் "leading upto the action of the principal verb" எனக் குறிப்பிடுவார். மேலும் இவ் வாக்கியத்தில் காணப் படும் இரு நிகழ்ச்சிகளையும் ஒரு நிகழ்ச்சியாகக் கொண்டு அது இரண்டாவது வினைச் சொல்லால் காட்டப்படுகிறது என்றும் அதனுடைய ஒரு பகுதியாகவே வினையெச்சத்தால் காட்டப்படும் நிகழ்ச்சி காணப்படுகிறது என்றும் கருதலாம். அதாவது அவை இரண்டையும் ஒரு நிகழ்ச்சியாகவே கொண்டு வினையெச்சத்தால் காட்டப்படும் நிகழ்ச்சியை ஒரு பகுதி ய'கவே கொள்ளுதல் நலம். இதனால்தான் இவ்வகை வினை யெச்சங்ளைப் பற்றிப் பேசும்போது ஆர்டன் "forming part of or leading upto the action of the principal verb" எனக் குறிப்பிடுவார்.

### 2 4.4 காரணப் பொருள்

காலவெச்சங்கள் குறை எச்சங்களைப் போன்று காரணப் பொருளிலும் வருதல் உண்டு. பொதுவாகக் குறையெச் சங்களே அதிகமாகக் காரணப் பொருளில் வருவன.

மழை பெய்யக் குளம் நிறைந்தது

போன்ற எடுத்துக்காட்டுக்கள் குறையெச்சங்கள் காரணப் பொருளில் வருவதைக் காட்டும். காரணப்பொருளில் இக்குறை யெச்சங்கள அதிமாக வரும். ஆனால் காலவெச்சங்களோ வரிசைப் பொருளிலும், துணைநிகழ்ச்சிப் பொருளிலும்தான் அதிகமாக வரும். எனினும் சில இடங்களில் இது காரணப் பொருட்டாயும் வரும்.

நீ சொல்லித்தான் நான் போனேன்

"புலக்குவே மல்லேம் பொய்யா துரைமோ
நலத்தகு மகளிர்க்குத் தோட்டுணை யாகித்

தலைப்பெயற் செம்புல னாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே''

ஐங். 80

போன்ற இடங்களில் ஆடி என்பது காரணப்பொருட்டாய் வருதல் காணத்தக்கது. ''நீரிலே ஆடினமையாலன்றோ நின்னு டைய கண்கள் மிகமிகச் சிவந்துள்ளன'' என உரையாசிரியர் எழுதுவது காண்க. இத்தகைய இடங்கள் பலவறறைப் பண்டைத் தமிழ் நூல்களில் பார்க்க முடியும்.

இவ்வெச்சங்கள் காரணப்பொருள் காட்டிவரும் பல இடங்களில் உரையாசிரியர்கள் ஆடினமையால் (ஐங் 80). ஆடியமையாலே (ஐங்.79), கூறுதலானே (நற் 50) போன்றசொற் களை இட்டு எழுதினும் வேறு பல இடங்களில் காலவெச் சங்களைப் பயன்படுத்தியே உரை எழுதிச் செல்லுவதையும் காணலாம்.

குறையெச்சங்கள் காரணப்பொருளில் அதிகமாக வரும் நிலையில் காலவெச்சங்களும் இப்பொருளில் வரும்போது கால வெச்சங்களைக் குறையெச்சங்களாகத் திரிக்க வேண்டும் எனக் கூறுவர் உரையாசிரியர்கள்.

''புதுபுன லாடி யமர்த்த கண்ணள்
யார்மக ளிவள்......... ''

ஐங். 79

என்ற ஐங்குறுநூற்று அடிகளுக்கு உரையெழுதப் போந்த உரையாசிரியர் ''புதிய நீரிலே நெடிது ஆடியமையாலே மாறு பட்ட கண்ணையுடைய இவள் யார் மகள்?'' என எழுது வதுடன் பின்னர், ''ஆடி: எச்சத்திரிபு, ஆடியமையாலே எனக் காரணப் பொருட்டாக்குக'' என எழுதுவது குறிப்பிடத்தக்கது. இவர்கள் செயவென் வாய்பாட்டு எச்சமே காரணப் பொருள் காட்டும் என்றும் காலவெச்சம் இப்பொருளில் வரும்போது அதனைச் செயவென் வாய்பாட்டு எச்சமாகத் திரிக்க வேண்டும் என்றும் கருதுகின்றனர் என எண்ணலாம்.

இவ்வாறு கொள்ளாமல் கால எச்சங்களும் காரணப் பொருட்டாய் வரும் எனவும் கொள்ளலாம்.

### 2 4.5 உடனிகழ்ச்சிப் பொருள்

வினையெச்சம் காட்டும் பொருள்களில் உடனிகழ்ச்சிப் பொருளும் ஒன்றாகும், வினை யெச்சத்தால் காட்டப்படும் செயலும், அது கொண்டு முடியும் மற்றொரு வினையால் காட்டப்படும் செயலும் உடனிகழுமாயின் அதனை உட னிகழ்ச்சி பொருள் எனக் கருதலாம்.

> அவர்கள் கைகூப்பி நின்றனர்
> அவர்கள் ஆடிப் பாடினர்

போன்ற உதாரணங்கள் இப்பொருளினைக் காட்டும். இவ் வாக்கியங்களில் கைகூப்புதலும், நிற்றலும் ஒரே நேரத்தில் நிகழ்வது அல்லது உடன் நிகழ்வது காணுதற்குரியது. இது போன்றே இரண்டாவது வாக்கியத்தில் கூறப்படும் ஆடுதலும், பாடுதலும் ஒருங்கே நிகழ்கின்றன. பாடும்போது ஆடுதல் தொழில் நடக்கின்ற காரணத்தால்தான் இதை உடனிகழ்ச்சிப் பொருள் என்கிறோம். இவ்வாக்கியங்களை முறையே

> அவர்கள் கைகூப்பிக் கொண்டே நின்றனர்
> அவர்கள் நிற்கும்போது கைகூப்பிக்கொண்டிருந்தனர்

எனவும்

> அவர்கள் ஆடிக்கொண்டே பாடினர்
> அவர்கள் பாடும் போது ஆடிக்கொண்டிருந்தனர்

எனவும் கூறுதல் முடியும். இத்தகைய பல வாக்கியங்களைப் பழந்தமிழ் நூல்களில் காணமுடியும்

> ".........மாந்த ரொராங்குக்
> கைசுமந் தலறும் பூசல்........."

பதி 31.2

என வரும் பதிற்றுப்பத்தடிகளில் வரும் 'கை சுமந்து அலறும்' என்பது உடனிகழ்ச்சிப் பொருளைக் காட்டி நிற்கக் காணலாம்.

பொதுவாகக் காலஎச்சங்கள் பலவேறு பொருள்களில் வரும். தொல்காப்பிய உரையாசிரியர்கள் குறையெச்சம் பற்றிப் பேசும்போது அவை பல்வேறு பொருள்களில் வரும் எனக் குறிப்பிட்டுள்ளனர். ஆனால் காலவெச்சங்கள் பற்றி எழுதும்போது அவை குறிப்பிடும் பொருள்கள் பற்றி எதுவும் பேசவில்லை. செய்யூ வாய்பாட்டு வினையெச்சத்தினைக் குறித்து எழுதும் போது இது விரைவு குறித்து வரும் எனக் குறிப்பிட்டனர்; அன்றி வேறு வாய்பாட்டுஎச் சங்களின் பொருள்கள் பற்றி எதுவும் பேசவில்லை செய்பு வாய்பாடு பற்றிக் குறிப்பிடும் போது இது நிகழ்காலத்தில் உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் எனக் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர் (சேனாவரையம் 228). ஆனால் இவ் வாய்பாட்டு எச்சம் உடனிகழ்ச்சிப் பொருளில் மட்டுமின்றி வேறு பல பொருள் களில் வரும் என்பதும், வேறு வாய்பாட்டு எச்சங்களும் உடனிகழ்ச்சிப் பொருளில வரும் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

## 2.4 6 நிலைமைப் பொருள்

காலவெச்சங்கள் நிலைமைப்பொருள் (Stative) காட்டி நிற்றலும் உண்டு. அதாவது காலவெச்சங்கள் கொண்டு முடியும் வினைகள் நடைபெறும் போது அவ்வினையைச் செய்வோன் போன்றவர்கள் என்ன நிலையில் இருந்தனர் என்பதைக் காட்டுவதே நிலைமைப் பொருள்.

அவன் மாலையணிந்து வந்தான்
அவள் பொட்டுஇட்டு வந்தாள்

போன்ற வாக்கியங்களில் வரும் அணிந்து, பொட்டு இட்டு போன்ற காலவெச்சங்கள் இப்பொருளில் வரக் காண்கிறோம். இவற்றை

அவன் வரும்போது மாலையணிந்திருந்தான்
அவள் வரும்போது பொட்டு இட்டிருந்தாள்

என 'இரு' என்ற வினையை இட்டுக் கூறமுடியும். இது போன்றே

> அவன் மாலையணிந்து கொண்டு வந்தான்
> அவள் பொட்டு இட்டுக் கொண்டுவந்தாள்

எனவும் கூறமுடியும்.

> "கொண்ட லவரைப் பூவி னன்ன
> வெண்டலை மாமழை சூடித்
> தோன்ற லானாதவர் மணிநெடுங் குன்றே" ஐங் 209-3

என வரும் அடிகளில் காணப்படும் "சூடித் தோன் றலானாது" என்பது நிலைமைப் பொருளைக் காட்டி நிற்கும்.

## 2.4.7 தாக்கப்பொருள்

காலவெச்சங்கள் தாக்கப்பொருளிலும் வருதல் காணலாம். பொதுவாக இன்றைய தமிழில் குறையெச்சங்களே தாக்கப் பொருளில வருகின்றன. ஆனால் பண்டைத் தமிழில் ஒரு சில இடங்களில் காலவெச்சங்களும் இப்பொருள் தந்து நிற்கக் காண்கிறோம்.

ஒரு செய்கையின் தாக்கம் இன்னொரு செய்கையில் காணப்படுமாயின் அப்பொருளையே தாக்கப் பொருள் என் கிறோம்.

> அவன் விழத் தள்ளினேன்
> அவன் விழுமாறு தள்ளினேன்
> அவன் விழும்படித் தள்ளினேன்

போன்றவற்றில் இப்பொருளைக் காண்கிறோம்.

இன்றைய. தமிழில் எதிர்மறைக் காலவெச்சங்கள் இப் பொருள் காட்டி நிற்கின்றன.

காற்று புகாமல் அடை (காற்று புகாதவாறு அடை)

போன்றவை இப்பொருள் காட்டும். ஆனால் பண்டைத் தமிழில் சில காலவெச்சங்களும் இப்பொருள் தந்து நிற்கக் காணலாம்.

"கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி" பதி 16 1

என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் உறழ்ந்து என்னும் வினை யெச்சம் தாக்கப்பொருளில் வருவதைக் காண்கிறோம். "மலைச் சிகரங்களுடன் மாறாட எடுத்த வளைந்த இடத்தை யுடைய புறமதில்" என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

## 2.4.8 வினையடைப் பொருள்

மேற்கூறிய பொருள்களில் மட்டுமன்றி வினையடைப் பொருளிலும் (adverb) காலவெச்சங்கள் வருதல் உண்டு.

> கண்ணன் தனித்து வந்தான்
>
> கண்ணன் விரைந்து சென்றான்

போன்றவற்றில் தனித்து, விரைந்து ஆகிய காலவெச்சங்கள் வினையடைப் பொருள் தந்து நிற்கின்றன. இவற்றைக்

> கண்ணன் தனியாக வந்தான்
>
> கண்ணன் விரைவாக வந்தான்

என்று கூறமுடியும். மேலும் எவ்வாறு? எப்படி? போன்ற வினாக்களுக்கு விடையாக இவை உள்ளமையும் இங்குக் கருதத் தக்கது.

இந்நிலைமையைப் பண்டைத் தமிழிலும் காண முடியும். வேள்பாரியைப் பற்றிக் கூறும்போது,

> "பனைகெழு வேந்தரை யிறந்தும்
> இரவலர்க் கீயும் வள்ளியோ னாடே" புறம் 119-6

என வரும் அடிகளில் வேந்தரின் மிகுத்தும் (வேந்தரை விட மிகுதியாக) எனவும், குறுந்தொகையில்,

> ...............தனித்தோர்
> தேர்வந்து பெயர்ந்த தென்ப..........." குறு 246-3

எனவரும் அடிகளில் 'தனித்து' எனவும் இப்பொருளில் வருதலைக் காண்க.

### 2.4 9 தலைமை வினை

துணை வினைகளின் நிலைக்களனாக, அதாவது தலைமை வினையாகவும் வினையெச்சங்கள் வருகின்றன.

வந்து விட்டான்

வந்திருந்தான்

போன்ற இடங்களில் இப்பண்பினைக் காணலாம். பழந்தமிழில்

''அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி'' அகம் 98-25

என வருதல் காண்க.

### 2.5 காலம்

காலவெச்சங்கள் பொதுவாக இறந்தகாலம் காட்டும் பல வேறு கால இடைநிலைகளைக் கொண்டிருப்பினும் இறந்த காலம் மட்டுமன்றிப் பிற காலங்களையும் காட்டி நிற்க வல்லது.

நான் நேற்று வந்து சாப்பிட்டேன்

நான் கடைக்குப் போய் மரம் வாங்கினேன்

மழை பெய்து குளம் நிறைந்தது

அவள் மாலை அணிந்து வந்தாள்

போன்றவற்றில் இவை இறந்த காலத்தைக் காட்டி நிற்கின்றன. ஆனால்

அவள் ஆடிப் பாடினாள்

''வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமும்......'' புறம் 35-24

போன்றவற்றில் ஆடி, ஆர்த்து என்ற இரு காலவெச்சங்கள் காட்டும் தொழிலும் அவை கொண்டு முடியும் வினைகள் காட்டும் தொழில்களும் ஒரே நேரத்தில் நடைபெறுகின்றன. இந்நிலையில் இவ்வெச்சங்கள் நிகழ்காலம் காட்டுவனவாகக் கருதலாம். நச்சினார்க்கினியர் (241) கொடி

ஆடித் தோன்றும் என்பதைத் தந்து "தோற்றமும் ஆட்டமும் உடன் நிகழ்தலின், செய்து என்பது நிகழ்காலத்திற்கும் உரித்து ..." என எழுதுதல் காண்க.

எதிர்காலத்திலும் இவ்வெச்சங்கள் பயன்படக் காண்கிறோம்.

"சாந்து புலர்பு வண்ணம் நீவி" பதி 50-16

"............கானம் வெம்பி
விசும்பு கண் அழிய வேனில் நீடிக்
கயங்கண் அற்ற கல்லோங்கு வைப்பின்" அகம். 189-1-3

போன்ற இடங்களில் புலம்பு, வெம்பி ஆகிய எச்சங்கள் எதிர் என காலம் காட்டுகின்றன. இவற்றிற்கு உரை எழுதும் உரையாசிரியர்கள் "சாந்து புலர, வண்ணங்கள் நீங்க" எனவும் "கானம் வெதும்ப" எனவும் எழுதுதல் இங்குக் குறிப்பிடத் தக்கது.

## 2.6 பொருளும் காலமும்

பொதுவாகக் காலவெச்சங்கள் முன்னர்க் குறிப்பிட்டபடி இறந்த காலத்தைக் காட்டினும் அவை காட்டும் காலத்துக்கும் அவை தரும் பொருள்களுக்குமிடையே ஒரு வகையான தொடர்பு இருப்பதை உணரலாம்.

வரிசைப்பொருள், துணை நிகழ்ச்சிப் பொருள், காரணப் பொருள் போன்றவற்றில் வரும் காலவெச்சம் இறந்தகாலத்தையே (காண்க 2.5) காட்டி நிற்கும். எந்நிலையிலும் இது வேறு காலங்களை காட்டுவதில்லை.

அவன் உண்டு வந்தான்

அவன் பார்த்து வந்தான்

போன்றவற்றில் இறந்த காலத்தில் வருவது காணத்தக்கது. இதுபோன்றே

அவன் உண்டு வருவான்

அவன் பார்த்து வருவான்

போன்றவற்றிலும் ஒப்புமை இறந்தகாலத்தைக் காண்கிறோம். உண்ட பின்னரே வருதல் தொழில் நடைபெறுகிறது. ஒன்றன் பின்னொன்றாக வரிசையாகத் தொழில் நடப்பதைக் குறிக்கும் நிலையில் வினையெச்சங்கள் வரும்போது நிச்சயமாகக் கொண்டு முடியும் வினை காட்டும் தொழிலுக்கு முன்னே எச்சம் காட்டும் தொழில் நடைபெற்றாகவேண்டும். இல்லை யெனில் இது வரிசைப்பொருளைக் காட்டுவதாக அமையாது. இந்நிலையில் வரிசைப்பொருளில் வரும்போது வினையெச்சம் இறந்தகாலத்தையோ அல்லது ஒப்புமை இறந்த காலத்தை யோதான் காட்டியாக வேண்டும்.

இதுபோன்றே காலவெச்சங்கள் துணைநிகழ்ச்சிப் பொரு ளில் வரும் போதும் இறந்த காலத்தைக் காட்டுவனவாக உள்ளன.

அவன் வீட்டுக்குப் போய் உண்டான்

அவன் வீட்டுக்குப் போய் உண்பான்

போன்றவற்றிலும் வினையெச்சங்கள் இறந்த காலத்தையே காட்டும். ஒரு நிகழ்ச்சி நடைபெறுவதற்கு இன்னொரு நிகழ்ச்சி நடந்தாக வேண்டிய நிலையில் அது முன்னர் நடந் திருத்தல் அவசியம். இந்நிலையில் அந்நிகழ்ச்சியை குறிக்கும் காலவெச்சம் நிச்சயமாக இறந்தகாலத்தையே குறித்தாக வேண்டும்.

இதுபோன்றே காரணப்பொருளில் வரும் காலவெச்சங் களும் இறந்த காலத்தையே காட்டுவனவாக உள்ளன.

மழை பெய்து குளம் நிறைந்தது

நீ சொல்லித்தான் நான் போனேன்

போன்ற வாக்கியங்களில் காலவெச்சங்கள் காரணப்பொருளில் வரக்காணலாம். ஒரு செயலுக்குக் காரணமாக முன்னால் நடக்கும் செயலைக் குறிக்கும் காலவெச்சங்கள் இறந்தகாலத் தையே காட்டும். காரணமாக அமையும் செயல்கள் யாவும் முன்னால்தான் நடக்க வேண்டும் என்றில்லை.

நீ நாளை பணம் தருவதால்தான்

இன்று நான் வருகிறேன்

போன்றவற்றில் காரணச் செயல் பின்னால் நடக்கலாம். ஆனால் காரணப் பொருள் காலவெச்சங்களால் காட்டப்படும் நிலையில் அதில் கூறப்படும் செயல்கள் முன்னர் நடப்பதாகவே அமையும். இந்நிலையில் இவ்வெச்சங்கள் இறந்தகாலம் காட்டு வது இயற்கையே யாகும்.

எனவே இதுகாறும் கூறியவற்றால் வரிசைப் பொருள், துணை நிகழ்ச்சிப்பொருள், காரணப்பொருள் ஆகியவற்றில் காலவெச்சங்கள் இறந்த காலத்தையே காட்டி நிற்கும் என்பது தெளிவு.

நிலைமைப் பொருளிலும் இது இறந்தகாலத்தையே காட்டும்.

மாலை அணிந்து வந்தாள்

மாலை அணிந்து வருவாள்

போன்றவற்றில் மாலை அணிதல் வருவதற்கு முன்பே நடந் திருக்கக் காண்கிறோம்.

ஆனால் உடனிகழ்ச்சிப் பொருளில் (சித்திரபுத்திரன் 1978: 104–106) காலவெச்சங்கள் வரும்போது காலவெச்சம் காட்டும் தொழிலும் கொண்டு முடியும் வினை காட்டும் தொழிலும் ஒரே நேரத்தில் நடப்பனவாகும். எனவே காலவெச்சம் நிகழ்காலம் காட்டுவதாகக் கருதலாம்.

அவள் ஆடிப் பாடினாள் .

அவள் ஆடிப் பாடுவாள்

போன்றவற்றில் ஆடுதலும் பாடுதலும் ஒரே நேரத்தில் நடை பெறுதல் கண்கூடு. எனவே இதனை நிகழ்காலம் எனக் கருத லாம். உரையாசிரியர்களும் உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் போது நிகழ்காலம் என்றே குறிப்பிடுகின்றனர் (சேனா வரையர் 228, நச்சினார்க்கினியர் 241)

தாக்கப்பொருளிலும் இவ்வெச்சங்கள் வரும் எனக் கண்டோம். இப்பொருளில் வரும்போது இவை எதிர்காலத்தையே காட்டி நிற்கும்.

அவன் ஓடுபு அடித்தேன்

(அவன் ஓடுமாறு அடித்தேன்)

போன்றவற்றில் இந்நிலையைக் காண்கிறோம். கொண்டு முடியும் வினையின் தொழிலின் தாக்கத்தைக் காலவெச்சம் காட்டும் நிலையில் அவை எதிர்காலத்தையே கொண்டிருத்தல் வேண்டும்.

"அம்ம வாழியோ மகிழ்நநின் மொழிவல்
பேரு ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னொடு தண்புன லாடுது
மெம்மொடு சென்மோ செல்லனின் மனையே" ஐங் 77

என வரும் ஐங்குறுநூற்றுப் பாடலில் காணப்படும் கலங்கி என்னும் காலவெச்சம் அலை கலங்கும்படி எனப் பொருள்படுதல் காண்க. உரையாசிரியர் 'நின்னோடு யாங்கள் நீர் அலையினாலே கலங்கும்படி குளிர்ந்த நீரிலே விளையாட்டயரா நிற்போம்" எனப் பொருள் எழுதுதல் உணரத்தக்கது.

இந்நிலையில் காலவெச்சம் காட்டும் பொருள்களுக்கும் அவை காட்டும் காலத்திற்கும் இடையே ஒருவிதமான தொடர்பு இருக்கக் காண்கிறோம். காலவெச்சங்களின் பொருள்களுக்கேற்பவே இவை காட்டும் காலங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன.

வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள், காரணப் பொருள், நிலைமைப்பொருள் ஆகியவற்றை இவை தருமாயின் இவை காட்டும் காலம் இறந்தகாலம் என்றும். உடனிகழ்ச்சிப் பொருளாயின் நிகழ்காலம் என்றும், தாக்கப்பொருளாயின் எதிர்காலம் என்றும் நிர்ணயித்துவிடலாம். எல்லாக் காலவெச்சங்களிலும் இறந்தகால இடைநிலைகள் இருப்பினும் அவை காட்டும் பொருளுக்கேற்ப வெவ்வேறு காலங்களைக் காட்டி நிற்கின்றன.

## 2.7 காலவெச்சமும் எழுவாயும்

காலவெச்சங்களும் அவை கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயைக் கொண்டு முடியுமா அல்லது வெவ்வேறு எழுவாய்களைக் கொண்டு முடியுமா என்பது ஆராயத் தக்க ஒன்றாகும். பொதுவாகக் கால எச்சங்கள் ஒரே எழுவாயையே கொண்டு முடியும் என்பது இலக்கணிகள் பலர் கருத்தாகும் இதுபற்றித் தொல்காப்பியர்

''அவற்றுள்

முதல்நிலை மூன்றும் வினைமுதல் முடிபின" (715)

என்னும் நூற்பாவில் குறிப்பிடுதல் காணலாம். செய்து, செய்யூ, செய்பு ஆகிய மூன்று வாய்பாட்டு வினையெச்சங்களும் அவை கொண்டு முடியும் வினையின் எழுவாய்களையே தம் எழுவாய்களாய்க் கொண்டு வரும் என்பதே இதன் பொருளாகும்.

இச்சூத்திரத்திற்குப் பொருள் எழுதப் போந்த சேனாவரையர் மேற்சொல்லப்பட்ட பதினைந்து வினையெச்சத்துள், முதற்கணின்ற "செய்து, செய்யூ, செய்பு என்னும் மூன்றும் தம் வினைமுதல்வினையான் முடியும்" எனப் பொருள் எழுதுவார். இதே நிலையினைத்தான் பிற உரையாசிரியர்களிடமும். காணுகிறோம். இதற்கு உதாரணம் தரப்போந்த சேனாவரையர்

உண்டு வந்தான்

உண்ணூ வந்தான்

உண்குபு வந்தான்

கற்று வல்லனாயினான்

கல்லூ வல்லனாயினான்

கற்குபு வல்லனாயினான்

ஆகியவற்றைத் தருவார். இவ்வகையான எடுத்துக்காட்டுக்களையே பிற உரையாசிரியர்களும் தந்து சென்றுள்ளனர்.

பொதுவாக, இத்தகைய வினையெச்சங்கள் கொண்டு முடியும் வினைகளின் வினைமுதல்களையே பெருவாரியாகக் கொண்டு முடிதல் காணலாம்.

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் ஆராயின் இவ் வுண்மை நன்கு விளங்கும். எல்லா வாய்பாட்டுக் கால எச்சங் களும் இந்நிலையிலேயே உள்ளன. எடுத்துக்காட்டாக, செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் பதிற்றுப்பத்தில் நானூற்று இரண்டு இடங்களில் வருவதும், அவற்றுள் முன்னூற்று அறுபத் தெட்டு இடங்களில் வினை யெச்சமும் அவை கொண்டு முடி யும் சொற்களும் ஒரே எழுவாயை எடுத்துவருவதும், முப்பத்து நான்கு இடங்களில் வெவ்வேறு எழுவாய்களை எடுத்துவருவ தும் கவனித்தற்பாலன. இதே நிலையினைத்தான் ஐங்குறு நூற்றிலும் காணுகிறோம். இந்நூலில் நூற்றுஎண்பத்தொன் பதுஇடங்களில் இவ் வாய்பாட்டு வினையெச்சம் வர அவற்றுள் ஏழு இடங்களில் மட்டுமே வெவ்வேறு எழுவாய்கள் வந் துள்ளன. இதே நிலையினைத்தான் பிற நூல்களிலும் காணுகிறோம். (காண்க, பட்டியல் 2)

உரையாசிரியர்களும் இந்நிலையை நன்கு உணர்ந்துள் ளனர். இளம்பூரணர், சேனாவரையர் போன்ற உரையாசிரி யர்கள் எல்லாம் வேறு வினை கொண்டு முடியும் இடங்களை எடுத்துக் காட்டியிருத்தல் இங்கு நினைவு கூரத்தக்கது.

"வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய"

என்ற நூற்பாவின் கீழ் இப்பண்பினைக் கொண்டு வருவர். இளம்பூரணர் (450)

ஞாயிறு பட்டு வந்தான

கோழி கூவிப் புலர்ந்தது

ஆகிய உதாரணங்களைத் தருவதும்,

சேனாவரையர் (230)

"உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய, யாஅவிரி நிழற்றுஞ்சும்" (குறு. 232)

என்னும் குறுந்தொகை அடிகளை எடுத்துக்காட்டி நிற்பதும் இங்கு உணரத் தக்கன.

இளையபெருமாள் தன்னுடைய "சங்க இலக்கியங்களில் வினையெச்சத்திரிபுகள்" (1974) என்ற கட்டுரையில் இதுபற்றிக் குறிப்பிடுதல் காணத்தக்கது. இவ்வெச்சங்கள் பிறவினை கொண்டு முடியும் இடங்கள் சிலவற்றை சுட்டிக் காட்டுவார் அவர். பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகியவற்றிலிருந்து சில எடுத்துக்காட்டுக்களைத் தருவார்.

"நீ பாசறை மரீஇ நாள் கழியுமோ" பதி 50
"சான்றோர் பல்கி... நாடு புலத்தது" புறம் 117
"மறவர் கடந்து...... புரவி ஊர்ந்த நீ" பதி 41
"படிவம் ஒடியாது ... வேள்வி வேட்டனை" பதி 74.

ஆகிய எடுத்துக்காட்டுகளைத் தந்து இவற்றில் காணப்படும் காலவெச்சங்கள் வேறு வினைமுதலைக் கொள்ளும் வினையுடன் முடிகின்றன என்பார்.

மேலும் அவர் இக்காலவெச்சங்கள் செயலென் வாய்பாட்டு வினையெச்சங்களாகத் திரிக்கப்படுகின்றன என்றும் காட்டு வார். இந்நிலையைச் செய்பு, செய்யூ ஆகிய வாய்பாட்டு எச்சங் களிலும் காணலாம். செய்பு வாய்பாட்டிற்கும் அவர் கீழ்க் கண்ட உதாரணங்களைத் தந்து நிற்பார்.

"தூங்குபு தகைத்த... ஐயவி" பதி 22
"நிலன் அதிர்பு... பணைமு ழங்கும்" பதி 31
"சாந்து புலர்பு ...... நீ வதிந்து" பதி 50
"நிலங் கவர்பு ...... விரைந்து" புறம் 125

செய்யூ வாய்பாட்டு வினையெச்சத்திலும் இந்நிலையைக் காணலாம். நான்கு இடங்களில் (பத்து 2, பரி 2) மட்டுமே இது காணப்படுகிறது. பரிபாடலில்

"ஆயத்துட னில்லாள் ஆங்கவன் பின்றொடரூஉத்
தாயத் திறமறியாள்...... பரி 11-111

என வரும் அடிகளில் வினையெச்சமும் அதுகொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலும் உரையாசிரியர் "அப்பெண்...... ஆயமகளிரோடே நில்லாமல்

அவன் பின்னே தொடராநிற்ப அவள் அங்ஙனம் செல்லுதற்கு காரணமான அன்பின் தன்மையை அவள் தாய் அறியாத வளாய்...'' என்று எழுதுவதும் கவனிக்கத்தக்கன.

## 2.8 பொருளும் எழுவாயும்

இவ்வாறு சங்க இலக்கியங்களில் வெவ்வேறு எழுவாய் களைக் கொண்டு முடியும் வினையெச்சங்களை ஆராயின் வேறு ஒரு உண்மையும் புலப்படும். இவ்வெச்சங்கள் காட்டும் பொருளுக்கும் எழுவாய்க்கும் இடையே நல்லதொரு தொடர்பு இருப்பது கவனித்தற்பாலது. செய்து வாய்பாட்டு வினை யெச்சம் வரிசைப்பொருள், உடனிகழ்ச்சிப்பொருள், நிலைமைப் பொருள், காரணப்பொருள், தாக்கப்பொருள் போன்ற பல பொருள்களில் வருகின்றது. இவ்வெச்சம் காட்டும் பொருளுக் கேற்பவே எழுவாய்கள் வந்துள்ளன. எடுத்துக்காட்டாக, தாக்கப் பொருளில் மிகப்பெருவாரியாக இரு எழுவாய்களே வரு கின்றன. காரணப் பொருளிலும் இதே நிலையைத்தான் காண்கிறோம். இதுபற்றிப் பின்னர் விரிவாகக் காண்போம்.

# 3.1

# பழந்தமிழில் காலவெச்ச விகுதிகள்-1

உ

### 3.1.1 பழந்தமிழ்க் காலவெச்ச விகுதிகளும் தொல்காப்பியமும்

பழந்தமிழில் — உ, — ∅, — பு, — ஊ, — ஆ, —மை, —மல் ஆகிய விகுதிகள் காலவெச்ச விகுதிகளாக உள்ளன. ஆடி போய், செய்யா (எதிர்மறை) ஆகிய வாய்பாட்டு எச்சங்கள் — ∅ விகுதி எச்சங்களாகக் கருதப்படுகின்றன.

#### 3.1.1.1 தொல்காப்பியமும் உரையாசிரியர்களும்

வினையெச்சங்கள் பற்றிப் பேசவந்த தொல்காப்பியர் முன்னர்க் குறிப்பிட்டபடி

> "செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியச் செய்யிய செயின் செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" சூத்.713

எனப் பலவேறு வாய்பாடுகளைத் தந்து வினையெச்சங்களை விளக்குவார். இதுபோன்றே செய்யா எனும் வாய்பாட்டு வினையெச்சத்தையும் உயிர் மயங்கியலில் (222) குறிப்பிட்டுள்ளார்.

பழந்தமிழ் இலக்கியங்களில் தொல்காப்பியம் கூறும் எல்லா விகுதிகளும் காணப்படுகின்றன. தொல்காப்பியர் இவற்றை வாய்பாட்டு அடிப்படையில் கூறிப் போந்தாலும் உரை

யாசிரியர்கள் இவ்வாய்பாடுகளில் இறுதியில் நிற்கும் இடைச் சொற்களே வினையெச்சம் எனக் காட்ட வல்லன என்பதுபோல் குறிப்பிடுவதும் இந்நிலையில் இவை ஒன்பதும் ஈற்று இடைச் சொல்லால் வேறுபட்டன எனக் கூறுவதும் இங்குக் குறிப்பிடத் தக்கன. இதுபற்றிப் பேசும் சேனாவரையர்

"அவ்வகையொன்பது மென்றது இறுதி நின்ற இடைச் சொல்லான் வேறுபட்ட ஒன்பது மென்றவாறு. அவ்விடைச் சொல்லாவன உகரமும், ஊகாரமும், புகரமும், எனவும் இயரும், இயவும், இன்னும் அகரமும் குகரமுமாம்" (சூத். 228).

எனக் கூறிச் செல்லுவார். இதே நிலையினைத்தான் நச்சி னார்க்கினியரிடமும் காண்கிறோம்.

"செய் என்னும் வாய்பாட்டினை உகரமும், ஊகாரமும், புகரமும் எனவும், இயரும், இயவும் இன்னும் அகரமும், குகர மும் என்னும் இறுதி இடைச் சொல்லான் வேறுபடுத்தினார்" (சூத். 230) என்பார்.

ஆனால் தெய்வச்சிலையாரோ இதுபற்றி எதுவும் கூறுவ தில்லை. இதே நிலையினைத்தான் கல்லாடரிடமும் காண் கிறோம். எனினும் உரையாசிரியர்கள் இவ்வாய்பாட்டுச் சொற்களில் காணப்படும் இடைச்சொற்கள் அல்லது வினை யெச்சம் காட்டும் விகுதிகள் எவை என எண்ணிப் பார்த்துள் ளனர் என்பது இதனால் விளங்கும். வினையெச்சம் காட்டு வன உ, ஊ, பு, இயர், இய போன்றவையே என எண்ணு கின்றனர் என கருதலாம். இந்நிலையினை ஓரளவுக்கு நன்னூ லில் காணமுடிகிறது. தொல்காப்பியர் குறிப்பிட்டுச் சென்ற வினையெச்சங்களை அவர் குறிப்பிட்ட அந்த அந்த வாய் பாட்டாலேயே கூறி, புதிதாக எழுந்த வினையெச்சங்களை இறுதிகளால் குறிப்பிடுவது இங்கு உணரத்தக்கது.

"செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்" (சூத். 343)

என்பது நன்னூல். -வான்,- பான், -பாக்கு என இறுதிகளைத் தந்துள்ளார் அவர்.

இந்நிலையில் பண்டைய இலக்கணிகள் சில இலக்கணக் கூறுகளை வாய்பாடாகக் குறிப்பிடினும் அவற்றில் குறிப்பிட்ட இலக்கணக்கூறினைக் காட்டும் உருபு அல்லது விகுதி எது என்பதனையும் ஆராய்ந்து பார்த்துள்ளனர் என்பது தெளிவாகும்.

கால எச்சங்களைப் பொறுத்தமட்டில் உகரமும், ஊகாரமும், புகரமும், இகரமும் காலஎச்ச விகுதிகளாகப் பயன்படுகின்றன என இவர்கள் எண்ணியுள்ளமை நன்கு விளங்கும். இதே நிலையில்தான் மொழியியலாளரும் பலவேறு கால எச்ச விகுதிகளைக் குறிப்பிட்டுச் செல்வர்.

### 3.1.1.2 தொல்காப்பியப் பயிற்சி

தொல்காப்பியத்தில். — உ, —Ø, —பு, — ஊ, —மல் ஆகிய கால எச்ச விகுதிகளே (சு. பாலசுப்பிரமணியன் 1981;370 காணப்படுகின்றன.

—உ

1) இது காலம் காட்டி நிற்கும் மெய்யெழுத்துக்களைக் கொண்ட கால இடைநிலைகளுக்குப் பின்னரும்

2) எதிர்மறை காட்டும்-ஆத்- இடைநிலைக்குப் பின்னரும் வருதல் காணலாம.

| | | |
|---|---|---|
| உழுது | பொருள் | 625–1 |
| திரிந்து | எழுத்து | 17–3 |
| தெரிந்து | சொல் | 76–9 |
| நுவலாது | எழுத்து | 103–1 |

– Ø

இது

1) காலம் காட்டும் உயிர் எழுத்துக்களைக் கொண்ட கால இடைநிலைகளுக்குப் பின்னர் வரும்.

| | |
|---|---|
| அஞ்சி (அஞ்சு+இ+∅) | பொருள் 112-12 |
| விரவி | பொருள் 360- 1 |
| நிறீஇ | பொருள் 194-9 |

—பு

இது

1) இறந்தகாலம் காட்டும் சூனிய உருபிற்குப் பின்னர் வரும்.

| | |
|---|---|
| தெரிபு (தெரி+∅+பு) | சொல். 154-1 |
| திரிபு | சொல். 154-2 |

—ஊ உ

இது

1) இறந்தகாலம் காட்டும் சூனிய உருபிற்குப் பின்னர் வரும். இது புகர ஈற்றுடன் பதில்நிலை வழக்கில் உள்ளமை குறிப்பிடத்தக்கது.

நிகழூஉ (நிகழ் + ∅ + ஊ) சொல் 170-1

-மல்

1) இவ்விகுதி எதிர்மறை காட்டும் -ஆ- விகுதிக்குப்பின்னர் வரும்.

அறியாமல் (அறி+ஆ+மல்) பொருள் 534-1

### 3.1.2 பெரும்பான்மை விகுதி

பண்டைத் தமிழில் காணப்படும் -உ, -∅, -பு, -ஊ, -மை, -மல் ஆகிய ஏழு காலஎச்ச விகுதிகளில் உகர விகுதியே மிக அதிகமாகக் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக, பதிற்றுப்பத்தில் இது நானூற்றிரண்டு இடங்களில் வர இதை அடுத்த -∅ விகுதியோ நூற்று எழுபத்துமூன்று இடங்களில் மட்டுமே வருதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. இதே நிலையினைத்தான் எல்லா இலக்கியங்களிலும் நாம் காண்கிறோம். (காண்க, பட்டியல் I). இதற்குக் காரணம் இலக்கியங்களில் பயின்றுவரும் வினை சொற்களே என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பிற உருபுகளைப் போலன்றி காலஎச்ச உருபுகளின் பயிற்சி கால இடைநிலைகளைப் பொறுத்தது என்பதும். கால இடைநிலைகளின் பயிற்சி வினைச்சொற்களை அடிப்படையாகக் கொண்டது என்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது.

இவ்விகுதிகளில் எதிர்மறையில் வரும் -மல் விகுதி முன்பழந் தமிழ் இலக்கியங்களில் பத்துப்பாட்டு ஒழிந்த ஏனைய இலக்கியங்களில் காணப்படாமை கவனிக்கத்தக்கது. பத்துப் பாட்டிலும் ஒரு தடவை மட்டுமே வந்துள்ளது. இந்நிலையில இதனை (வாராமை) ஒரு முன்பழந்தமிழ்க்கூறு எனக் கருதலாம். தொல்காப்பியத்தில் இது ஒரே ஒரு இடத்தில் வந்துள்ளமையும், அதுவும் இளம்பூரணத்தில் மட்டுமே காணப்படுவதும் (க. பாலசுப்பிரமணியன் 198! : 321) இங்குக் குறிப்பிடத்தக்கது.

| பதி | ஐங் | அகம் | நற் | குறு | புறம் | பத்து | பரி | கலி | குறள் | சிலப்பு | மணி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 2 | 11 | 4 | 6 | 4 |

இதைப் போன்றே ஊகார ஈறு முன்பழந்தமிழ் இலக்கியங் களில் அதிகமாக வருவதும், பின்பழந்தமிழ் இலக்கியங்களில் குறைவாக வருவதும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

இதே நிலையைத்தான் செய்யா என்னும் வாய்பாட்டுக் காலஎச்சத்திலும் காணுகிறோம். குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் இது மிகக் குறைவாகவே காணப்படுகிறது. இதனையும் ஒரு பழந்தமிழ்க் கூறாகக் கருதலாம்.

செய்பு வாய்பாட்டுக் காலஎச்சமும் கலித்தொகை ஒழிந்த பின்பழந்தமிழ் இலக்கியங்களில் அருகியே காணப்படுகிறது.

பின்பழந்தமிழ் நூல்களில் காணப்படும் இந்நிலைகள் இடைக்காலத் தமிழில் தொடர்ந்து வருவதை நன்குக் காண முடியும்.

31.3 — உ

இவ் விகுதியே பழந்தமிழ் நூல்களில் மிக அதிகமாகப் பயின்று வருவது. முன்னர்க் குறிப்பிட்டபடி உகரமும், சூனிய விகுதியும் (ஆடி, போய் போன்றவை) வினைச்சொல்லை அடிப்படையாகக் கொண்டு வருவன என்பது இங்கு நினைவு கூரத்தக்கது. அதாவது ஆடு, ஓடு போன்ற -இன்- அல்லது -இ,யகரத்தை இறந்தகால இடைநிலையாகக் கொண்டுவரும் சொற்களே சூனிய உருபையும், வா, தா, செய் போன்ற வினைச்சொற்களே (த,ட,ற,க் ஒற்றுக்களை இறந்தகால இடைநிலையாக ஏற்பன) காலஎச்சத்தில் உகர உருபினையும் எடுத்து வருகின்றன. இந்நிலையில் இவ்வுருபுகள் அதிமாக வருவதற்குக் காரணம் குறிப்பிட்ட வினைச்சொற்களின் ஆட்சியே என்பது தெரியவரும்.

தொல்காப்பியர் வினையெச்ச வாய்பாடுகளைப் பற்றிக் குறிப்பிடும் சூத்திரத்தில் ஆடி, ஓடி வாய்பாட்டுக் காலஎச்சங்களைக் குறிப்பிடவில்லை. இதற்குக் காரணம் கூறப்போந்த உரையாசிரியர்கள் செய்து வாய்பாட்டுக் காலஎச்சம் க,ட,த,ற ஊர்ந்த வினைக்கண் வரும் எனவும், இகரம் ஓடு, ஆடு போன்ற வினைகளில் வரும் என்றும் கூறி இவை இரண்டும் ஒரே விகுதியே என்றும், ஒன்று மற்றொன்றின் திரிபே என்றும் இதனால் தொல்காப்பியர் இகர இறுதி பற்றிக் கூறவில்லை என்றும் கருதுவர். இதுபற்றிக் கூறும் சேனாவரையர்,

''அஃதேல், ஆய் என்பதனை யகர வீறென்றும், ஓடியென்பதனை இகரவீறென்றுங் கொள்ளாது, உகரவீறென்றதென்னையெனின்: நன்று சொன்னாய், இகரவிறுதி இடைச்சொல்லாயின், இறுதியிடைச்சொல் எல்லாத் தொழிலும் பற்றி வருதலிற் செலவு வரவென்பனவற்றோடும் வரல் வேண்டும். இனிச் செய்தெனெச்சத்துகரமும் இறுதியிடைச்சொல்லாதலின் ஆகுதல், ஓடுதலென்னுந் தொழில்பற்றியும் வரல் வேண்டும். செலவு வரவு பற்றி இகரம் வாராமையானும், ஆகுதல், ஓடுதல் பற்றி உகரம் வாராமையானும் இறுதியிடைச்சொல் இகரமேயாக உகரமேயாக ஒன்றாவதல்லது இரண்டெனப் படாதாம். உகரம் ஒன்றாய் நின்று கடதற

லூர்ந்த விதிவினைக்கட் பயின்று வருதலானும். எதிர்மறை யெச்சமெல்லாம் பெரும்பான்மையும் உகரவீறாயல்லது வாரா மையானும், உகரம் இயல்பாக இகரம் அதன் திரிபென்றலே முறைமையென்க. யகரவீற்றிற்கும் இஃதொக்கும்'' (228) எனக் கூறுவார். இதிலிருந்து சேனாவரையர் உ, இ என்னும் விகுதி களின் பகிர்வினை (distribution) நன்கு உணர்ந்திருந்தார் என்பது தெரியவரும். எனினும் இவர் இரண்டையும் ஒன்றாகக் கொண்டு உகரத்தை மூலமாகக் கொண்டு உகரத்திலிருந்து இகரத்தை வருவிப்பது பொருந்துவதாக இல்லை. இவர் கூற்றுப்படி

செய்+த்+உ ⇒ செய்து

எனவும்

ஆடு+இ+உ ⇒ ஆடு+இ+இ ⇒ஆடி

எனவும்

போய்+உ ⇒ போய்

எனவும் வரும் என எண்ண வேண்டும்.

இதற்குக் காரணம், ஒன்றை அடிப்படை உருபாகக்கொண்டு மற்றொன்றைப் புணர்ச்சி விகாரத்தால் வருவிக்கும் நிலையே. ஆனால் இது தமிழ்ப் புணர்ச்சி விதிகளுக்குப் பொருந்துவதாக இல்லை. இதுபற்றி பேசும் சேனாவரையர்

''கடதறவூர்ந்து இயல்பாயும், ஏனையெழுத்தூர்ந்து இகர மாய்த் திரிந்தும், நெடிலீற்று முதனிலை முன்னர் யகரம் வரத் தான் கெட்டும், இறந்தகாலம் பற்றி வரும். இவ் வுகரவீறு இகரமாதலும், யகரம் வரக் கெடுதலும் 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (சொல் 457) என்பதனாற் பெறப்படும்'' (228) எனக் கூறுவது இங்குக் குறிப்பிடற்குரியது. இவ்வாறு ஒன்றிலிருந்து ஒன்றை வருவிப்பதை விட வினைச் சொற்கள் க, ட, த, ற ஊர்ந்து நிற்கும் நிலையில் உகரத் தையும், இகர கால இடைநிலையை ஏற்கும்போதும், யகர ஒற்றினை ஏற்கும் போதும் சூனிய உருபையும் காலஎச்ச விகுதிகளாக ஏற்று வருகின்றன என்று கூறுவதே பொருத்த

மாக அமையும் என எண்ணலாம். நச்சினார்க்கினியரும் "பொருந்தாமை உணர்க" (230). என்பார். தெய்வச்சிலையார் இதுபற்றி எதுவும் கூறுவதில்லை.

### 3.1.3.1 உகரம் வினையெச்ச விகுதியா?

பொதுவாகக் காலஎச்சங்கள் அனைத்தையும் ஆராயின் வேறொரு உண்மையும் புலப்படும். எச்சங்களில் கால இடை நிலைகளை (-த்-, -ட்-, -ற்-) அடுத்து காணப்படும் -உ வல்லின மெய்களை அடுத்து ஓசை நிறைத்தற் பொருட்டு வருவதா அல்லது உண்மையில் வினையெச்சங்காட்டி நிற்கும் விகுதியா என்ற வினா எழுதல் உண்டு தமிழ் ஒலியியல் அமைப்பில் சொல்லுக்கு இறுதியில் வல்லினங்கள் வருவதில்லை. அவ்வாறு வருமாயின் அதனை ஒட்டி உகரம் வந்து உகர இறுதியாக மாறிவிடும். இந்நிலையில்தான் வந்து, கண்டு, சென்று, செய்பு போன்ற வற்றில் காணப்படும் உகரம் வினையெச்சவிகுதியா அல்லது ஓசை நிறைக்க வந்த உகரமா என்ற எண்ணம் எழுவது இயற்கை.

சிலர் காலஎச்சங்கள் உண்மையில் வினையடியையும் கால இடைநிலைகளையும் கொண்டுள்ளன என்றும் காலஎச்ச விகுதி என ஒன்று இல்லை என்றும் கருதுவர். இன்னும் சிலரோ இந்த ஆராய்ச்சிக்கே செல்லாமல் இவற்றை செய்து என்னும் வினையெச்சம், செய்யூ என்னும் வினையெச்சம் என்றெல்லாம் காட்டி (P.S. Subramaniya Sasthri 1934: 197) நிற்பர்.

தொல்காப்பியம் வாய்பாடுகளைத் தந்து நிற்கின்றது. வினையெச்சத்திற்கு மட்டுமன்றிப் பெயரெச்சத்திற்கும் கூட வாய்பாட்டினையே கூறுகிற நிலையில் தொல்காப்பியர் இவ்வாறு விகுதிகளைப் பிரிப்பது பற்றிச் சிந்திக்கவில்லை என்று எண்ணலாம். ஆனால் தொல்காப்பிய உரையாசிரியர்கள் பிரித்துக் கண்டுள்ளனர். முன்னர்க் குறிப்பிட்டபடி சேனாவரையர்

"அவ்வகை யொன்பதும் மென்றது இறுதி நின்ற இடைச் சொல்லான் வேறுபட்ட ஒன்பதுமென்றவாறு. அவ் விடைச் சொல்லாவன உகரமும், ஊகாரமும், புகரமும் என வும் ........" (சூத். 228)

எனக் கூறுவார். எனவே இவர் கருத்துப்படி —உ, —ஊ, —பு ஆகியவை கால எச்சம் காட்டும் விகுதிகளாகும். எனவே உகரம் விகுதியாகவே கருதப்படுகின்றது.

இதே நிலையினைத்தான் நச்சினார்க்கினியரிடமும் காணு கின்றோம்.

"செய் என்னும் வாய்பாட்டினை உகரமும் ஊகார மும் புகரமும் எனவும்...... இறுதி இடைச் சொல்லின் வேறு படுத்தினார்" என்பார் இவர் (சூத். 230).

ஆனால் தெய்வச்சிலையாரோ இவற்றைப் பிரித்துப் பார்த்து நிற்பதில்லை. வாய்பாடுகளாகவே கூறிச் செல்லு வார். இவரையே பின்பற்றுவார் சாஸ்திரியார்.

செய்து போன்றவற்றில் காணப்படும் உ ஓசை நிறைக் காக வந்தது எனக் கூறினும் காணூ, காணூஉ போன்ற வற்றில் வரும் ஊகாரங்களை அவ்வாறு விளக்க முடி யாது. இந்நிலையில்தான் பலர் வினையெச்சங்களுக்குத் தனி விகுதி காணுகின்றனர். (அகத்தியலிங்கம் & சண்முகம், 1970:70) எனவேதான் இங்கும் —உ,—∅ போன்றவை காலவெச்ச விகுதிகளாகக் கொள்ளப்படுகின்றன.

3. 1. 3 2 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கு உதாரணம் தர வந்த இளம்பூரணர் (224)

செய்து

என்பதையும், சேனாவரையர் (228)

நக்கு உண்டு

வந்து சென்று

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (230) சேனாவரையர் தந்துள்ள

நக்கு உண்டு சென்று

ஆகியவற்றையும், தெய்வசிலையார் (224)

உண்டு வந்தான்

என்பதையும், கல்லாடனார் (230)

செய்து தின்று

உண்டு புக்கு

போன்றவற்றையும் தந்து செல்வர். மேலும் இவர் செய்யா நின்று என்னும் வாய்பாட்டையும் தந்து இது ஒரு நிகழ்கால வாய்பாடு என்பார். நிகழ்காலத்தில் இவ் வாய்ப்பாட்டுச் சொற்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் வந்ததாகத் தெரிய வில்லை. இந்நிலையில் கல்லாடனார் இவ்வெடுத்துக்காட்டி னைத் தந்திருப்பது பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது.

சங்ககால இலக்கியங்களில் இவ்விகுதி உடன்பாட்டில் மட்டுமின்றி எதிர்மறையிலும (நலியாது பதி 22—7, முள்காது நற் 65-1 போன்ற சொற்களில்) வருதல் காணத்தக்கது. இவ்வகை எடுத்துக்காட்டுக்களையும் உரையாசிரியர்கள் பின்னர்த் தந்திருப்பது காணத்தக்கது.

### 3 1.3 3 சூழல்கள்

இவ் விகுதி

1) —க்—, —ந்த்—, —த்—, —ட், —ற்— ஆகிய இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்

2) எதிர்மறை காட்டும் —ஆத்— இடைநிலைக்குப் பின் னரும் வரும்.

#### 3.1.3.3.1 பலவேறு இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்

முன்னர்க் குறிப்பிட்டபடி இச்சூழலிலேயே இவ்விகுதி அதிகமாகக் காணப்படுகிறது எனக் கருதலாம். எடுத்துக்காட் டாக, பதிற்றுப்பத்தில் இது முன்னூற்று ஐம்பத்து நான்கு இடங்களில் வர எதிர்மறையில் நாற்பத்தெட்டு இடங்களில்

மட்டுமே வந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இதே நிலையினைத்தான் பிற இலக்கியங்களிலும் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| புக்கு | அடைந்து | பதி 68—10, அகம் 280—9<br>நற் 42—7, புறம் 67—10<br>பத்து 1—45, பரி 5—1<br>கலி 50—3, குறள் 835<br>சிலம்பு 3—172, மணி 16—46 |
| நக்கு | நகைத்து | குறு 401—5, புரி 1—21<br>கலி 61—22, சிலம்பு 10—43<br>மணி 14—36 |
| தொக்கு | திரண்டு | அகம் 341—10, நற் 337—6<br>புறம் 37—8, பத்து 9—215<br>கலி 68—7, குறள் 545<br>மணி 12—73 |
| கண்டு | பார்த்து | பதி 15—15, ஐங் 10—3<br>அகம் 5—26, நற் 27—10<br>குறு 52—2, புறம் 25—14<br>பத்து 6—16, பரி 6—43<br>கலி 39—20, குறள் 399<br>சிலம்பு 1—38, மணி 3—115 |
| அவித்து | சிதைத்து | பதி 30—15 |
| உடைத்து | உடைத்து | ஐங் 81—1 |
| அலைத்து | விரித்து | அகம் 180—6 |
| கெடுத்து | தவறுண்டு | நற் 182—5 |
| சுவைத்து | சுவைத்து | குறு 307—7 |
| அறுத்து | உடைத்து | புறம் 331—1 |
| அழித்து | அழிக்கப்பட்டு | பத்து 6—211 |
| துடைத்து | தூயதாக்கி | பரி 4—1 |
| அமைத்து | அமைத்து | கலி 96—16 |

| | | |
|---|---|---|
| கறுத்து | செற்றங் கொண்டு | குறள் 312 |
| எடுத்து | எடுத்து | சிலம்பு 9—27 |
| கொடுத்து | கொடுத்து | மணி 16—76 |
| அகன்று | விரிந்து | பதி 72—12 |
| ஆர்ந்து | உண்டு | ஐங்416—2 |
| அதிர்ந்து | அதிர்ந்து | அகம் 346—14 |
| படர்ந்து | மேற்கொண்டு | நற் 217—6 |
| சுமந்து | மேற்கொண்டு | குறு 195—2 |
| கசிந்து | இன்புற்று | புறம் 19—16 |
| உணர்ந்து | உணர்ந்து | பத்து 6—478 |
| போந்து | வந்து | பரி 20—104 |
| ஆராய்ந்து | ஆராய்ந்து | கலி 84—17 |
| அறிந்து | அறிந்து | குறள் 123 |
| அளந்து | அளந்து | சிலம்பு 3—151 |
| எறிந்து | எறிந்து | மணி 4—23 |

3. 1. 3. 3. 2 எதிர்மறை காட்டும் -ஆத்- இடைநிலைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அறியாது | அறியாது | பதி 21—30 |
| அகலாது | செல்லாது | ஐங் 499—3 |
| அஞ்சாது | அஞ்சாமல் | அகம் 281—3 |
| சினவாது | சினவாது | நற் 100—6 |
| செல்லாது | அமையாது | குறு 265—1 |
| ஈயாது | கொடுக்காது | புறம் 235—20 |
| வீயாது | மாறுமல் | பத்து 10-76 |
| பிரியாது | பிரியாது | பரி 18-56 |
| அருளாது | அருளாதே | கலி 53—16 |
| ஓவாது | இடைவிடாது | குறள் 933 |
| காணாது | காணாமையின் | சிலம்பு 18—17 |

நீங்காது  போகாமல்  மணி 3—72

3.1 3.4 பொருள்

இவ்விகுதி வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப்பொருள், உடனிகழ்ச்சிப்பொருள், நிலைமைப்பொருள், காரணப்பொருள், தாக்கப்பொருள், வினையடைப்பொருள் ஆகிய பொருள்களில் வரக் காண்கிறோம். இப்பொருள்கள் பற்றி முன்னரே குறிப்பிடப்பட்டது. இவ்விகுதி எச்சங்கள் பொருளிலேயே மிக துணைநிகழ்ச்சி அதிகமாக வந்துள்ளது.

3.1.3.4.1 வரிசைப்பொருள்

பதிற்றுப்பத்தில் வரும்

"புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி"  பதி 74 - 10

என்ற அடிகளில் வரும் உதிர்த்து, களைந்து, கட்டி ஆகிய காலவெச்சங்கள் வரிசைப்பொருளில் வருதல் காணலாம்.

"புள்ளியினை உடைய மான்தோலின் உட்புறத்துத் தசையைக் களைந்து, ஏனை அழுக்குகளையும் போக்கி எஞ்சிநின்ற ஒளிவீசுகின்ற வட்டமாக அறுத்த தோலின் விளிம்பிலே இனமாகச் சேரக் கட்டி" என வரிசைப்பொருள் காட்டி வருகின்றது. இது போன்றே

"சென்றனன் மன்றவென் மகளே
பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே"

ஐங் 377 - 3 - 4

(என் அரும்பெறற் செல்வி பந்தும் பாவையும் கழங்குமாகிய இவையிற்றை எம்பால் விட்டு வைத்து ... ... போயினள்)

என வரும் ஐங்குறுநூற்றடிகளில் வரும் "ஒழித்து" என்ற எச்சமும்

"நல்வரல் இளமுலை நோக்கு நெடிதுநினைந்து
நில்லாது பெயர்ந்தனன் ஒருவன் ........ "அகம் 180 - 8

எனவரும் அடிகளில் நினைந்து என்ற எச்சமும் (ஒரு தலைவன் நல்ல வளர்ச்சியையுடைய இளைய முலையைப்பார்த்து ஏதோ நீள நினைந்து பின் தாழ்க்காது போயினன்) இப்பொருளில் வந்துள்ளன. இவற்றைப் போன்றே

"... ... சென்மதி நீயே பெருமலை
வாங்கமை பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே" நற் 276 – 8

(பெரிய மலையின் கண்ணே தோன்றி வளைந்த மூங்கிலாலாக்கிய குழாயில் நிரப்பி முற்றவைத்த கள்ளைப் பருகி வேங்கை மரத்தையுடைய முன்றிலிலே யாம் அயருங் குரவையையும் கண்டு மகிழ்ந்து பின் நாள் நின் ஊரை அடைவாயாக) என வரும் அடிகளில் காணப்படும் காலவெச்சங்கள் இப்பொருளையே காட்டி நிற்கின்றன. இதுபோன்றே குறுந்தொகையில்

"... ... தொண்டியன்னவென் நலந்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே'
குறு 238-4

என்ற அடிகளும் இப்பொருளைத் தருகின்றன.

பொருள் எழுதும் ஆசிரியர் "என்பால் தந்துவிட்டு... நீ பெற்றுக் கொண்டு செல்வாயாக" என எழுதுவது காண்க.

"... ... வேற்றுப்புல திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" புறம் 31 – 12

(பகைப்புலத்தின்கண்ணே தங்கிவிட்டு கீழ்கடல் பின்னதாக மேல் கடலினது பெரிய தலையையுடைய திரை நினது குதிரையினது குளம்பை யலைப்ப வலமாக முறையே வருதலு

முண்டாமென்று சுழன்று நெஞ்சம் நடுங்கும் அவலம் பரப்ப துயிலாத கண்ணையுடையவாயின வடநாட்டுள்ள அரசுகள்) என வருதல் காண்க.

"ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... பாலார்ந்து
அமளித் துஞ்சும் அழகுடை நல்லில்" பத்து 4 - 249

ஏறி ஊரப்படாத நல்ல சிறுதேரை உருட்டிக்கொண்டு திரிந்த பிள்ளைகள் பாலை நிரம்ப உண்டு தமது படுக்கையிலே துயில் கொள்ளும் அழகையுடைத்தாகிய நல்ல இல்) என்பதில் பார்ந்து விட்டுப் படுக்கையில் துயில் கொள்ளும் எனவே வும், பரிபாடலில்

"பொதிர்த்த முலையிடைப் பூசிச் சந்தனம்
உதிர்த்துப் பின்னுற ஊட்டுவாள் விரும்பும்"
பரி 21—25

பொங்கிய முலையின் மேல் சந்தனத்தைப் பூசி .........மேலும் மணமுடைத்தாக்குதற்பூசப்பட்ட அச்சந்தனத்தை உதிர்த்து மீண்டும் மீண்டும் பூசாநிற்கும் இவளுடைய காமவிருப்பந் தான்றும் மெய்ப்பாட்டினையும்)
எனவும்

"நாணுச் சிறையழித்து நண்பகல் வந்த வவ்
வியாணர்ப் புதுப்புன லாடினாய் முன்மாலை" கலி 98-17

(நாணாகிய அணையை முறித்துப் பலருங் காணும்படி பகற் பொழுதிலே வந்த அந்தப் புதுவருவாயை யுடைய புதுப் புனலை.........மாலைக் காலத்திற்கு முன்னே சென்று ஆடி னாய்)

எனவும்

"சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து" குறள் 1183)

(இக் காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து என் மேனியழகினையும் நாணினையும் அவர் கொண்டு போயி னார்)

எனவும்

"கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்தல் அழித்துப் போனா ரொருவர்"

சிலம்பு 7-43-2

(தாழையை வேலியாக உடைய இக் கழியின்பால் வந்து நம் முடைய விளையாட்டை மறப்பித்துச் சென்றார் ஒருவர்)
எனவும்

மணிமே கலைதன் மதிமுகந் தன்னுள்
......... ...... ... .......... .........
கடைமணி யுகுநீர் கண்டன னாயிற்
படையிட்டு நடுங்குங் காமன்........." மணி 3—20

(இம் மணிமேகலையின் நிறைமதி போன்ற திருமுகத்தின் கண் அமைந்த . ...கண்ணின் மணியின் கடைப்பகுதியினின்றும் துன்பக் கண்ணீரைக் கண்டுளனாயின் காமவேள் தன் படைக் கலன்களை நிலத்திலே எறிந்துவிட்டு ஆற்றொணாத் துயரத் தாலே நடுங்குவான் அல்லனோ?) எனவும் வ ந்தல் காணக.

### 3.1.3.4.2 துணைநிகழ்ச்சிப் பொருள்

இவ்விகுதி துணைநிகழ்ச்சிப் பொருளிலேயே மிக அதிக மான இடங்களில் வந்துள்ளது.

"......நல்லமர் கடந்து மறங் கெடுத்துக்
கடுஞ்சின வேந்தர் செம்ம றொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும" பதி 70—9

(நல்ல போர்களை வஞ்சியாது பொருதழித்து அவருடைய போர்வன்மையைச் சிதைத்து இறுதியாக அவர் தலைமை யினையு மறக் கெடுத்த வெற்றிபொருந்திய பெரிய கழல ணிந்த வீரர்க்குத் தலைவனே)

என வரும் அடிகளில் நல்லமர் கடத்தல் மறம் கெடுப்பதற்குத் துணையாக இருப்பது காண்க.

"வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனை............" ஐங் 309-1

(பிரிதற்கரிய இளவேனிற் பருவத்தையுடைய இச் சித்திரைத் திங்களிலே இவளைக் கைவிட்டு வெப்பமுடைய சுரத்தைக் கடந்து பொருளீட்டற் பொருட்டுச் செல்லும் செலவினை மேற்கொண்டனை)
எனவும்

"...........புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்"
அகம் 207—3

(நிமித்தம் பார்த்துப் படைக்கலங்களை அமைத்துக் கொண் டெழுந்த பெரிய வீரச்செயல்களைப் புரியும் ஆடவர்)
எனவும்

"........வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
.................................சீறூர்" நற் 3—3

(அரங்கை வட்டினாலே கீறி ஏனைத் தொழிலொன்றும் கற்றறியாத சிறுவர்கள் நெல்லியங்காயை வட்டாகக் கொண்டு ஆடாநிற்கும்...... சீறூர்)
எனவும்

"நீயளந் தறிவை நின் புரைமை......" குறு 256—6

(நீயே நினது உயர்வினை அளவிட்டறியும் தகுதியுடையை)
எனவும்

"..... களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை"
புறம் 104—3

(யானையைக் கொன்று வீழ்க்கும் இழுத்தலையுடைய முதலை யையொக்கும் என் இறைவன்),

எனவும்

"..................நெல் லர்ந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறும்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை"

பத்து 2—242

(நெல்லையறுத்துச் சூட்டை மலையாக அடுக்கி நாள்தோறும் கடா விட்டு மேருவென்னும்படி திரட்டின தொலையாத நெற் பொலி)

எனவும்

"..........வெற்றுயர் கூரச்
சுடுமிறை யாற்றிசி னடிசேர்ந்து......" பரி 8—78

(இறைவன் ஒறுக்குமுன்னரே நீ அவ்விறைவனுடைய திருவடியை அடைந்து வேண்டி அவன் சினத்தை ஆற்றுவிப்பாயாக)

"பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துக"

கலி 33-4

(அரும்பவிழ்கின்ற முருக்கினுடைய இதழ்கள் அழகையுடைய குளங்களிலே காம்பினின்றுங் கழன்று வீழ)

எனவும்

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்" குறள் 1062

(இவ்வுலகத்தைப் படைத்தவன் இரந்தும் உயிர் வாழ்தலை வேண்டி விதித்தானாயின் அக்கொடியோன் தானும் அவரைப் போன்று எங்கும் அலமந்து கெடுவானாக)

எனவும்

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் ஐயர்"
சிலப்பு 7—17—1

(நின் மூத்தோர் கடலிற் புகுந்து உயிர்களைக் கொன்று வாழா நிற்பர்)

எனவும்,

"குணதிசை மருங்கின் நாண்முதிர் மதியமும்
குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்" மணி 5–119

(கீழ்த் திசையினின்றும் எழாநின்ற வளர்பிறைப் பக்கத்து நாளெல்லாம் முதிர்ந்தமையாலே முழுவுருவமும் பெற்ற நிறைத் திங்கள் மண்டிலமும் மேற்றிசையிலே சென்று வீழ்கின்ற ஞாயிற்று மண்டிலமும் வெள்ளியாலியன்ற வெள்ளைத் தோடாகவும் பொன்னாலியன்ற செந்தோடாகவும்)
எனவும் வருதல் காண்க.

### 3.1.3.4.3 உடனிகழ்ச்சிப் பொருள்

வரிசைப் பொருள், துணைநிகழ்ச்சிப்பொருள் ஆகியவற்றை அடுத்து இவ்விகுதி இப்பொருளிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் வரக் காண்கிறோம்.

"………மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசல்………" பதி 31—2

(மக்கள் தம் தலைமேற் கைகூப்பி ஒருங்கு கூடிச் செய்யும் பேராரவாரம்) என வருதல் காண்க. கைகூப்பிக்கொண்டு ஒருங்குகூடி என இதனை விரிக்க முடியும்.

"பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கால் மராஅத்த வழிநிழ லிருந்தோர்
யார் கொல்……………" ஐங் 387—1

(பசிய நெல்லியின் காய்கள் பலவற்றையும் இருவரும் கூடித் தின்றுகொண்டு சிவந்த அடியினையுடைய மராமரத்தினது கோடு கோடாக அமைந்த நிரம்பாத புன்னிழலிலே வீற்றிருக்கும் இம்மேன் மக்கள்தாம் யாவர் ஈன்ற மக்களோ?)

(இதற்கு உரை எழுதப் போந்தவர் கூடித் தின்று கொண்டு ..:......என எழுதுதல் காண்க.)
எனவும்,

"பகலுரு உறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே"

அகம் 122—10

(பகலின் ஒளியினை யொக்க நிலவினைத் தந்து வானின்கண் அகற்சி வாய்ந்த மதியம் விளங்கிப் பரவும்)
எனவும்,

"குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்"

நற் 85—4

(குறுகிய வரிகளையுடைய கரிய புலிக்கு அச்சமுற்று விரைந்து செல்லாத நடையையுடைய தன் கன்றைப் பிடியானை ஆண்டு நின்று காத்துத் தங்காநிற்கும்)
எனவும்,

"யானை கைமடித் துயவும்
கானமும் இனியவாம் நும்மொடு வரினே"

குறு 388-6

(யானை கையை வளைத்துக் கொண்டு வருந்துதற்குக் காரணமான பாலைநிலங்களும் நும்மோடே வருமிடத்துத் தலைவிக்கு இனியனவே ஆகும்)
எனவும்,

"வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமும்......" புறம் 35-24

(வருகின்ற படையை யெதிர்நின்று பொறுத்து அது சரிந்து மீளும் புறக்கடை கண்டு ஆர்த்துக்கொண்டு நின் போர் செய் படைதரும் வெற்றியும்)

எனவும்,

"பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கை";

பத்து 4-431

(பொன்னைக் கொழித்துக் கொண்டு குதிக்கும் மக்கள் கடத் தற் கரிதாகிய கங்கையாகிய யாறு)
எனவும்

"அருவி சொரிந்த திரையிற் றுரந்து
நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
......... ......... ......... .........
நெடுநீர் மலிபுன னீண்மாடக் கூடற்
கடிமதில் பெய்யும் பொழுது" பரி 20—103

(மலையினின்றும் வீழும் அருவி கொணர்ந்து தன்பாற் சொரிந்த மலர்களை வையையாறு தன் அலைகளாலே தள்ளிக்கொண்டு நீண்ட மாடங்களையுடைய மதுரைக்கு அரணாக அமைந்த மதிலின்கண் உள்ள நெடிய பெரிய சுருங்கையினூடே வந்து பெருந்தன்மை மிக்க நீரைச் சொரியும் பொழுது)
எனவும்.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ
டொழுகலான்" கலி 39—1

(எம்மோடே கூடி விருப்பத்தையுடைய கடிய நீரையாடு கின்றவள் கால் தளர்ந்து அஞ்சித் தாமரை போலுங் கண் ணைப் புதைத்து அந்நீரோடே போகையினாலே)
எனவும்.

"மடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்" குறள் 1028

(தங் குடியினை உயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச் செய்து கொண்டு மானத்தை யுங் கருதுவராயின் குடிகெடும். ஆகலான் அவர்க்குக் கால நியதிஇல்லை)
எனவும்.

"ஊழிதொ றூழி உலகங் காத்து
வாழ்க எங்கோ வாழிய பெரிதென" சிலம்பு 27-139

(எம் வேந்தே பல்லூழி காலம் இவ்வுலகினைக் காவல் செய்து வாழ்வாயாக)

எனவும்,

"ஒலித்தொருங் கீண்டிய ஊர்க்குறு மாக்களும்''
மணி 15-59

(பெரிதும் ஆரவாரம் செய்து ஒருங்கே குழுமிய அவ்வூர்ச் சிறுவர்களும்)

எனவும் வருதல் காண்க.

### 3.1 3 4.4 நிலைமைப்பொருள்

உடனிகழ்ச்சிப் பொருளை அடுத்து இப்பொருளிலேயே இவ்விகுதி அதிகமாக வரக் காண்கிறோம்.

"தீஞ்சுனை நீர்மலர் மிலைந்து......
......... ......... ......
கடுஞ்சின வேந்தர் செம்ம றொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும" பதி 70—8

எனவரும் அடிகளில் 'மலைந்து' என்பது நிலைமைப் பொருளைத் தருகின்றது.

(இனிய சுனையிடத்து மலர்ந்த குவளைப்பூ விரவிய கண்ணியைச் சூடி ... மிக்க சினத்தையுடைய பகைமன்னர் தலைமையினை அறக்கெடுத்த வெற்றி பொருந்திய பெரிய கழலணிந்த வீரர்க்குத் தலைவனே)

கடுஞ்சின வேந்தரின் செம்மலைத் தொலைக்கும் போது அவன் என்ன நிலையில் இருந்தான் என்பதை விளக்கும் நிலையில் இது நிலைமைப்பொருளைத் தருவதாகக் கொள்ளலாம். குவளைப் பூக் கண்ணியைச் சூடியிருந்தான் அவன் என்னும் பொருள் தரும் நிலையினைக் காணலாம்.

"இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே"
ஐங் 408—3

எழு பிறப்புந் தீயவை தீண்டா' என்னும் கொள்கைக்குக் காரணமாக தன் நன்மகனோடு சிறப்புற்று உலகின்புறும்படி இனிதே வீற்றிருந்தனன்) (பொலிவோடு வீற்றிருந்தான்).
எனவும்

"புலாவஞ் சேரி ...........
...............நீருடுத்து
இன்னா உறையுட்டு ஆயினும்" அகம் 200—2

(புலால் நாறும் சேரியாகிய எம் பதி நீர் சூழப் பெற்று பொலி வற்ற உறையுளையுடையதாயினும்)
எனவும்

"...... ......... தோடுபுலர்ந்து
அருவியின் ஒலித்தல் ஆனா
கொய்பதங் கொள்ளுநாங் கூஉந் தினையே"
நற் 313—9

(கதிர் கொய்யும் பதம் கொள்ளாநின்ற நாம் கூவிக் கிளி யோப்பும் தினைப்புனமெல்லாம் மேல் இலை காய்ந்து மலை யருவி ஒலித்தாற்போல ஒலித்தல் அமையாவா யிராநின்றன)
எனவும்

"இழையணிந் தியல்வருங் கொடுஞ்சி நெடுந்தேர்"
குறு 345—1

(பொற்படைகளால் ஒப்பனை செய்யப்பட்டு இயங்குதலைச் செய்யும் கொடுஞ்சியையுடைய நெடிய தேரினை)
எனவும்

"நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
..................... நின்றோன்" புறம் 773—4

(வேம்பினது ஒள்ளிய தளிரை நெடிய கொடியாகிய உழிஞைக் கொடியோடு சூடி...நின்றவன்)
எனவும்

"...... ......... முள்ளுடுத்

தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பின்"

பத்து 4—184.

(முள்ளுத் தன்னிடத்தே சூழ்ந்து எழுகின்றவிடத்தே தொடரி முதலிய காடுகள் சூழ வளர்ந்த தொழுக்களையுடைய நிலத் தின்கண்)

எனவும்,

"தேறித் தெளிந்து ............

......... ...............

துறக்கத் தொழிலைத்தன் னீர்நிழற் காட்டும்

.................

...............யாறு" பரி 12—82

(வையையாறு மிகத் தெளிந்து வானுலகத்தே நிகழும் தொழிலைத் தனது அந்நீர்நிழலிலே காட்டாநிற்கும்)

எனவும்

"மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம் அலர்வேய"

கலி 33—6

(மரங்களெல்லாம் அரும்புகள் அலர்ந்து பல மணிகளைச் சூடினாற்போலப் பூக்களைச் சூட)

எனவும்

"வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்

புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று" குறள் 273

(வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையார் வேடத் தைக் கொண்டு தான் அதன் வழிப்படுதல், பசு காவலர் கடியாமற் புலியின் தோலைப் போர்த்துப் பைங்கூழை எனவும் மேய்ந்தாற் போலும்)

"நன்னித் திலத்தின் பூண் அணிந்து நலஞ்சார் பவளக் கலையுடுத்துச

செந்நெற் பழனக் கழனிதொறுந் திரையு லாவு

கடற் சேர்ப்ப......" சிலம்பு-7-37-1

(நல்ல முத்தாகிய பூணினை அணிந்து நன்மை பொருந்திய பவளமாகிய மேகலையை உடுத்துச் செந்நெற் பயிர்களை யுடைய மருதநிலத்துக் கழனிதொறும், அலைகள் உலாவுகின்ற கடலின் கரையையுடைய தலைவனே)

எனவும்

"... ... ... ... ...துணிச்சித ருடுத்து
வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி"

மணி 11–109

(நைந்த கந்தைத்துணியை உடுத்துத் தம் வயிறு தம்மை இடையறாது துன்புறுத்தும் பெரும் பசிக்கு ஆற்றாது அலமந்து)

எனவும் வருதல் காண்க

### 3. 1. 3. 4. 5 காரணப்பொருள்

இவ்விகுதி பழந்தமிழ் இலக்கியங்களில் காரணப் பொருளிலும் பலவேறு இடங்களில் வந்துள்ளமை காணலாம்.

பதிற்றுப்பத்தில்

"நனந்தலை வேந்தர் தாரழிந் தலற" பதி 55-17

எனவரும் அடியில் இச்காலவெச்சம் காரணப் பொருளின் வரக் காணலாம். இதற்கு உரை எழுதப்போந்த உரையாசிரியர் "அகன்ற இடத்தையுடைய வேந்தர் நாடோறும் தமது தூசிப் படை கெடுதலால் ஆற்றாது புலம்ப" என எழுதுதல்காண்க.

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

"... ... அருஞ்சுர நலியா
தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே" ஐங் 325-3

(எம்மாற் பெரிதும் விரும்பப்படுகின்ற எம் ஆருயிர்க் காதலியின் அமிழ்தன்ன நற்பண்புகளையே நெஞ்சத்திற் குறுதுணையாகக் கொண்டமையானே கடத்தற்கரிய நெறிகள் என்னை வருத்த மாட்டாவாயின காண்).

எனவும்

"... ... ... ... ... களிபட்டு
வில்லோர் குறும்பில் ததும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே"
அகம் 261-13

(விலலினையுடைய கானவரது சீறூரில் (அவர்தாம் கள்ளுண்டு களிப்புறலால் ஒலிக்கும் வலிய முகத்தினையுடைய கடிய துடியின் ஒலியினை யாம் கேட்டமையின் (தலைவி அஞ்சுவாளென உட்கொண்டு)
எனவும்

"ஊரலர் தூற்றும் கௌவையும் நாணிட்டு
உரையவற்கு உரையாம் ஆயினும்..." நற் 263-2

(ஊரார் அலர் தூற்றும் பழிச் சொல்லைச் சொல்ல வேண்டிய நங் காதலனுக்கு நாணமேலீட்டினால் சொல்லா தொழிந்தோமெனினும்)
எனவும்

"... ... ... ... யானை
குளகுமென் றாள்மதம் போல" குறு 136-3

(யானை அதிங்கத்தின் கவளந் தின்றவழித் தோன்றி அதனை ஆளாநின்ற மதத்தைப் போல)
எனவும்

"பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே ... ... ..." புறம் 345-6

(சுமை மிகுவதால் நிலமும் சுளியும்படியாக வந்தவர் பலராவர்)
எனவும்

"நிணவூன்சுட் டுருக்கமைய" பத்து 6-755

(நிணத்தையுடைய தசைகள் சுடுதலாலே அந்நிணம் உருகுதல் பொருந்த)
எனவும்

"கள்ளொடு காமம் கலந்து கரைவாங்கும்
வெள்ளந் தருமிப் புனல்" பரி 10-69

(இவ்வாற்றால்கள்ளையும் காமத்தையும் பொருந்துதலால் எல்லையற்ற இன்பவெள்ளத்தைத் தராநின்றது நமது வையையிற்பெருகிய இப்புதுப்புனல்)

எனவும்

"பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்
தாயோ" கலி 14-10

(மயக்கம் கொண்ட அறியாமையையுடைய நின்னறிவுப் பொருளல்லது நன்கு, மதிக்கும் பொருளும் வேறுண்டோ வென்று நின்னை மயக்கப்பட்டு அன்பை மறந்தாயோ)

எனவும்

"நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே யொழிய விடல்" குறள் 113

(நன்மையே பயந்ததாயினும் நடுவுநிற்றலை யொழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே யொழிய விடுக)

எனவும்

"மாலதி யென்பாள் மாற்றாள் குழவியைப்
பால்சுரந் தூட்டப் பழவினை யுருத்துக்
கூற்றுயிர் கொள்ள........." சிலம்பு 30-74

(மாலதி எனப்படுவாளொரு பார்ப்பனி தன் மாற்றாளுடைய குழவிக்குத் தன் முலைப்பால் ஊறப்பெற்று அருத்த அக்காலை முன்னைத் தீவினை தோன்றலானே பால் விக்க அது காரணமாக அக்குழவியின் உயிரைக் கூற்றுவன் கவர்ந்து செல்ல) எனவும்

"உதய குமரன் உள்ளம் பிறழ்ந்து
விரைபரி நெடுந்தேர் மேற்சென் றேறி" மணி 18-112

(உந்தக்குமரனுடைய உள்ளம் திரிந்துவிட்டமையாலே ..........
விரைந்து செல்லும் இயல்புடைய குதிரைகளைப் பூட்டி நிறுத்தப்பட்ட தனது நெடிய தேரின் மேற் சென்று ஏறி)
எனவும் பழந்தமிழ் நூல்களில் இவ்விகுதி பல்வேறு இடங்களில் காரணப்பொருள் காட்டி வருவதைக் காணலாம்.

### 3. 1. 3. 4. 6 தாக்கப்பொருள்

இப்பொருளில் இவ்விகுதி மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே வரக் காண்கிறோம். பதிற்றுப்பத்து (4), ஐங்குறுநூறு (1), அகம் (5), நற்றிணை (3), புறம் (2), பத்துப்பாட்டு (2) பரிபாடல் (3), கலித்தொகை (1), குறள் (2) சிலம்பு (2), ஆகிய நூல்களில் மட்டுமே இப்பொருளில் வந்துள்ளது.

பதிற்றுப்பத்தில்

"கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி" பதி 16-1

(முனைச் சிகரங்களுடன் மாறாட எடுத்த வளைந்த இடத்தை யுடைய புற மதிலும்). உறழ்ந்து என்பதை மாறாட எனத் திரித்துப் பொருள் கூறியிருத்தல் காண்க. உறழ்ந்து, "உறழ வெனத் திரிக்க" என்பார் உரைகாரர்.

"... ... ... ... ... பாடு சிறந்து
கடியக் கடவுமதி பாக" ஐங் 484-2

(பாகனே! நின்னுடைய தொழிற்பெருமை மேலும் சிறக்கும்படி விரையத் தேரினைச் செலுத்துவாயாக).

எனவும்

"நிழல்தேய்ந் துலறிய மரத்த ... காடு" அகம் 1-11

(நிழல் சுருங்க வற்றிய மரங்களையுடைய ... காடு)

எனவும்

அருஞ்சுரங் கொடி திமிய ஆழி போழ்ந்தவர்
நெடுந்தேர் இன்னொலி இரவுந் தோன்றாது

அகம் 338-2

(அரும்பின் கொடிகள் துண்டித்து விழும்படி தேருருள் ஊர்ந்து வருமாறு அவருடைய நெடிய தேரின் இனிய ஒலி இரவு இத்துணைப் பொழுதாகியும் தோன்றினபாடில்லை).

எனவும்

"பூப்போ லுண்கண் பசந்ததோ ணுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று..." புறம் 96-4

(பூப்போலும் வடிவினையுடைய மையுண்ட கண்கள் பசப்ப தோள்மெலிய தனைப் பார்த்த மகளிரை நெஞ்சு பிணித்த தனால்).

எனவும்

"... ... ... ஐவனம் வெண்ணெல்
... ... ... ... ...
காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சி"
பத்து 10-115

(ஐவன நெல்லும் வெண்ணெல்லும்...காற்று மிகப்படுகின்ற ஆரவாரத்தாலே கவிழ்ந்து ஒலிபடச் சாய்ந்து)

"... ... ... உருமுப் பெயர்த்தந்து
வாங்கி முயங்கி வயப்பிடி கால்கோத்து" பரி 10-50

(இடி போலும் அதன் முழக்கம் ஒழியுமாறு அதனை அப்புலிமுக மாடத்தினின்றும் நீக்கி அப்பிடி யானை சிதையாதபடி அதனை அணைவித்து).

எனவும்

"ஒன்று இரப்பான்போல் எளிவந்துஞ் செல்லும்..."
கலி 47-1

(என்னிடத்து ஒரு காரியத்தை இரந்து நிற்பான் போலே தன்னைப் பிறரால் இகழப்பட்டு எளியராந் தன்மை தோன்றவும் சில மொழி கூறும்)

எனவும்

"பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து" குறள் 1229

(மதி மருளும் வகை மாலை வரும்பொழுது இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும்)

"எனவு வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடுவேலே
சிலம்பு 24-10-3

(வளரும் மலையினைச் சூழ வரும் அசுரனுடைய நெஞ்சு பிளக்கக் கிரவுஞ்ச மலையினை அழித்த நெடிய வேல்)

எனவும் இவ்விகுதி தாக்கப் பொருள் காட்டுதல் காண்க.

### 3. 1. 3. 4. 7 வினையடைப் பொருள்

பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்விகுதி வினையடைப் பொருளிலும் பலவேறு இடங்களில் வந்துள்ளது.

"வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை"
பதி 53—9

(வளைவு வளைவாகக் கட்டப்பட்டு வானளாவ உயர்ந்த மதிலும் ஆகிய இவ்வெயில்) என்பதில் வளைந்து என்பது வளைவாக எனப் பொருள் படுதல் காண்க.

"நளிந்துவந் துறையு நறுந்தண் மார்வ(ன்)
ஐங் 222—2

(நம் பொருட்டு அடுத்தடுத்துச் செறிய வந்து அளிசெய்து நம்மோடு தங்குதலைச் செய்யும் நறிய குளிர்ந்த மார்பினை யுடைய நம் பெருமான்) இங்கு நளிந்து என்பது செறிய அல்லது செறிவாக எனப்பொருள் தரக் காணலாம்.

"... ... ...சுழன்றுவரு கோடை" அகம் 104—14

(அழன்று வரும் மேற்காற்றினால்)

எனவும்

"... ... ... வல்விரைந்து
செல்க பாகநின் தேரே .. ... ..." நற் 242—5

(பாகனே! நின் தேர் மிக விரைந்து செல்வதாக)

எனவும்

... ... ...தனித்தேரா

தேர்வந்து பெயர்தந் தென்ப... ... குறு 2 6—3

(தனியூர் கூட ஒருபோதும் வந்து மீண்டுளது என்று கூறா நின்றனர்)

எனவும்

"என்சிறுமையி னிழித்து நோக்கான்" புறம் 87—20

(என் சிறுமை கண்டும் இகழ்ந்து நோக்காது)

"தொழுதி போக வலிந்தகப் பட்ட
மடநடை ஆமான்... ... ...குழவி" பத்து 10—499

(தன இனமெல்லாம் ஓடிவிட ஓடமாட்டாது வலிய அகப்பட்ட மடப்பத்தையுடைய ஆமானினது கன்று)

எனவும்

"மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்" பரி 6—9

(குளிர்ந்த அழகிய அந்நீர் பரந்து சென்று விரைந்து உழவு முதலிய தொழில்கள் பெருகும்படி தாவிச் செல்லா நின்றது)

எனவும்

"கடுந்திண் டேர் கடவி
நாமமர் காதலர் துணைத்தந்தார் விரைந்தே" கலி 27—25

(நாம் அமர்ந்த காதலர் கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தித் தாந்துணையாந் தன்மையை நமக்குத் தந்தார்)

எனவும்

"அமைந்தாங் கொழுகான் அளவயறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்" குறள் 474

(அயல்வேந்தரோடு பொருந்தி யொழுகுவதும் செய்யாது, தன் வலியளவறிவ துஞ் செய்யாது தன்னை வியந்து அவரோடு பகைத்த அரசன் விரையக் கெடும்)

எனவும்

"... ... ... உருகும்
மறிதெறித் தாடா ... ... ..." சிலம்பு 17-3-2

(ஆட்டுக் குட்டிகளும் துள்ளி விளையாடாமற் குழைந்து கிடக்கும்)

எனவும்

"காட்டிடை நல்ஆக் கதழ்ந்து கிளர்ந்தோட"
மணி 13-48

(நல்ல அந்தப் பசுவானது விரைந்து துள்ளிக்கொண்டு காட்டி னூடே புகுந்து ஓடி மறைய)

எனவும் வருதல் காண்க.

3. 1. 3 4 8. நோக்கப்பொருள்

இவ்விகுதி பழந்தமிழ்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்க, கலித்தொகையில் ஒரு இடத்திலும் சிலம்பில் ஒரு இடத்திலும் மட்டுமே இப்பொருளில் வரக் காண்கிறோம்.

"... ... ... போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்" கலி 26-23

(நங் காதலர் போர் செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவருடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலான நாடுகளைப் பெற்ற வெற்றியையுடையவர்) எனவரும் அடிகளில் மலைந்து என்பது "செய்தற்குப் என்ற பொருளில் வரும் நிலையில் நோக்கப் பொருள் குறித்தல் காண்க.

இதுபோன்றே சிலம்பிலும்

"பொலந்தெரி மாக்கள் கலங்களு ரொழித்தாங்கு
இலங்குகொடி யெடுக்கும் நலங்கிளர் வீதி"
சிலம்பு 14—203

(பொன்னின் வேற்றுமையைப் பகுத்தறியும் பொன் வாணிகர், கொள்வோர் எவ்விடத்து எப்பொன் உளதென்று ஐயுறுந் துன்பத்தை ஒழிப்ப, அவ்விடங்களில் இவ்விடத்து இப்பொன் உளதென விளக்கக் கொடியெடுக்கும் நன்மை மிக்க பொற் கடைத் தெரு)

எனவரும் அடிகளில் ஒழித்து என்னும் வினையெச்சம் ஒழிப்ப என்று நோக்கப்பொருளில் வந்துள்ளதைக் காண்கிறோம்.

### 3.1.3.4.9 தலைமைவினை

உலக மொழிகள் பலவற்றில் துணைவினை என்னும் இலக்கணக் கூறினைக் காணமுடிகின்றது. ஆங்கிலம், தமிழ், மலையாளம், கன்னடம் போன்ற மொழிகளில் எல்லாம் இவ் விலக்கணக் கூறு காணப்படுகிறது.

இவ்விலக்கணக் கூறு சொற் பொருள் (Lexical meaning) காட்டுவதில்லை என்பதும் இலக்கணப் பொருளையே (Grammatical meaning) காட்டும் என்பதும் மொழியியல் அறிஞர்கள் கண்ட முடிபு. மேலும் இது வினைகளுடன் வரும் நிலையில் வினைச் சொல்லில் காணப்படும் இலக்கணப்பொருளையே காட்டும் என எண்ணலாம்.

அவர் வந்தருளினார்
அவர் வந்திருந்தார்
அவர் வரவேண்டும்

போன்றவற்றில் காணப்படும் அருள், இரு, வேண்டும் போன்றவை இலக்கணப் பொருளையே காட்டி நிற்கின்றன.

துணைவினைகள் தலைமை வினைகளுடன் இணைந்து பொதுவாக ஒரு சொல் நீர்மைத்தாய் இருக்கும்.

அவர் வந்தாயிற்று
அவர் வரணும்

போன்ற இடங்கள் இத்தன்மையைக் காட்டும்.

எனினும் பல இடங்களில் இவற்றினிடையே சில ஒட்டுக் களையிட்டுக் கூறமுடியும்.

அவர் வரவாவேண்டும்
அவர் வரவும் பார்த்தார்
அவர் வந்தே யிருந்தார்
அவர் இறந்தா போனார்?

போன்றவை இப்பண்பினைக் காட்டும்.

இன்னும் ஒரு சில சொற்களையும் இவற்றினிடையே இட்டுக் கூறலாம்.

வரத்தான் வேண்டும்
வரத்தான் முடியும்
பயந்துதான் போனார்

இதைப் போன்றே

அவர் வர ஒன்றும் மாட்டார்

போன்றும் கூறமுடியும். இடையில் வரும் ஒட்டானாலும் சொல்லானாலும் அவையும் இலக்கணப் பொருள் காட்டுவனவாகவே அமையும். இத்தகைய பலவேறு பண்புகளைத் துணைவினையில் நம்மால் காணமுடியும் (**Agesthialingom, 1980: 1-33**).

இவ்வாறு வரும் துணைவினைகளும் காலவெச்சத்திற்குப் பின்னரும் குறையெச்சத்திற்குப் பின்னரும் வரும். மட்டுமன்றி வரலாம் போன்றவற்றில் காணப்படும் ஆம் என்ற துணை வினை (< ஆகும்) வரல் போன்ற தொழில் பெயருக்குப் பின்னரும் வருதல் காண்கிறோம்.

**குறையெச்சம்**

எ-டு வர வேண்டும்
வர மாட்டான்
வரக்கூடும்
வர முடியாது

**காலவெச்சம்**

எ-டு. வந்திருந்தான்
வந்தருளினார்

**தொழில் பெயர்**

வரல் + ஆம் → வரலாம்

பொதுவாகத் துணைவினைகள் பழந்தமிழில் காணப்படுவதில்லை என்றும் தற்காலத் தமிழில்தான் காணப்படுகின்றன என்றும் அறிஞர்கள் சிலர் எண்ணியிருந்தனர். இதற்குக் காரணம் மேனாட்டு மொழிகளின் செல்வாக்கு என்பர். ஆனால் பழந்தமிழ் இலக்கியங்களை ஆராயின் துணை வினைகளில் சில அன்றே தமிழ்மொழியில் வழக்கில் இருந்துள்ளன என்பது தெரிய வரும். இன்றைய தமிழில் காணப்படும் வளர்ச்சி அன்று இல்லையாயினும் அக்காலத்தில் துணைவினைகள் இருந்திருந்தன என்பதும் காலப்போக்கில் மிக வளர்ந்து உள்ளன என்பதும் தெரிய வரும்.

பழந்தமிழில் காலவெச்சங்களுக்குப் பின்னரும் குறையெச்சங்களுக்குப் பின்னரும் பலவேறு துணை வினைகள் வருகின்றன. காலவெச்சங்களுக்குப் பின்னர்

அருள்
இடு
இரு
ஈ
ஒழி
கொள்
செல்
விடு

ஆகியவை துணைவினைகளாக வந்து நிற்கின்றன.

3.1.3.4.9.1 அருள்

"அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே"

அகம் 98.26

(நம் தலைவர் உறுவித்த இவ்வல்லலைத் தெரிந்தருளுதலின் மணம் கமழும் நெடுவேள் நம் முன்னைய அழகினைத் தந்தருள்வன் எனின்...)

என்பதில் அருளி என்பது துணைவினையாக வந்திருத்தல் காண்க. மேலும் நல்குவன் என்பதற்கும் தந்தருள்வன் எனப் பொருள் எழுதுதல் காண்க.

"......வேட்டுவன் காழ்களைந் தருள" நற் 312-4

"...என்னயந் தருளி..." புறம் 208-3

"......நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளி" கலி 39-3

"ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி" கலி 41-41

"இலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளி"

சிலம்பு 10-161

"அந்நா ளவனுண் டருளிய அவ்வறம்" மணி 10-40

போன்றவற்றில் 'அருள்' என்னும் வினை துணைவினையாக வந்திருத்தல் காணத்தக்கது*

3, 1. 3. 4. 9. 2 இடு

"புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்"

அகம் 227—8

(புலியின் நிறத்தினைக் கொண்ட வேங்கைமரத்தினது பூங்கொம்புகள் பூக்கள் உதிர்தலால் தனிமையுற அவ்வேங்கையின் அடிமரத்தில் பாய்ந்திட்ட மிக்க வலியினையுடைய களிறு)

எனவரும் அகநானூற்று அடிகளில் பாய்ந்து என்னும் கால வெச்சம் தலைமைவினையாகவும், இட்ட என்பது துணை வினையாகவும் வந்திருத்தலைக் காணலாம்,

"உறுகண் மழவர் உருள்கீண் டிட்ட" அகம் 121—11

---

* சிலம்பு 12—22—4, 12-23-4, 15-134, 20-38, 24-19-1, 25-5, 27-66, 126

* மணி 5-31, 6-154, 26-47

"அணிவரை மருங்கின் ஐதுவளர்ந் திட்ட
மணியோர் தோட்ட மையார் ஏனல்"

நற் 344—1

"பிடிபிளந் திட்ட நாரில்வெண் கோட்டுக்
கொடிறு ... ... ... ... ... ... ..." நற் 107—2

"தொடி கழித்திடுதல்யான் யாயஞ் சுவலே"

புறம் 83—2

"சந்து நீவிப் புன்முடிந் திடுமின்" பத்து 10—393

"நெஞ்சம் பிளந்திட்டு ... ... ..." கலி 101—19

"வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று"

குறள் 931

"திசையிரு நான்கும் அதிர்ந்திடும் ..." சிலம்பு 20—4

"ஆய தொழிலை யடைந்திட மாட்டா"

மணி 27— 45

போன்றவற்றில் 'இடு'* துணை வினையாக வந்துள்ளது.

3.1.3.4.9.3 இரு

"மறந்தமைந் திராஅ நெஞ்சம் நோவேன்" அகம் 219-11
(சிறிதும் மறந்திருத்தலில்லாத நெஞ்சத்தால் வருந்துவேன் அல்லேன்)

என வரும் அகநானூற்று அடியில் மறந்து என்னும் கால வெச்சம் தலைமைவினையாகவும், இரா என்பது துணை வினையாகவும் வந்துள்ளன.

"இளையோர் இல்லிடத் திற்செறிந் திருத்தல்"

நற் 68-2

---

*புறம் 42-14, 114-3, 4, 278-5, 325-4
கலி 101-25, 103-43
குறள் 1030
சிலம்பு 1-52, 16-178, 20-11, 27-191
மணி 1-22, 3-35, 7-8, 10-41, 27-114, 200, 230, 29-8
30-255, 257

"பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே" நற் 153-10

"படுமுடை பருந்துபார்த் திருக்கும்" குறு 283-7

"மனைத்தொலைந் திருந்தவென் வாணுதல்..."
புறம் 211-22

"......வரவுபார்த் திருக்கும்" பத்து 4-100*

"அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா"
கலி 129-5

"கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்"
சிலம்பு 9-40*

"நல்லாய் ஆணுரு நான்கொண் டிருந்தேன்"
மணி 23-95*

3.1.3.4.9 4. ஈ

இத் துணைவினை கலித்தொகை ஒழிந்த பிற பின்பழந் தமிழ் நூல்களில் காணப்படாத நிலையில் இதனை ஒரு முன்பழந்தமிழ்க் கூறாகவே கருதலாம். ஐங்குறுநூற்றில் இத்துணைவினை மட்டுமே வந்துள்ளதும், பிற துணைவினை கள் எதுவும் காணப்படாமையும் இங்கே குறிப்பிடத்தக்கன. இத்துணைவினை பெரும்பான்மையும் ஏவல்வினையிலேயே வரக்காணுகிறோம்[1].

---

பத்து 6-342, 10-49
சிலம்பு 11-31, 56. 213, 13-16, 72, 16-156. 19-66
மணி 6.132, 14-38, 29-84,94

1. இத் துணைவினை பற்றிய விரிவான ஆய்வை "Imperative in Old Tamil" (Indian Linguistics, Vol. 41 1981),
"ஏவல்வினை" (மொழியியல் 3, 2 & 3 1979-80) ஆகிய ஆசிரியரின் கட்டுரைகளில் காண்க.

ஐங்குறுநூற்றில்

"அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே" ஐங் 391. 6

என வரும் அடியில் ஈமே என்பது துணைவினையாக வந்து உள்ளது. உரையாசிரியரும் "அழகிய சிலவாகிய கூந்தலை யுடைய என் மகளை ...மீண்டும் எம் மனைக்கே விரைந்து வரும்படி நீ கரைந்தருளவேண்டும்" என நற்றாய் காக்கையை இரந்து கூறுவதாக உரை எழுதுவதும், ஈம் என்னும் துணை வினைக்கு அருள் என்னும் துணைவினையை இட்டுப் பொருள் எழுதுவதும் இங்குக் குறிப்பிடத் தக்கன. ஐங்குறுநூற்றில் பத்து இடங்களில் இத்துணைவினை வந்துள்ளதையும், அவற்றுள் ஒன்பது இடங்களில் எதிர்மறை வினையெச்சத்துடனும், (செல்லாதீமோ 186.5; விரையாதீமே 364. 4 போன்று) ஒரே ஒரு இடத்தில் மட்டுமே உடன்பாட்டு வினையெச்சத்துடனும் வந்துள்ளமையையும் காண்கிறோம்.

"சென்றீ பெரும............" அகம் 46-16*

"பகல்வந் தீமோ........." நற் 156-6*

"அறஞ்செய் தீமோ........." புறம் 145-7*

"என்னோர்க ளிடும்பையுங் களைந்தீவாய் கலி 100-23*

குறுந்தொகையிலும், பத்துப்பாட்டிலும் இவை எதிர்மறை வினையெச்சத்துடனேயே வந்துள்ளன. பதிற்றுப்பத்து, பரிபாடல் குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் இது காணப் படுவதில்லை.

---

*அகம் 80-13, 218-22

*நற் 45-8, 321-8, 360-5

*புறம் 136-10, 319-9

*கலி 58-6, 64-29, 71-10, 14, 18, 23, 79-23, 93-10, 16, *94-20, 144-5, 20, 42

### 3.1.3 4.9.5 ஒழி

இத் துணைவினை மணிமேகலையில் மட்டுமே அதுவும் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே வந்துள்ளது.

"... அவன்முன் அயர்ந்தொழி வாயலை" மணி 21-112

என வருதலும், உரையாசிரியர் "அவன் முன்னர் அறங்கூறுதலை மறந்து போகமாட்டாய்" என உரை எழுதுதலும் காண்க

### 3.1.3 4.9.6 கொள்

இத் துணைவினை பழந்தமிழ் நூல்களில் பல இடங்களில் காண்கிறோம்.

"முயங்குதொறும் முயங்குதொறும் உயங்கமுகந்து கொண்டு
அடக்குவம்........." அகம் 328-10*

என வரும் அகநானூற்று அடிகளில் கொண்டு என்பது துணைவினையாக வந்திருப்பதும், "அவர் முயங்குந் தோறும் முயங்குந் தோறும் வருந்த முகந்து கொண்டு நம் மார்பின் கண்ணே அடக்கியிருப்பேம்" என உரையாசிரியர் எழுதுவதும் கருதத்தக்கன.

"கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக் கொண்டாங்கு"
நற் 182-5

"செய்து கொண்டதோர் சிறுநன் னட்பே" குறு 377-5

"இந்நோய் நோன்று கொளற்கரிதே" குறு 58-6

"முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி ..." புறம் 159—10

பரி 2—62

குறள் 442, 633, 678, 976

* அகம் 97-9, 171–2, 373-1

"கொடுங்கால் மாமலர் கொய்துகொண்டு ... ..."
பத்து 4—216[1]

"கருப்பெற்றுக் கொண்டோர் ... ... ... ..."
பரி 5—36

"எடுத்துக்கொள் வதுபோலுந் தொடிவடுக் காணிய"
கலி 71—16[2]

"... ஏற்றுக்கொண்டெடுத்த வேற்கண்ணாள் ..."
சிலம்பு 21—19

"ஐய மின்றி யறிந்துகொ ளாய்ந்து ... "
மணி 28-471

(3). 1. 3. 4. 9.7 விடு

"செய்துவிட் டன்ன செந்நில மருங்கிற்" அகம் 304-6 எனவரும் அகநானூற்று அடியில் விட்டு என்பது துணை வினையாக வரக்காணலாம். "செவ்வண்ணம் தீட்டி வைத்தாற் போன்ற சிவந்த நிலத்திடத்தே" என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

"விதிர்த்துவிட் டன்ன அம்நுண் சுணங்கின்"
நற் 160-5

"பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே..............." குறு 16-83

"உக்கு விடுமென் னுயிர்" கலி 138-17[3]

1. பத்து 2-128, 4-27, 8-47
2. கலி 69-13, 107-7
3. கலி 61-24, 63-17. 94-10, 43 105-65

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்" குறள் 121[1]

3.1.3.4.10 காலவெச்சங்களும் வேற்றுமைப் பொருளும்

ஒரு சில காலவெச்சங்கள் வேற்றுமை உருபுகளாகவும் பயன்படுகின்றன. சங்க இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் நின்று, இருந்து, கொண்டு ஆகிய காலவெச்சங்கள் உருபுகளாக வந்துள்ளன.

நின்று, இருந்து ஆகியவை நீக்கப் பொருளைக் காட்டும் உருபுகளாகப் பயன்படுகின்றன. புறநானூற்றில் காணப்படும்

"இக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளலே"

புறம் 357.9

"குணதிசை நின்று குடமுதற் செலினும்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்"

புறம் 386-20

என்ற அடிகளில் வரும் 'நின்று' என்பது வேற்றுமை உருபாகப் பயன்படுதல் காணத்தக்கது. இதுபோன்றே பத்துப் பாட்டிலும்

"............சேண்நின்று
இழுமென இழிதரும் அருவி" திரு1.315

"யாமவ ணின்றும் வருதும்........." சிறு. 3.143

"உயாநிலை யுலக மிவணின் றெய்தும்" மதுரை 471

"நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்" பட் 129

"யாமவ ணின்றும் வருதும்......" மலை 53

---

1குறள் 158, 168, 280, 458, 498, 979, 1068

"...............நீணிலம்
தன்னினின்று மந்தரத் தெழுந்ததில்லை தானென"
சிலம்பு 29—22-2

என் வரும் அடிகளிலும் 'நின்று' என்ற காலவெச்சம் வேற்றுமை உருபாக வந்துள்ளது.

தொல்காப்பியர் இவ்வுருபு பற்றிக் கூறவில்லையாயினும் பலர் இதுபற்றிக் குறிப்பிட்டிருத்தல் காணலாம். வீரசோழியம்

"விரைநின் றிழிந்திங்கொர் வேதியன்........"

எனக் குறிப்பிடுதல் காணலாம். (39)

இதே பொருளில் 'இருந்து' என்ற வினையெச்சமும் வருதல் காணத்தக்கது.

"..............மட நடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்கும்" ஐங் 157.3

இவ்வெச்சம் இப்பொருளில் இன்றைய தமிழில் - இல் இருந்து என வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. இதுபற்றி உரையாசிரியர் எவரும் குறிப்பிடவில்லை. எனினும் சண்முகம் (1971:69) தன்னுடைய நூலில் குறிப்பிட்டிருப்பது உண்மையில் பாராட்டுதற்குரியதாகும்.

இவ்வற்றைப் போன்றே 'கொண்டு' என்ற காலவெச்சமும் வேற்றுமை உருபாகப் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஐங்குறுநூறு, அகம், நற்றிணை, புறம், பரிபாடல், கலித்தொகை, குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் மூன்றாம் வேற்றுமை யுருபாக வந்துள்ளது.

"......சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட" ஐங் 275.2

"அம்புகொண் டறுத்த ஆர்நார் உரிவை..."
அகம் 269-10

"பொருது தொலையானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ் வோன்"
அகம் 283.3

"என்கைக் கொண்டு தன்க ணொற்றியும்
தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்"
நற் 28.2

'நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே..........." புறம் 349.1

"ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றி" பரி 5.52

"எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்து வந்தெறிந்தென'
பரி 5.52

"விழித்தகண் வேல் கொண் டெறிய அழித்திமைப்பின்
ஒட்டன்றோ வன்க ணவர்க்கு" குறள் 775

"மணி வட்டைக் குணில் கொண்டு துரந்தது போல்"
சிலம்பு 29,1.11

எனவும்

"சென்றதற் கொண்டு மனையோள் விரும்பிப்"
புறம் 333.8

"கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது"
புறம் 379.12. 4009

"வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற"
புறம் 340.11

"... ... ... ... ... ... அதற் கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்"
புறம் 394.15

"கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
டவதி லாள னென்னாது ... — ..." புறம் 316.8

"மருவூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவழிப் பட்டதென் நெஞ்சு" கலி 144.1

எனவும்

"பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்தியான்"
அகம் 219 8

(இங்கு பிறந்ததற் கொண்டு என்பது பிறந்த நாள் முதல் எனப்பொருள் படுதல் காண்க.)

எனவும் வருதல் காண்க.

> "யாத னுருபிற் கூறிற் றாயினும்
> பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்"

என்ற நூற்பாவிற்கு உரை எழுதப் போந்த தெய்வச்சிலையார் 'நின்று' போன்றவை வினையெச்சங்களாயினும் அவை வேற்றுமைப் பொருளைத் தரும் எனக் கூறுவது காண்க. நின்று, கொண்டு போன்றவை பின்னர் வேற்றுமை உருபுகளாக, அதாவது சொல்லுருபுகளாகக் கருதப்பட்டமையும் இங்குக் குறிப்பிடத் தக்கது.

வீர சோழியம்

"வரை நின்றிழிந்தங்கோர் வேதியன்"
எனக் கூறுவதும், சாஸ்திரியார் (1979:139)

"ஒரு கணை கொண்டு மூவெயில் உடற்றி"

என்பதை உதாரணமாகத் தந்து சொல்லுருபு எனக் கூறுவதும், நன்னூல் காண்டிகை உரைகாரர்

"ஆல், ஆன் உருபுகள் நிற்றற்குரிய விடத்துக் கொண்டென்பதும்; ஒடு, ஓடு உருபுகள் நிற்றற்குரிய விடத்து உடனென்பதும், சொல்லுருபுகளாக வரும்" (ப. 260)

எனக் கூறி

வாள் கொண்டு வெட்டினான்
என்பதை உதாரணமாகத் தருவதும் காணத்தக்கன.

தொல்காப்பியம் ஐந்தாம் வேற்றுமை உருபாக

> "ஐந்தாகுவதே
> இன்னெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி"

என 'இன்' எனக் கூற அதனை விட்டுவிட்டு வீரசோழியம் 'நின்று' என்பதைக் கூற உரையாசிரியர்

"அவதி என்று சொல்லப்பட்ட பொருளின் ஐந்தாம் வேற்றுமைப் பிரத்தியங்களின் பின் 'நின்று' என்னுஞ் சொற் பெற்று வரும் (35) எனக் கூறுவது இக்காலவெச்சம் எத்தனை அளவுக்கு ஐந்தாம்வேற்றுமை நீங்கற் பொருள் காட்டுவதில் முக்கியம் அடைந்து விட்டது என்பதக் காட்டிநிற்கும். மட்டு மின்றி இவர்

'சாத்தனுழை நின்றும் திமை அகன்றது
பெரியோரிடை நின்றுஞ் சின நீங்கிற்று
மலையினின்றும் அருவி வீழ்ந்தது

எனவரும்" என்று கூறிவிட்டு

'ஐந்தாம் வேற்றுமைக்கு இன் என்னும் பிரத்தியமும் வரும்' எனக் கூறுவதும் காண்க. நின்று என்பதையே முக்கிய உருபாக இவர் கருதுகிறார் என்பது விளங்கும்.

### 3.1.3 4.11 கூட்டு வினைகள்

காலவெச்சங்கள் கூட்டுவினைகளின் முதல்வினையாகவும் வருதலைக் காணலாம். பின்வரும் வினையுடன் இணைந்து ஒருசொல் நீர்மைத்தாய் இவை பொருள் காட்டிநிற்கும் நிலையில் இவற்றைக் கூட்டுவினைகள் என அழைக்கிறோம். பழந் தமிழ் இலக்கியங்களில் முன்பழந்தமிழ் நூல்களில் இவை அருகியும் (பதி 0, ஐங் 0, அகம் 0, நற் 3, குறு 2, புறம் 1, பத்து 0), பின்பழந்தமிழ் நூல்களில் குறிப்பாகச் சிலம்பு, மணிமேகலை யில் அதிகமாகவும் (பரி 1, கலி 0, குறள் 0, சிலம்பு 3 மணிமேகலை 5) வந்துள்ளதைக் காண்கிறோம்.

| | |
|---|---|
| வாய்விட்டு ... வினவி | நற் 365-3 |
| கொண்டுஞ் செல்வர் | நற் 4-7 |
| கொண்டு செல் | நற் 380-9 |
| வாய்விட்டு இனிய கூறி | குறு 298-2 |
| வாய் விட்டு அன்னாவென்னும் | குறு 397-4 |
| கொண்டு வந்தனன் | புறம் 201-7 |
| எடுத்துரைஇ | பரி 18-22 |
| எடுத்துத் தந்தைக்குத் தாயுரைப்ப | சிலம்பு 21-30 |

| | |
|---|---|
| எடுத்தீங்கு உணர்வுடை மக்கள் உரைக்கல் வேண்டா | சிலம்பு 28-155 |
| கொண்டு போனார் | சிலம்பு 24-1-9 |
| எடுத்துரை | மணி 2-9 |
| எடுத்துரைத்தனை | 11-119 |
| எடுத்துரைத்த | 12-35 |
| எடுத்துக்காட்டி | 18-167, 20-74 |

### 3. 1. 3. 5 எழுவாய்

காலவெச்சமும் அதுகொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயைக் கொண்டு வருதலும் அல்லது இருவேறு எழுவாயைக் கொண்டு வருதலும் பெரும்பாலும் காலவெச்சம் காட்டும் பொருளையே சார்ந்துள்ளன என்பதை முன்னரே கண்டோம். பழந்தமிழ் இலக்கியங்களிலும் இந்நிலையே காணப்படுகிறது. உகர விகுதி காட்டும் பொருள்களுக்கேற்ப எழுவாய் ஏற்கும் தன்மையைச் சிறிது விரிவாகக் காண்போம்.

### 3.1.3.5.1 வரிசைப்பொருள்

இப்பொருளில் தான் செய்து வாய்பாட்டு வினையெச்சம் அதிகமாக வந்துள்ளது. பழந்தமிழ் நூல்கள் அனைத்திலும் அறுநூற்றுப் பத்தொன்பது இடங்களில இது வந்துள்ளது. இவற்றுள் மூன்று இடங்கள் தவிர்த்து அனைத்திலும் இவ்வெச்சமும் அவை கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டுள்ளன.

### 1.1.3.5.1.1. ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

''பகைவர் நாடுங் கண்டுவந் திசினே" பதி 15-1

என வரும் அடிகளில் கண்டு என்ற வினையெச்சமும் அது கொண்டு முடியும் வந்திசின் என்ற வினைமுற்றும் யான் என்ற ஒரே எழுவாயையே (தோன்றா எழுவாய்) கொண்டு வந்து உள்ளன. ''நாடுகளையும் பார்த்து இங்கே வந்தேன்" என உரையாசிரியர் எழுதுதல் காண்க. இதுபோன்றே

"..... .........சிறுவெண் காக்கை
...............இரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந்
துறைவன்..............."

ஐங் 162-1

எனவரும் ஐங்குறுநூற்று அடிகளிலும் உண்டு என்ற கால வெச்சமும் அது கொண்டு முடியும் சேக்கும் என்ற பெயரெச்ச மும் காக்கை என்ற ஒரே வினைமுதலைக் கொண்டிருத்தல் காணலாம். கீழ்வரும் பழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுகள் அனைத்திலும் இதே நிலையைத்தான் காணுகிறோம். அக நானூற்றில்

''நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படு மேனி..................''

அகம் 217-16

(அருள் செய்யாத காதலர் ... நலத்தினை நுகர்ந்து கைவிட்ட பாழ்பட்ட மேனி)

எனவும், நற்றிணையில்

''செல்ப என்ப தாமே...........

...........................

நுதல்கவின் அழிக்கும் பசலையும்
அயலோர் தூற்றும் அம்பலும் அளித்தே''

நற் 73-6

(எனது நெற்றியின் அழகை அழிக்கும் பசலையையும், அதனை நோக்கி அயலிலாட்டியர் தூற்றும் பழிச் சொல்லையும் எனக் குக் கொடுத்து தாம் செல்கிற்பர் என்று உழையர் கூறா நிற்பர்)

எனவும், குறுந்தொகையில்

,'கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகி..........."

குறு 312-5

(கூந்தலின் கண்ணே நம்மாற் சூட்டப்பட்ட பலவாகக் கலந்த மலர்களை எல்லாம் உதிர்த்துவிட்டு மயிர்ச் சந்தனமிட்டுக்

கோதிய கூந்தலிடத்தே எண்ணெய் தடவி நம்மோடே பொருந்தாத முகத்தை உடையாளாகி)

எனவும், புறநானூற்றில்

"செய்திரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்
நெய்தலங் கான னெடியோய்.' புறம். 10-11

(ஒரு தொழிலைச் செய்து பின் பிழைக்கச் செய்தேமென்று கருதாத செய்கையையும் சேய்மைக்கண்ணே விளங்கும் புகழினையுமுடைய நெய்தலங்கானல் என்னும் ஊரையுடைய நெடியோய்) எனவும், பத்துப் பாட்டில்

"நுண்தா துண்டு வறும்பூத் துறக்கும்
மென்சிறை வண்டினம்......" பத்து 6-573

(நுண்ணிய தாதையுண்டு தாதற்ற வறிய பூவைப் பின்னர் நினையாமல் துறந்துபோம் மெல்லிய சிறகையுடைய வண்டின் திரள்)

எனவும், பரிபாடலில்

"எந்தை எனக்கீத்த இடுவளை ஆரப்பூண்
வந்த வழி நின்பான் மாயக் களவன்றேல்
தந்தானை தந்தே தருக்கு" பரி 20-76

(எம் தந்தை எமக்குச் சீதனமாக வழங்கிய இடப்படும் கைவளையலும். முத்துமாலையும் ஆகிய இவ்வணிகலன்கள் எம்மிடத்தினின்று நின்னிடத்திற்கு வந்தவழி வஞ்சனையுடைய களவுவழி இல்லை என்பாயாயின், இவற்றை நினக்குத் தந்தவன் ஒருவன் உளனாதல் வேண்டுமன்றே! அதனை எமக்குக் கூறிப் பின்னர் நீ மேம்பாடுடையை ஆயின் ஆகுக)

எனவும், கலித்தொகையில்

"ஆங்கே அவர்வயின் சென்றீ...
ஈங்கெம் புதல்வனைத் தந்து" கலி 79—22

[ஆதலால் எம் புதல்வனை இங்கே தந்து ... பரத்தையரிடத்தே செல்வாயாக]

எனவும், குறளில்

"தெரிந்த இனத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்" குறள்–462

(தாம் தெரிந்துகொண்ட இனத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின் தாமேயும் எண்ணிச் செய்து முடிக்கவல்ல அரசற்கு எய்துவதற்கரிய பொருள் யாதொன்று மில்லை).

எனவும், சிலம்பில்

"..................இறையோனும்
...................................
.....................எங்கோட்டத்து
நீவா வென உரைத்து நீங்குதலும்" சிலம்பு 9-30

(சாத்தனும் நீ எமது கோட்டத்திற்கு வாவெனச் சொல்லி நீங்கினானாக)

எனவும், மணிமேகலையில்

"பொய்கையும் பொழிலும் புனைமினென் றறைந்தத்
தெய்வதம் போயபின்........." மணி 28-204

(பொய்கையும் பொழிலும் உண்டாக்குங்கள் என்று கூறி அத்தெய்வம் மறைந்துபோன பின்னர்)

எனவும் இவ்விகுதி வரிசைப் பொருளில் ஒரே எழுவாய் கொண்டு வந்துள்ளமையைக் காணலாம்.

3. 1. 3. 5. 1. 2 இரு எழுவாய்கள்

முன்னர்க் குறிப்பிட்டபடி இப்பொருளில் வரும் செய்தென் வாய்பாட்டு எச்சமும் அவை கொண்டு முடியும் வினையும் மூன்று இடங்களில் மட்டுமே வெவ்வேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன.

ஐங்குறுநூற்றில்

"மானுண் டெஞ்சிய கலிழி நீரே" ஐங் 203–4

எனவும், குறுந்தொகையில்

"உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ..........." குறு 232-4

எனவும், பத்துப்பாட்டில்

"விருந்துண் டெஞ்சிய மிசஇல்......" பத்து 8-206

எனவும் வருதல் காண்க.

இவற்றுள் காணப்படும் உண்டு என்ற வினையெச்சமும், அது கொண்டு முடியும் எஞ்சிய என்ற பெயரெச்சமும் வெவ்வேறு வினைமுதல்களைக் கொண்டு வருதல் கவனிக்கத் தக்கது.

### 3.1.3.5.2 துணை நிகழ்ச்சிப்பொருள்

துணைநிகழ்ச்சிப் பொருளிலும் ஒரே எழுவாயே பெரும்பான்மையும் வருதல் இங்கு குறிப்பிடத் தக்கது. பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் கூர்ந்து நோக்கின் இவ்வுண்மை நன்கு புலனாகும். இவ்வாய்பாட்டு எச்சம் பழந்தமிழ் இலக்கியங்களில் 4982 இடங்களில் இப்பொருளில் வந்துள்ளது. எனினும் பதினொரு இடங்களில் மட்டுமே இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன.

### 3.1.3.5.2.1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"முரணியோர்த் தலைச்சென்று
கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ்சேரலாதன்..............." பதி 20-3

என வரும் அடிகளில் காணப்படும் சென்று என்ற காலவெச்சத்தின் எழுவாயும், அது கொண்டு முடியும் தடிந்த என்ற பெயரெச்சத்தின் எழுவாயும் ஒன்றாக (நெஞ்சேரலாதன்) இருத்தலைக் காண்கிறோம்.

இது போன்றே

"குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை"
நற் 81-1

என வரும் ஐங்குறுநூற்று அடிகளில் குருகு என்பதே உடைத்து என்ற காலவெச்சத்திற்கும், அது கொண்டு முடியும் உண்ட என்னும் பெயரெச்சத்திற்கும் எழுவாயாக உள்ளது.

அகநானூற்றில்

"புறவுக் குயின் றுண்ட புன்காய் நெல்லி"

அகம் 315-10

(புறா துளைத்து உண்டமையின் புல்லிய காய்களை உடைய நெல்லி)

எனவும், நற்றிணையில்

"................மறியறுத்து
அன்னை அயரும் முருகு......"  நற் 47-9

(யாட்டை அறுத்து அன்னையால் வணங்கப்படா நின்ற முருகவேள்)

எனவும், குறுந்தொகையில்

"பல்லா நெடுநெறிக் ககன்று வந்தென"  குறு 64-1

(பலவாகிய பசுக்கள் நெடிய வழிக்கட் பிரிந்துபோயினவாக)

எனவும், புறநானூறில்

"ஈன்றுபுறந் தருத லென்றலைக் கடனே" புறம்312-1

(மகனைப் பெற்று வளர்த்து விடுதல் என்னிடத்துக் கடமையாகும்)

எனவும், பத்துப்பாட்டில்

"அல்சேர்ந் தல்கி அசைதல் ஓம்பி
வான்கண் விரிந்த விடிய லேற்றெழுந்து
கானகப் பட்ட செந்நெறிக் கொண்மின்"

பத்து 10-256

(இராக்காலத்திற்கு எல்லீரும் கூடியிருந்து இளைப்பாறி வானிடத்தே ஞாயிற்றின் கதிர் விரிந்த விடியற்காலத்தே துயிலுணர்ந்தெழுந்து காட்டிடத்தே கிடந்த செவ்விய நெறியைப் போவீராக)

எனவும், பரிபாடலில்

"அல்லலில் அனலன் தன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன்......" பரி 5-57

(துன்பமில்லாத தீக்கடவுள் தனது உடலின்கண் தீத்தன்மை யினின்றும் பிரித்து வளப்பமான கோழிச் சேவலாக்கிக் கொடுத் தானாக)

எனவும், கலித்தொகையில்

"............அமரர்வந் திரத்தலின்" கலி 2-2

(தேவர் வந்து இரக்கையினாலே)

எனவும், குறளில்

"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" குறள் 127

(எல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும் நாவொன்றினை யுங்காக்க; அதனையுங் காவாராயிற் சொற்குற்றத்தின்கட் பட்டுத் தாமே துன்புறுவர்)

எனவும், சிலம்பில்

......... அறைந்துணும் பூதத்து" சிலம்பு 15-78

(புடைத்துண்ணும் பூதத்தினுடைய)

எனவும், மணிமேகலையில்

"ஆங்கவன் ஈங்கெனை அகன்று.........
நீங்கினன்......................" மணி 3-40

(அவ் விச்சாதரன் இந்நகரத்திலே எனைக் கைவிட்டுப் பிரிந்து ...போயொழிந்தான்)

எனவும் வந்திருத்தல் காண்க.

### 3.1.3.5-2.2 இரு எழுவாய்கள்

முன்னரே குறிப்பிட்டபடி பழந்தமிழ் இலக்கியங்களில் பதினொரு இடங்களில் மட்டுமே இப்பொருளில் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டுவருவதைக் காண்கிறோம். நற்றிணை (5), புறம் (1),

பத்துப்பாட்டு (2) சிலம்பு (3) ஆகிய நூல்களில் மட்டுமே இந்நிலையைக் காண்கிறோம்.

நற்றிணையில்

"....................குறவர்
சிலவித்து அகல விட்டுடன் பலவிளைந்து
இறங்கு குரல் பிறங்கிய ஏனல்......" நற் 209-2

என வரும் அடிகளில் விட்டு என்னும் காலவெச்சத்தின் எழுவாயாகக் குறவர் என்ற சொல்லும் அது கொண்டு முடியும் விளைந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக குரல் என்ற சொல்லும் வந்திருத்தலைக் காண்கிறோம். "குறவர் சிலவாய விதைகளைக் கலப்பாக விதைத்து ஒரு சேரப் பலவாக விளைந்து சாய்ந்து கதிர் விளங்கிய தினைக் கொல்லை" என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

இதுபோன்றே புறநானூற்றில்

"அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி" புறம் 150-14

என வரும் அடிக்கு உரை எழுதும் உரையாசிரியர் "அதனை யாங்கள் அமிழ்துபோலத் தின்று சுடுகின்ற பசி தீர்ந்ததாக" என எழுதுவதைக் காண்கிறோம். மிசைந்து என்னும் கால வெச்சத்தின் எழுவாயாக யாங்களும், அது கொண்டு முடியும் நீங்கி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக பசி என்ற சொல்லும் உள்ளன.

இதுபோன்றே பத்துப்பாட்டில்

"......அகல் நிறையநெய் சொரிந்து
பருஉத்திரி கொளீஇய குருஉத்தலை நிமிரெரி"
பத்து 7-102

(தகளி நிறையும்படி நெய் பெய்யப்பட்டு பருந்திரிகளைப் பந்தங்களிலே கொளுத்திவைத்த நிறத்தை யுடைத்தாகிய மேனோக்கி எரிகின்ற விளக்கை)

எனவும், சிலம்பில்

"கூறைகோட் பட்டுமா ஊரவும்" சிலம்பு 15-98
(உடுத்த ஆடை பிறராற் கொள்ளப்பட்டு யான் பன்றி மீது ஏறிச் செலுத்தவும்)

எனவும் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் சொல்லும் இரு எழுவாய்களைக் கொண்டு வருதலைக் காண்கிறோம்.

3,1.3.5.3 உடனிகழ்ச்சிப் பொருள்

உடனிகழ்ச்சிப் பொருளில் மிகப் பெரும்பான்மையான இடங்களில் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையும் ஒரு சில இடங்களில் இருவேறு எழுவாய்களையும் கொண்டு வந்துள்ளன. அறுநூற்று இருபத்தெட்டு இடங்களில் இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளது. அவற்றுள் நாற்பத்தாறு இடங்களில் மட்டுமே இருவேறு எழுவாய்களைக் காண்கிறோம்.

3. 1. 3. 5 3. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்
"காணுநர் கைபுடைத் திரங்க" பதி 19-26

என வரும் அடிகளில் கை புடைத்தல் தொழிலும் இரங்கல் தொழிலும் ஒரு சேர நிகழ்தலையும், இரு தொழிலும் காணுநர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டிருத்தலையும் காணலாம் இது போன்றே ஐங்குறுநூற்றில்

"... ... ... போது கலந்து
கறங்கிசை யருவி வீழும்" ஐங் 395-4

[மலர்ந்துதிர்ந்த நறுமண மலர்களைத் தன்னோடு விரவிக் கொண்டு இடையறாது ஆரவாரிக்கும் இனிய இசையோடு அருவிகள் பலவும் வீழாநின்ற]

என வரும் அடிகளில் கலந்து என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வீழும் என்னும் பெயரெச்சமும் அருவி என்னும் ஒரே எழுவாயையே கொண்டுள்ளன.

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இதே நிலையைத்தான் காண்கிறோம். அகநானூற்றில்

"... ஆர்த்துவரல் அருவியில்" அகம் 138-8

[ஆரவாரித்து வருதலையுடைய அருவி போல]
எனவும், நற்றிணையில்

"குறுநுரை சுமந்து நறுமலர் உந்திப்
பொங்கிவரு புதுநீர் ... ..." நற் 68-4

[குறிய நுரைகளைச் சுமந்துகொண்டு நறிய மலர்களுடனே யாற்றிற் பொங்கி வருகின்ற புதுநீரை]
எனவும், குறுந்தொகையில்,

"... ... ... இடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் ... ..." குறு 270-3

[பெருமையுடைய முகிலே, இடையிடையே இடித்தலையும் செய்து மழை பெய்து வாழ்வாயாக!]

"சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ
... ... ... ... ... ... ...
... ... நிலஞ் சேர்ந் தனனே" புறம் 285-10

[தலைவனாகிய அவன் நிலத்தைச் சேறு செய்யும் குருதியைச் சொரிந்து, ஐயோ! ... ... நிலத்தில் வீழ்ந்தான்]

எனவும், பத்துப்பாட்டில்

"... ... ... அகில் சுமந்து
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... இழிதரும் அருவி" பத்து 1-296

[அகிலை மேற்கொண்டு ... குதிக்கும் அருவி]
எனவும், பரிபாடலில்

"விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலின்" பரி 16-11

[மலர்ந்த பூக்களைச் சுமந்து பொலிந்த வையைநீர் புக்கு நிறைதலாலே]

எனவும், கலித்தொகையில்

"... ... அருவியார்த் திழிதரும்
பயமழை ... ... ..." கலி 53 6

[அருவிகள் ஆரவாரித்துக் குதித்தற்குக் காரணமான பயனைத் தரும் மழை]

எனவும், குறளில்

"தற்காத்துத் தற்கொண்டார் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்" குறள் 56

[தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனையும் பேணி இருவர்மாட்டும் நன்மையமைந்த புகழ் நீங்காமல் காத்து மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடியுடையாளே பெண்ணாவாள்]

எனவும், சிலம்பில்

"... ... நவைநீ ருகுத்துப்
பாவைநின் றழூஉம் பாவை மன்றமும்" சிலம்பு 5-137

[துன்பக் கண்ணீர் சொரிந்து அழுதலையுடைய பாவை நிற்கும் பாவை மன்றமும்]

எனவும், மணிமேகலையில்

"... வாசந் தவையெனும்
நன்னெடுங் கூந்தல் நரைமூ தாட்டி
... ... ... ... ... ...
அழுதடி வீழா தாயிழை தன்னைத்
தொழுது ... ... ..." மணி 23-1

[வாசந்தவை என்னும் பெயரையுடைய அழகிய நெடிய கூந்தல் நரைத்துள்ள முதியவள் ... அழுது கொண்டு அடியில் வீழாமல் இராசமாதேவியைக் கைகுவித்துத் தொழுது]

எனவும் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயைக் கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

3. 1. 3. 5. 3. 2 இரு எழுவாய்கள்

முன்னரே கூறியபடி உடனிகழ்ச்சிப் பொருளில் வரும் போது இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் நாற்பத்தாறு இடங்களில் மட்டுமே இரு வேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன.

பதிற்றுப்பத்தில்
"வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்
பீர்வர்பு பரந்த நீரறு நிறைமுதல்" பதி 15-9

என வரும் அடிகளுக்கு உரையாசிரியர் "வெள்ளிய பூக்களை யுடைய வேளைக் கொடியும் பசிய சுரைக்கொடியும் தளைத்து வளர பீர்க்கங்கொடியேறிப் படர்ந்த நீரற்ற உழுசால்கள்" என உரை எழுதுவதையும், கலித்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக சுரைக்கொடியும், அது கொண்டு முடியும் பரந்த என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக பீர்க்கங்கொடியும் வந்திருத்தலைக் காண்கிறோம். இதுபோன்றே அகநானூற்றில் வரும்

"புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்க..." அகம் 136-3

என்ற அடிகளில் புணர்ந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக் புள்ளும் அது கொண்டு முடியும் விளங்க என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக இருவிசும்பும் வந்துள்ளன. உரையாசிரியர் "புள்நிமித்தம் இனிதாகக்கூட தெள்ளிய ஒளியையுடைய அழகிய இடமகன்ற பெரிய வானம் களங்கமற விளங்குதலுற" என உரை எழுதுதல் காண்க.

இதுபோன்றே நற்றிணையில்
"சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைக்கிளி கடியும் பெருங்கல் நாடன்" நற் 328-2

எனவரும் அடிகளில் விளைந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக பல (தினை)வும், அதுகொண்டு முடியும் கடியும் என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக தினைப்புனங்காப் போரும் (வருவித்த எழுவாய்) வருதலைக் காண்கிறோம். உரையாசிரியர் ''மிகச் சிலவாகிய தினைகளை விதைத்து அவை மிகப் பலவாக விளைதலும் அவற்றைக் கிளிகொய்து போகாபடி ஓம்பிப் பாதுகாக்கும் பெரிய மலைநாடன்'' எனவும் ''விளைந்து என்பதை விளைய வெனத் திரிக்க'' எனவும் எழுதுதல் காண்க.

இதுபோன்றே பரிபாடலில்
''... ... ... பாவையர்
செய்தபூஞ் சிற்றடிசி விட்டுண்ண வேற்பார்''
பரி 10–104

(மகளிர் தாமே இழைத்த அழகிய தமது சிற்றில்லில் தாம் அமைத்த சிறுசோற்றை இடாநிற்ப அதனை உண்ணுதற்குக் கரையிலேறி நிற்பாரும்)

கலித்தொகையில்

''கையறு நெஞ்சினேன் கலக்கத்து ளாழ்ந்தாங்கே
மையல்கொள் நெஞ்சொடு மயக்கத்தான் மரன்நோக்கி
எவ்வத்தால் இயன்றபோல் இலைகூம்பல்
வேன்கொ லோ''
கலி 134–20

(செயலற்ற நெஞ்சினேனாய்க் கலக்கத்திலே அழுந்த, மரம் அதனை நோக்கி வருத்தத்தாற் செய்தவைபோலே மயக்கம் கொண்ட நெஞ்சோடே இலைகள் குவிதற்குக் காரண மென்னோதான்?)

எனவும், குறளில்

''இலங்கிழாய் இன்று மறப்பினென் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து'' குறள் 1262

(விளங்கா நின்ற இழையினையுடையாய்! காதலரை யான் இன்று மறப்பேனாயின், மேலும் காரிகை யென்னை நீப்ப என் தோள்கள் வளை கழல்வனவாம்)

எனவும், சிலம்பில்

"தாதவிழ் மலர்ச்சோலை ஓதையாயத்து ஒலியவித்துக்
கையற்ற நெஞ்சினளாய் வையத்தின் உள்புக்கு
... ... ... மாதவிதன் மனைபுக்காள்'' சிலம்பு 7–52–8

(தாது விரிந்த பூக்களையுடைய சோலையில் ஆரவாரத்தை யுடைய ஆயத்தின் ஒலி அடங்க, செயலற்ற மனத்தினளாய் வண்டியினுள்ளே அமர்ந்து ... மாதவி தனிமைய தன் மனையை அடைந்தாள்)

எனவும், மணிமேகலையில்

"இறையுறை புறவும் நிறைநீர்ப் புள்ளும்
காவுறை பறவையும் நாவு ளழுந்தி
... ... ... முழவுக்கண் துயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொள் நடுநாள்" மணி7-60

(இல்லிறப்பிலே தங்குகின்ற புறாக்களும் நிறைந்த நீர்நிலை களிலே மலரின் மேலுறைகின்ற புறவைகளும் பொழிலிலே உறைகின்ற பறவைகளும் தத்தம் நா அலகினூடே அழுந்தி ஒலியவிந்து தங்கியிருப்பவும், ... முழவு முதலிய இசைக் கருவிகளும் தத்தம் கண்களில் ஒலியெழாது அவித்து கிடப்பவும் பழை தாகிய வெற்றியுடைய அப்பூம்புகார் நகரமே இவ்வாறு பள்ளி கொண்டிருக்கின்ற இரவின் நடுயாமத்தே]

எனவும் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் இரு வேறு எழுவாய்களைக் கொண்டு வருவதைக் காண்கிறோம.

### 3. 1. 3. 5. 4 நிலைமைப் பொருள்

இவ்வெச்சம் நிலைமைப் பொருளிலும் வருதல் முன்னரே குறிப்பிடப்பட்டது. இதுவும் இப்பொருளில் வரும்போது ஒரே எழுவாயைக் கொண்டு வருதலே பெரும்பான்மையாக உள்ளது.

### 3. 1. 3. 5. 4. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"... பூமலைந் துரை இ
வெண்டோடுநிரைஇய வேந்துடை யருஞ்சமம்
கொன்று ... ... ...

... ... ... ... ... ...
... ... ... ... நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுத றடிந்த
... ... ... நார்முடிச் சேரல்" பதி 40-9

என வரும் அடிகளில் மலைந்து என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் உரைஇ என்னும் காலவெச்சமும் நார் முடிச்சேரல் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ள மையைக் காணலாம். இது போன்றே ஐங்குறுநூற்றில்

"... ... ... என் றோழி
சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து
... ... ... ... ... ...
துஞ்சா ளாகுதல் தோகோ யானே" ஐங் 107-2

என வரும் அடிகளில் மெலிந்து என்னும் காலவெச்சமும், துஞ்சாளாகுதல் என்னும் சொல்லும் தோழி என்ற எழு வாயையே கொண்டு வந்துள்ளன.

அகநானூற்றில்
"பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து
... ... ... ... ... ...
வேட்டம் போகிய குறவன் ... ... அகம் 182-1

[அழகிய இடத்தினையுடைய வேங்கை மரத்தின் பொன் போலும் பூங்கொத்துக்களைச் சூடி ... வேட்டைக்குச் சென்ற குறவன்]

எனவும், நற்றிணையில்

"தழையணிந்து அலமரும் அல்குல் தெருவின்
இளையோள் இறந்த அனைத்தற்கு ..." நற் 321-3

[தழையை அணிந்து அத்தழையசையும் அல்குலையுடையளாய்த் தெருவின்கண்ணே இவ்விளையோள் சென்ற அவ்வொரு காரணத்திற்காக]

எனவும் வருதலைக் காண்கிறோம். பிற பழந்தமிழ் நூல்களிலும் இந்நிலை காணப்படுவதை 3.1.3.4.4 பிரிவில் வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

### 3. 1. 3. 5. 4 2 இரு எழுவாய்கள்

முன்னரே குறிப்பிட்டபடி இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே இரு வேறு எழுவாய்களைக் கொண்டு வரக்காண்கிறோம். பழந் தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் பதினான்கு இடங்களில் மட்டுமே இந்நிலை காணப்படுகிறது.

ஐங்குறுநூறு (1), நற்றிணை (1), புறம் (1), பத்துப்பாட்டு (3), பரிபாடல் (1), சிலம்பு (2), மணிமேகலை (5) ஆகிய நூல்களில் மட்டுமே இரு எழுவாய்கள் வருதலைக் காண்கிறோம்.

ஐங்குறுநூற்றில்

"... பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே" ஐங் 412-2

என வரும் அடிகளில் அலர்ந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக பிடவும், அது கொண்டு முடியும் கவினி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக புறவும் வந்துள்ளன. "நம் முல்லைநிலப் பரப்பு பிடவும் பிறவுமாகிய செடி கொடிகளும் மரமும் மலர்ந்து அழகுறலால் முழுமுற்றும் பூவணியே கொண்டு திகழா நின்றது" என உரையாசிரியர் பொருள் எழுதுவதைக் காண்கிறோம்.

நற்றிணையில்

"கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேல் தூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து" நற் 328-1

என வரும் அடிகளில் வீழ்ந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக கிழங்கும், அது கொண்டு முடியு விளைந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக பல (தினை)வும் வந்துள்ளமையைக் காண்கிறோம். "கிழங்குகள் கீழிறங்கித் தேனடைகள் மிகுதியாக மேலே வைக்கப்பட்டு மிகச் சிலவாகிய

தினைகளை விதைத்து அவை மிகப் பலவாக விளைதலும்" என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

இது போன்றே புறநானூற்றில்

"களரி பரந்து கள்ளி போகி

... ... ... ... ... ...

அஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு" புறம் 3:6-1

(காடு படர்ந்து கள்ளி மிகுந்து இந்தப் புகை தவழும் சுடுகாடு காண்பார்க்கு அச்சம் வரப்பண்ணுகிறது)

எனவும், பத்துப்பாட்டில்

"... ... ... மா விருந்து

... ... ... ... ... ...

விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை"

பத்து 10-129

[முற்றி மாவாந் தன்மை தம்மிடத்தே உளவாய் ... சீரிதாகக் கீழே வளர்ந்தன கொழுவிய கொடியை உடைய கவலைகள்]

எனவும், பரிபாடலில்

"பூவேய்ந்து பொழில் பரந்து

.. ... ... ... ... ...

... ... வையை வனப்பு" பரி 7-42

[பூவானே மூடப்பட்டுச் சோலைகளினூடே பரந்து ... ... வையையாற்றின் கண்ணே வந்த புதுப்புனலின் இயல்பு]

எனவும், சிலம்பில்

"பாடலம் தன்னொடு பன்மலர் விரிந்து

... ... ... ... ... ...

பிடவமும் மயிலையும் பிணங்கரில் மணந்த

கொடுங்கரை மேகலை ... ... சிலம்பு 13-154

[பாதிரியுடனே பலவகை மலர்களும் விரிந்து ... ... குட்டிப் பிடவமும் இருவாட்சியுமாய. இவை பின்னிய பிணக்கத்துடன் கலக்கப்பெற்ற கோவையாகிய மேகலை]

எனவும், மணிமேகலையில்

"கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து

... ... ... ... ... ...

மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்" மணி 6-81

[கான்றையும், சூரையும், கள்ளியுமாகிய செடிகள் செறியப் பெற்று முகில் தவழ்கின்ற பெரிய கிளைகளோடு கூடிய வாகைமரம் நிற்றலாலே வாகை மன்றம் என்று கூறப்படு கின்ற மன்றமும்]

எனவும் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் நிலைமைப் பொருளில் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலைக் காணலாம்.

### 3.1.3.5.5 காரணப்பொருள்

சில பொருள்களில் காலவெச்சம் வரும்போது பெரும் பாலும் இருவேறு எழுவாய்களையே எடுத்துவருதல் காணலாம். காரணப்பொருளில் காலஎச்சங்கள் வரும்போது பெருவாரியான இடங்களில் இருவேறு எழுவாய்கள் வருவது காணத்தக்கது. எடுத்துக்காட்டாக, பதிற்றுப்பத்தில் இவ்வாய்பாட்டு கால ஃச்சம் 23 இடங்களில் இப்பொருளில் வர 22 இடங்களில் இவ்வெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் வெவ்வேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன. இதே நிலையினைத் தான் பொதுவாகப் பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் காணுகிறோம்.

| | பதி | ஐங் | அகம் | நற் | குறு | புறம் | பத்து | பரி | கலி | குறள் | சிலப்பு | மணி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இரு எழுவாய் | 22 | 5 | 12 | 11 | 11 | 8 | 12 | 7 | 2 | 3 | 1 | 6 |
| ஒரே எழுவாய் | 1 | 2 | 11 | — | 17 | 1 | 2 | — | — | 4 | 4 | 5 |

காரணப்பொருளில் வரும்போது இருவேறு எழுவாய்கள் வரு தலே இயற்கை எனத் தோன்றுகிறது.

### 3.1.3.5.5.1 இரு எழுவாய்கள்

பதிற்றுப்பத்தில்
"கொடிநுடங்கு நிலைய கொல்களிறு மிடைந்து
வடிமணி நெடுந்தேர் வேறுபுலம் பரப்பி
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்" பதி 52—1

எனவரும் அடிகளில் மிடைந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக கொல்களிறு என்பதும், அது கொண்டு முடியும் வினையான பரப்பி என்பதின் எழுவாயாக வன்காணடவர் என்பதும் வருதல் காண்க. "யானைகள் செறிந்து திரிதலால் தேர்களை வேறிடங்களில் பரவிச் செல்வித்து" என உரை யாசிரியர் எழுதுதல் காண்க. இதே நிலையினைத்தான்

"நன்றில் கொண்கநின் பொருளே
பாவை யன்னநின் துணைப்பிரிந்து வருமே"
ஐங் 307—3

எனவரும் ஐங்குறுநூற்று அடிகளிலும் காண்கிறோம். பிரிந்து என்ற காலவெச்சத்தின் எழுவாயாக கொண்க என்பதும், வருமே என்ற கொண்டுமுடியும் வினையின் எழுவாயாக பொருள் என்பதும் வந்துள்ளன. "நீ சென்றீட்டும் அப்பொருள் ...நன்மையைத் தன்பால் கொண்டதில்லை...எம்பெருமாட்டி யைப் பிரிந்துபோய் ஈட்டுதலானே வருவதொன்றாகலான்" என உரையாசிரியர் எழுதுவதைக் காணலாம்.

இதே நிலையினைத்தான் பிற பழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுக்களிலும் காண்கிறோம்.

"... ... ... ... ... ... ...வானுலந்து
அருவி ஆன்ற உயர்சிமை மருங்கு..."
அகம் 185—9

(மேகம் பெய்யாதொழிதலின் அருவிகள் இல்லையாகிய உயர்ந்த சிகரங்களில்)

"திருந்துவாய்ச் சுறவம் நீர்கான்று ஒய்யெனப்
பெருந்தெரு உதிர்தரு பெயல் ... ..." நற் 132—2

(திருந்திய வாயையுடைய சுறாமீன் நீரைக் கக்குதலால் அந்நீர் விரைவிலே-பெரிய தெருவின்கண் உதிர்கின்ற மழையாக)

"கவணை அன்ன பூட்டுப்பொரு தசாஅ
உமணெருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன"
குறு 388—3

(பூட்டும் கயிறு பொருதமையானே வருந்தும் எருதுகள்)

"புனமுண்டு கடிந்த பைங்கண் யானை" குறு 333—2

(தினைப்புனத்தை உண்டமையானே கடியப்பட்ட பசிய கண்ணையுடைய யானை)

"எறிந்திலை முறிந்த கதுவாய் வேலின்" புறம் 347—4

(யாரோ எறிந்ததால் இலை முறிந்த)

"கமஞ்சூழ் கோடை விடரக முகந்து
காலுறு கடலின் ஒலிக்கும்" பத்து 6—308

(நிறைவினையுடைய சூறாவளியை முழைஞ்சிடங்கள் முகந்து கொள்கையினாலே காற்று மிகுந்த கடல்போல் ஒலிக்கும்)

"... — — — — —. — நிறைந்து நீர் துளும்புந்தம்
பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்"
பரி 6—1

(நீர் நிறைதலாலே துளும்பா நின்ற தம் பொறை)

"சிறிய துனித்தனை துன்னாசெய் தமர்ந்தனை
பலவுநூ றடுக்கினை யினைபேங்கி யழுதனை"
கலி 122—4

(அவர் குறைகளைச் செய்கையினாலே அக்குறைகள் பலநூறுமாக அடுக்கிக் கூறி அதிலே அமர்ந்தனை)

"எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்
கெஞ்ஞான்றும்

பெண்சேர்ந்தாம் பேதைமை இல்' குறள் 9:0.

கருமச் சூழ்ச்சிக்கண் சென்ற நெஞ்சத்தினையும் அதனினாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது)

''பத்தினி யொருத்தி படிற்றுரை எய்த
மற்றவள் கணவற்கு வறியோன் ஒருவன்
அறியாக் கரிபொய்த் தறைந்துணும் பூதத்துக்
கறைகெழு பாசத்துக் கையகப் படலும் ''

சிலம்பு 15—76

(விதியோன் பொய்த்ததால் அறைந்துண்ணும் பூதம்)

"— — — — மழைவளங் கரந்து
பொன்னெயிற் காஞ்சி நகர்கவி னழிய''

மணி 21—147

(மழையால் உண்டாகின்ற வளம் ஒழிந்து போனமையால் அழகிய மதிலையுடைய காஞ்சிநகரம் அழகொழிந்து போகா நிற்க)

போன்ற எடுத்துக்காட்டுக்களில் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் காரணப்பொருளில் இருவேறு எழுவாய் களைக் கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

### 3. 1. 3. 5. 2. 2 ஒரே எழுவாய்

முன்னர்க் குறிப்பிட்டது போன்று இவ்வெச்சம் காரணப் பொருளில் வரும்போது இருவேறு எழுவாய்களே பல இடங் களில் காணப்படினும் ஒரே எழுவாய் வரும் இடங்களும் பழந்தமிழ் இலக்கியங்களில் பல பாடல்களில் வந்துள்ளன.

பதிற்றுப்பத்தில்

''பாய்ந் தாய்ந்த மா'' பதி 69-7

எனவரும் அடிக்கு உரையாசிரியர் ''பாய்தலால் ஓய்வுற்ற குதிரைகள்'' என உரையெழுதுகிறார். பாய்ந்து என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் ஆய்ந்த என்னும் பெயரெச்சமும் மா என்ற ஒரே எழுவாயையே கொண்டுள்ளன.

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

''அருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே'' ஐங் 182-2

என வரும் அடிகளில் கண்டு என்ற காலவெச்சமும் அது கொண்டு முடியும் சொல்லான அணங்கியோன் என்ற வினை யாலணையும் பெயரும் ஒரே எழுவாயையே கொண்டிருத்தல் தெளிவு. பெருந்துறையில் கண்டமையால் வருத்தியோன் என உரையாசிரியர் எழுதுதல் காண்க. இதே நிலையைத்தான் பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் காண்கிறோம்.

''பெருங்கை யானைக் கோள்பிழைத் திரீஇய
அடுபுலி ... ... ...'' அகம் 118-8

(நீண்ட கையினையுடைய யானையைக் கொள்ளுதல் பிழைத்து அதனால் அவற்றைப் பகைமை பொருந்த மறைந்திருக்கும்படி செய்த கொல்லும் புலி)

''ஊர்ந்தின் புறாஅர் ஆயினுங் கையின்
ஈர்த்தின் புறூஉம் இளையோர் போல'' குறு 61-2

(தேரினை ஏறிச் செலுத்தி இன்பமடையாராயினும் தம் கை யானே அதனை இழுத்தன் மாத்திரையால் இன்புறுகின்ற இளஞ்சிறார் போல)

''உழுதூர் காளை யூழ்கோ டன்ன'' புறம் 322-1

(நிலத்தை உழுததனால் ஓய்ந்த நடைகொண்டு செல்லும் காளையின் தலையில் முளைத்த கொம்பு போல்)

''அவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற்
றின்சுவை மூரல் ... ... ...'' பத்து 4-195

(அவரை விதையினது நன்றாகிய பருப்பை மிக விட்டு துழாவு தலாலே இனிய சுவையுடைத்தாகிய மூரல்)

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்" குறள் 996

(பண்புடையார் கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய் வாராநின்றது; ஆண்டுப் படுதலில்லையாயின் அது மண்ணின்கட் புகுந்து மாய்ந்து போவதாம்.)

"அமரா பதிகாத் தமரனிற் பெற்றுத்
தமரிற் றந்து தகைசால் சிறப்பிற்
பொய்வகை யின்றிப் பூமியிற் புணர்ந்த
ஐவகை மன்றத் தமைதியும் காண்குதும்" சிலம்பு 6-14

(முன்பு அவுணரால் வந்த இடர்கெடப் பொன்னகராய அமராபதியைக் காத்தமையால் அதற்குக் கைமாறாக இந்திரனால் அளிக்கப் பெற்று, சோழன் மரபினுள்ளாரால் கொண்டுவரப்பட்டு, புகார் நகரிலே வைக்கப்பட்ட பொய்த்த லின்றி அழகு மிக்கசிறப்பினையுடைய ஐவகைப்பட்ட மன்றங் களின் பெருமையையும் காண்போம்)

"அமரக மருங்கிற் கணவனை யிழந்து
தமரகம் புகூஉம் ஒருமகள் போல" மணி 5-137

(போர்க்களத்திடத்தே தன் கணவன் இறந்து படுதலாலே பெருந்துன்பத்தோடே தன் பெற்றோர் இல்லத்திற்குத் தனியே செல்லும் ஒரு மங்கையைப் போல)

போன்றவை இதற்குரிய எடுத்துக்காட்டுக்கள்.

### 3. 1. 3. 5. 6 தாக்கப்பொருள்

இக்கால எச்சம் தாக்கப்பொருளில் வரும்போது இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களை எடுத்து வருவதையே காண்கிறோம். பழந்தமிழ் இலக்கியங் களில் ஒரே எழுவாய் கொண்டு வரும் இடங்கள் ஒன்று கூட காணப்படாதது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 3. 1. 3. 5. 6 1. இரு எழுவாய்கள்

பதிற்றுப்பத்தில்

"... பேராற் றிருங்கரை யுடைத்து
ஆர்கலி வானந் தளிசொரிந் தாஅங்கு" பதி 43-15

என வரும் அடிகளுக்கு உரையெழுதும் உரையாசிரியர் "பெரிய யாற்றிலே நீர்ப்பெருக்கானது பெரிய கரைகளை உடைத்துக் கொண்டு செல்லுமாறு நிறைந்த முழக்கத்தையுடைய மழை மேகம் மழைநீரைச் சொரிந்தது போல" என எழுதுவதைக் காணலாம். இங்கு உடைத்து என்னும் கால எச்சத்தின் எழுவாயாக பேராறும், அது கொண்டு முடியும் சொரிந்தாங்கு என்னும் வினையின் எழுவாயாக வானமும் வந்திருத்தல் தெளிவு.

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

"... ... ... பாடு சிறந்து
கடியக் கடவுமதி பாக" ஐங் 487-2

என வரும் அடிகளில் சிறந்து என்னும் கால எச்சத்தின் எழுவாயாக பாடு என்னும் பெயர்ச் சொல்லும், அது கொண்டு முடியும் கடவுமதி என்னும் ஏவல் வினையின் எழுவாயாக பாகனும் வந்துள்ளன. "பாகனே! நின்னுடைய தொழிற் பெருமை மேலும் சிறக்கும்படி விரையத் தேரினைச் செலுத்து வாயாக!" என உரையாசிரியர் எழுதுதல் காண்க. பிற பழந் தமிழ் இலக்கியங்களிலும் இந்நிலையே காணப்படுவதை 3. 1. 3. 4. 6 பிரிவில் காணும் எடுத்துக்காட்டுக்கள் தெளி வாகக் காட்டும்.

### 3. 1. 3. 5. 7 வினையடைப் பொருள்

இவ்வெச்சம் வினையடைப் பொருளிலும் வருதல் முன்னரே குறிப்பிடப்பட்டது. செய்தென் வாய்பாட்டு எச்சம் பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இப்பொருளில் வருதல் முன்னரே குறிப்பிடப்பட்டது. இப்பொருளில் வரும் போது இக்காலவெச்சமும் இது கொண்டு முடியும் வினையும்

ஓரே எழுவாயையே கொண்டு முடிதல் காணலாம். பதிற்றுப் பத்தில் இப்பொருள் வரும் இரண்டு இடங்களிலும் ஐங்குறு நூற்றில் பதினொரு இடங்களிலும் ஓரே எழுவாயே காணப் படுகிறது, இதே நிலையைத்தான் வேறு இலக்கியங்களிலும் காணுகிறோம்.

### 3. 1. 3. 5. 7. 1 ஓரே எழுவாய்

"ஞாயிறு பட்ட அகன்றுவரு கூட்டம்" — பதி 72-12

என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் ஞாயிறு என்னும் எழுவாய் அகன்று என்னும் காலவெச்சத்திற்கும் வரு என்ற வினைக்கும் எழுவாயாக வருதல் காண்க. "விரிந்து வரும் ஞாயிறுகள் தோன்றிய கூட்டம்" என உரை எழுதுதல் காண்க.

"மந்திக் கணவன் ... ...
... ... விரைந்துடன்
குன்றுய ரடுக்கங் கொள்ளு நாடன்" — ஐங் 274

இங்கும் மந்திக்கணவன் என்பது விரைந்து என்ற கால வெச்சத்திற்கும் அடுக்கம் கொள்ளும் என்ற வினைக்கும் எழுவாயாக வருதல் காணலாம். இதே நிலையினைத்தான் பிற பழந்தமிழ் நூல்களிலும் காணுகிறோம்.

"... விரைந்து வல் லெய்தி ...
... ... ... என் நெஞ்சே" — அகம் 9-17

[என் நெஞ்சம் மிக விரைந்து சென்று

"... ... ... விரைந்து
செல்க பாகநின் தேரே ..." — நற் 242-5

பிற இலக்கியங்களுக்கான எடுத்துக்காட்டுக்களை 3.1.3.4.7 பிரிவில் காண்க.

### 3. 1. 3. 5. 8 நோக்கப் பொருள்

பழந்தமிழ் நூல்களில் இக்கால எச்சம் நோக்கப் பொருளில் வரும்போது இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஓரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக்

காண்கிறோம். முன்னரே குறிப்பிட்டபடி இவ்விகுதி கலித் தொகையில் ஒன்றும், சிலம்பில் ஒன்றுமாக இரு இடங்களில் மட்டுமே இப்பொருளில் வந்துள்ளது. இரு இடங்களிலும் ஒரே எழுவாயே வரக் காணலாம்.

### 3. 1. 3. 5 8 ஒரே எழுவாய்

கலித்தொகையில்

"... ... போர்மலைந் தெழுந்தவர்" கலி 26-2

என வரும் அடியில் மலைந்து என்னும் கால எச்சமும் அது கொண்டு முடியும் எழுந்தவர் என்னும் வினையாலணையும் பெயரும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இதற்கு உரை எழுதும் உரையாசிரியர் "போர் செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவர்" என உரை எழுதுதல் காண்க.

இது போன்றே சிலம்பிலும்

"பொலந்தெரி மாக்கள் கலங்குஞரொழித்தாங்கு
இலங்குகொடி யெடுக்கும் நலங்கிளர் வீதி"
சிலம்பு 14-203

என வரும் அடிகளில் ஒழித்து என்னும் கால எச்சமும் அது கொண்டு முடியும் வினையான எடுக்கும் என்னும் பெயரெச்ச மும் மாக்கள் என்ற ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இதற்கு உரையாசிரியர், "கொள்வோர் எவ்விடத்து எப்பொன் உளதென்று ஐயுறுந் துன்பத்தை ஒழிப்ப, பொன் வாணிகர் இவ்விடத்து இப்பொன் உளதென விளக்கக் கொடியெடுக்கும் பொற்கடைத் தெரு" என்ற பொருள்பட உரை எழுதுதலைக் காணலாம்.

### 3. 1. 3. 6 காலம்

காலவெச்சங்கள் காட்டும் பொருளுக்கேற்பவே அவை காட்டும் காலங்களும் உள்ளன என முன்னரே கண்டோம் (பிரிவு 2.6). பழந்தமிழ் இலக்கியங்களிலும் இந்நிலையே காணப்படுவதைக் கீழ்வரும் பழந்தமிழ் இலக்கிய எடுத்துக் காட்டுகளில் தெளிவாகக் காணலாம்.

### 3. 1. 3. 6. 1 இறந்த காலம்

காலவெச்சங்கள் வரிசைப்பொருள், துணை நிகழ்ச்சிப் பொருள், நிலைமைப்பொருள், காரணப் பொருள் ஆகிய நான்கு பொருள்களைக் காட்டி வரும் இடங்களில் இறந்த் காலத்தைக் (அதாவது கொண்டு முடியும் வினைக்கு முன்னர் காலவெச்சம் காட்டும் நிகழ்ச்சி நடந்து முடியும் ஒரு பண் பினை) கொண்டு வருகின்றன. எடுத்துக்காட்டாக, பதிற்றுப் பத்தில் செய்து வாய்பாட்டு எச்சம்

"மன்னெயி லெறிந்து மறவர்த் தரீஇ" பதி 37-9

(பகைவேந்தருடைய மதில்களை அழித்து அவருடைய சீரிய வீரர்களைக் கைப்பற்றிக் கொணர்ந்து)

என வரிசைப் பொருளிலும்

"வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய" பதி 88-13

(சோழ பாண்டியரும் குறுநிலமன்னரும் வந்து வணங்கி வழிபட்டு நிற்க)

எனத் துணை நிகழ்ச்சிப் பொருளிலும்,

"களிறெறிந்து முறிந்த கதுவா யெஃகு" பதி 45-4

(களிறுகளைக் கொல்வதால் நுனி மடிந்த வடுப்பட்ட வேல்)

எனக் காரணப்பொருளிலும்

"தாரணிந் தெழிலிய தொடிசிதை மருப்பின்
போர்வல் யானை.........—..." பதி 15-85

(மாலை அணிந்து உயர்ந்த பூண்கெட்ட கோட்டினை யுடைய போரில் வல்ல யானைகள்)

என நிலைமைப் பொருளிலும் வரும் இடங்களில் எல்லாம் இறந்த காலத்தையே காட்டி நிற்றலைக் காண்கிறோம்,

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்,

"..................குறமகண்
மென்றினை நுவனை யுண்டு தட்டையி
னைவனச் சிறுகிளி கடியு நாட" ஐங் 285-1

(குறவர் சாதியிற் பிறந்த மகள் மெல்லிய தினையினது மாவினைத் தின்று பசி தீர்ந்தபின் தட்டையென்னுங் கருவியைப் புடைத்து மலைநெற் கதிரைக் கொய்தற்கு வருகின்ற சிறிய கிளிகளை ஓட்டுதற் கிடனான நாட்டையுடையோய்!)

எனவும்

"எரிகவர்ந் துண்ட வென்றாழ் நீளிடை" ஐங் 3:4-1

(காட்டுத்தீ பற்றிச் சுட்டழித்த வேனிற்பருவம் நீளாநின்ற அந்தப் பாலைநிலப் பரப்பிலே)

எனவும்

"அருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே"
ஐங் 182-3

(பெரிய நீர்த்துறைக்கண்ணே கண்டமையாலே இவளை வருத்தியவன் யாராலும் கடத்தலரிய ஆற்றலையுடைய தெய்வம் அல்லன் காண்!)

எனவும்

"...... பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே" ஐங் 412-2

(நம் முல்லை நிலப் பரப்பு பிடவும் பிறவுமாகிய செடி கொடிகளும் மரமும் மலர்ந்து அழகுறலால் முழுமுற்றும் பூவணியே கொண்டு திகழா நின்றது)

எனவும் முறையே வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள், காரணப்பொருள், நிலைமைப்பொருள் ஆகிய பொருள்களைக் காட்டி வரும் இடங்களில் இறந்தகாலத்தையே காட்டி வந்துள்ளது இவ்வெச்சம். பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் இதே நிலை காணப்படுவதை 3. 1. 3. 4. 1. 1, 3. 1. 3. 4. 2,

3. 1. 3. 4. 4, 3. 1. 3. 4. 5 ஆகிய பிரிவுகளில் தந்துள்ள எடுத்துக்காட்டுக்களினின்றும் தெளிவாக உணரலாம்.

### 3. 1. 3. 6. 2 நிகழ்காலம்

இவ்வெச்சம் உடனிகழ்ச்சிப் பொருளில் வரும்போது நிகழ் காலத்தையே, அதாவது இது காட்டும் நிகழ்ச்சியும், இது கொண்டு முடியும் வினை காட்டும் நிகழ்ச்சியும் ஒருசேர நிகழ் தலையே காட்டிநிற்கக் காண்கிறோம்.

பதிற்றுப்பத்தில்

"............பழனந் தோறும்
அழன்மலி தாமரை யாம்பலொடு மலர்ந்து
நெல்லின் செறுவி னெய்தல் பூப்ப" பதி 19-19

(நீர்நிலைகளிலெல்லாம் நெருப்புப் போன்ற தாமரைகளும் ஆம்பல்களும் மலர, நெல்விளையும் இனிய வயல்களில் நெய் தல்கள் மலர)

என வரும் அடிகளில் தாமரை மலர்தலும், நெய்தல் பூத்தலும் ஒருசேர நிகழ்தலின் உடனிகழ்ச்சிப் பொருளையும் நிகழ் காலத்தையும் காட்டுவதைக் காண்கிறோம். இதுபோன்றே குறுந்தொகையில்

"......... வீஇ சுமந்துவந்
திழிதரும் புனலும்........." குறு 200-2

(மலர்களைச் சுமந்து கொண்டு வந்து வெள்ளமும் வீழா நிற்கும்)

என வரும் அடிகளில் சுமத்தல் தொழிலும், வரும் தொழிலும் உடனிகழ்தலின் இங்கும் இவ்விகுதி நிகழ்காலத்தைக் காட்டி நிற்கிறது. 3. 1. 3. 4. 3 பிரிவில் உடனிகழ்ச்சிப் பொருளைக் காட்டும் எடுத்துக்காட்டுகள் அனைத்தும் நிகழ்காலத்தைக் காட்டி நிற்கின்றன.

இவ்வாய்பாடு பற்றிப் பேசும் உரையாசிரியர்களும் பிறரும் இது பொதுவாக இறந்த காலத்தையே காட்டும் எனக் குறிப்பிடுவர். ஆனால் செய்பு வாய்பாடு பற்றிப் பேசும் போது அது நிகழ்காலத்தையும் காட்டும் எனக் கூறு வர் பலர் (3. 5. 1. 1.) செய்து வாய்பாட்டு எச்சமும் உட னிகழ்ச்சிப் பொருளில் வரும்போது நிகழ்காலத்தில் வருவது கவனித்தற் பாலது.

இளம் பூரணர்

"செய்தென் எச்சத் திறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம்"

என்னும் சூத்திரத்திற்கு உரை எழுதும் போது

'இறந்த காலத்துச் செய்தெனெச்சம் ஒழிந்த நிகழ்காலமும் எதிர்காலமும் கொள் வழியுடைத்து'

எனக் கூறுவார்

"செய்தெனெச்சம் நிகழ்காலத்திற்கு ஏற்றது, கொடி யாடித் தோன்றும் என்பது; என்னை? தோற்றமும் ஆட்டமும் உடனிகழுமாகலின் என்பது"

என்பார். எனவே உடனிகழ்ச்சிப் பொருளில் இது வரும் போது நிகழ்காலத்தைக் காட்டும் என்பது இளமபூரணருக்கு உடன்பாடாகும்.

இதே கருத்தினையே நச்சினார்க்கினியரும் கொண்டு உள்ளார். இச்சூத்திரத்திற்கு எடுத்துக்காட்டுத் தரும் போது

"கொடி ஆடித்தோன்றும் என்புழித் தோற்றமும் ஆட்ட மும் உடன் நிகழ்தலின், செய்து என்பது நிகழ் காலத்திற்கும் உரித்து..." என இளம்பூரணர் கருத்தையும் அவர் தரும் உதாரணத்தையும் மேற்கொண்டுள்ளார்.

ஆனால் பிற உரையாசிரியர்கள் இவ்வாறு கருதுவதில்லை. இந்நூற்பாவிற்த

உண்டு வருவான்

போன்றவற்றைத் தந்து செல்லுவர். இளம்பூரணர் இவ் வாறு கூறுவது பொருத்தமாகவே உள்ளது.

### 3. 1. 3. 6. 3 எதிர்காலம்

செய்து வாய்பாட்டு எச்சம் தாக்கப் பொருளிலும், நோக்கப்பொருளிலும் வரும்போது எதிர்காலத்தையே காட்டும். இது காட்டும நிகழ்ச்சிக்கு முன்னரே இது கொண்டு முடியும் வினை காட்டும் நிகழ்ச்சி நடைபெறும்.

பதிற்றுப்பத்தில்

"... பேராற் றிருங்கரை யுடைத்து
... ... ... ... ... ... ...
... வானந் தளிசொரிந் தாஅங்கு" பதி 43-15

(பெரிய யாற்றிலே நீர்ப்பெருக்கானது பெரிய கரைகளை உடைத்துக் கொண்டு செல்லுமாறு ... ... மழை மேகம் மழை நீரைச் சொரிந்தது போல)

என வரும் அடிகளில் சொரிதல் தொழில் முன்னரும், அதன் தாக்கமாகிய காலவெச்சம் காட்டும் உடைதல் என்னும் தொழில் பின்னரும் நிகழ்தலின் இது எதிர்காலத்தைக் காட்டி நிற்றல் தெளிவு. இது போன்றே அகநானூற்றில்

"மரந்தலை கரிந்து நிலம்பயம் வாட
அலங்குகதிர் வேய்ந்த அழல்திகழ் நனந்தலை"
அகம் 169-1

(மரங்கள் உச்சி கரியவும், நிலம் வளங் குன்றவும் அசைகின்ற ஞாயிற்றின் கதிர் சூழப்பெற்ற வெம்மை விளங்கும் அகன்ற பாலைநிலத்தே)

என வரும் அடிகளிலும் கரிந்து என்னும் காலவெச்சம் காட்டும் நிகழ்ச்சி அதுகொண்டு முடியும் அழல் திகழ் என்னும் நிகழ்ச்சிக்குப் பின்னர் நடைபெற்று எதிர்காலம் காட்டுவதைக் காண்கிறோம்.

பிரிவு 3. 1. 3. 4. 6-ல் தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்வெச்சம் எதிர்காலம் காட்டிவரும் நிலையைக் காட்டி நிற்கின்றன.

இதுபோன்றே நோக்கப் பொருளைக் குறித்து வரும் நிலையிலும் இது எதிர்காலத்தையே காட்டுவதாக உள்ளது. இவ் விகுதி பழந்தமிழில் இரு இடங்களில் (கலி 1, சிலம்பு 1) மட்டுமே இப்பொருளில் வந்துள்ளது. கலித்தொகையில்

"... போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்" கலி 26-23

(நம் காதலர் போர் செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவருடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலான நாடுகளைப் பெற்ற வெற்றியையுடையவர்)

என வரும் அடிகளில் கால எச்சம் காட்டும் போர் மலைந்து என்னும் நிகழ்ச்சி பின்னரும், அது கொண்டு முடியும் எழுந்தவர் என்னும் வினையாலணையும் பெயர் காட்டும் எழும் தொழில் முன்னரும் நிகழ்ந்து இக்காலவெச்சம் எதிர் காலம் காட்டி நிற்றலைக் காண்கிறோம். இதுபோன்றே சிலம்பில்

"பொலந்தெரி மாக்கள் கலங்கஞ ரொழித்தாங்கு
இலங்குகொடி யெடுக்கும் நலங்கிளர் வீதி"
சிலம்பு 14-203

(பொன்னின் வேற்றுமையைப் பகுத்தறியும் பொன் வாணிகர், கொள்வோர் எவ்விடத்து எப்பொன் உளதென்று ஐயுறுந் துன்பத்தை ஒழிப்ப, அவ்விடங்களில் இவ்விடத்து இப்பொன் உளதென விளக்கக் கொடியெடுக்கும் நன்மை மிக்க பொற் கடைத் தெரு)

என வரும் அடிகளில் காலவெச்சம் காட்டும் ஒழித்தல் தொழில் பின்னரும், அது கொண்டு முடியும் வினையான எடுக்கும் காட்டும் தொழில் முன்னரும் நிகழ்தலின் இங்கும் இவ்வெச்சம் எதிர்காலத்தைக் காட்டிநிற்றல் தெளிவு.

உரையாசிரியர்கள் எதிர்காலம் காட்டுவதற்கு உரிய எடுத்துகாட்டுக்களாக,

உண்டு வரும் சாத்தன் (இளம்பூரணர்)

நீயுண்டு வருவாய் (சேனாவரையர்)

நீ உண்டு வருவாய் (நச்)

நாளை உழுது வருவான் (தெய்)

போன்றவற்றை உதாரணங்களாகத் தருவர். இவை இவ் வாக்கியங்கள் சொல்லப்படும் சமயத்தை நோக்க உண்டு, உழுது போன்றவை எதிர்காலமேயன்றிக் கொண்டு முடியும் வினைகளை நோக்க (அவற்றிற்குப் பின்னர் நிகழும்) எதிர் காலம் இல்லை என்பது நினைவு கூரத்தக்கது. ஆனால் முன்னர்க் காட்டப்பட்டவை கொண்டு முடியும் வினைகளின் செயல்கள் நடந்த பின்னரே செய்து எச்சத்தின் செயல்கள் நடைபெறுகின்றன.

# 3.2

## பழந்தமிழில் காலவெச்சவிகுதிகள் - 2

— ∅

### 3. 2. 1 — ∅

ஆடி, அளைஇ, போய், செய்யா போன்ற வினையெச்சங்களில் இவ்விகுதி காணப்படுகின்றது.

உகர விகுதிக்கு அடுத்தபடியாக அதிகமாகக் காணப்படும் காலவெச்சவிகுதி இதுவேயாகும். பதிற்றுப்பத்தில் உகர விகுதி நானூற்றிரண்டு இடங்களில் காணப்பட இவ்விகுதி நூற்று எழுபத்து மூன்று இடங்களில் காணப்படுவதும், பிற விகுதிகள் அனைத்தும் ஐம்பதுக்கும் குறைவான இடங்களிலேயே காணப்படுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கன (பட்டியல் -1). இவ்விகுதியும் உகர விகுதியும் வினைச்சொற்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன என்பதும் முன்னரே கூறப்பட்டது. ஒரு சில வினைகளே (அவை ஏற்கும் கால இடைநிலைகளை ஒட்டி) உகரத்தைக் காலஎச்ச விகுதியாக ஏற்கும் என்பதும் வேறுசில வினைகள் (இ போன்ற கால இடைநிலைகளை ஏற்பதை ஒட்டி) - ∅ விகுதியை ஏற்பதும் இங்கு உணரத்தக்கன. இந்நிலையில் இவ்விரண்டு விகுதிகளும் ஒன்றுகொன்று பதில்நிலை வழக்கில் (free variation) உள்ளன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

இதுபற்றிச் சேனாவரையர் போன்ற உரையாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளமை இங்கு மீண்டும் நினைவு கூரத்தக்கது. சேனாவரையர் இது உகர வீற்றின் திரிபு எனக் கூறுவதும். நச்சினார்க்கினியர் இதனை மறுப்பதும், இதனைத் திரிபு எனக்

கூறுதல் பொருந்தாது என்பதும் முன்னரே கூறப்பட்டது (உகர விகுதியின் கீழ்).

3. 2. 1. 1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கு உதாரணம் தர வந்த இளம்பூரணர் (228, 234)

ஓடிப் பாடி வந்தான்

ஆடித் தோன்றும்

உண்ணா வந்தான்

ஆகியவற்றையும், சேனாவரையர் (228)

எஞ்சி ஓடி போய் தூஉய் உண்ணா

உரிஞி ஆய் பராஅய் தாஅய்

ஆகியவற்றையும், நச்சினார்க்கினியர் (230) சேனாவரையரைப் பின்பற்றி

எஞ்சி தப்பி ஆய் உண்ணா

உரிஞி ஓடி போய்

ஆகியவற்றையும் தருவர். தெய்வச்சிலையார் இதற்குரிய உதாரணங்களைத் தனியாகத் தரவில்லை என்பதும், சேனாவரையர் போன்று செய்து என்ற வாய்பாட்டுக் காலவெச்சத்தில் இது அடங்கும் என வெளிப்படையாகக் கூறாமையும் குறிப்பிடத்தக்கன. எனினும் இவர் இத்தகைய உதாரணங்களை வேறு ஒரு இடத்தில் (227) தந்து சென்றுள்ளார்.

கல்லாடனார்

ஓடி தூஉய்

ஆகியவற்றைத் தந்து செல்வார்.

3. 2. 1. 2 சூழல்கள்

இவ்வெச்சம் பழந்தமிழ் நூல்களில்

1) இறந்தகாலம் காட்டும் இகர இடைநிலைக்குப் பின்னரும்

2) இறந்தகாலம் காட்டும் யகர இடைநிலைக்குப் பின்னரும்

3) எதிர்மறை காட்டும் -ஆ- இடைநிலைக்குப் பின்னரும்

4) -இ- அளபெடைக்குப் பின்னரும் வரும்.

### 3. 2. 1. 2. 1 இகர இடைநிலைக்குப் பின்னர்

இவ்வெச்சம் இச்சூழலிலேயே மிக அதிகமாகக் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக, பதிற்றுப்பத்தில் காணப்படும் நூற்று எழுபத்துமூன்று இடங்களில் நூற்றுமுப்பத்திரண்டு இடங்கள் இச்சூழலிலேயே உள்ளன. இதே நிலையினைத்தான் பழந்தமிழ் நூல்கள் அனைத்திலும் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| அஞ்சி | அஞ்சி | பதி 31—18 |
| இரங்கி | இரங்கி | ஐங் 118—4 |
| அடங்கி | அமைந்து | அகம் 312—1 |
| ஆற்றி | செலுத்துகையினால் | நற் 89—1 |
| எண்ணி | நினைந்து | குறு 255—6 |
| உதவி | உதவி | புறம் 179—6 |
| பொருந்தி | அணுகி | பத்து 8—168 |
| ஆடி | ஆடி | பரி 10—103 |
| எள்ளி | இகழ்ந்து | கலி 33—13 |
| ஏங்கி | ஏங்கி | குறள் 1248 |
| காட்டி | காட்டி | சிலம்பு 8—81 |
| நோக்கி | நோக்கி | மணி 3—11 |

### 3. 2. 1. 2. 2 யகர (ஒற்று) இடைநிலைக்குப் பின்னர்

இச் சூழலிலும் இவ்விகுதி வரக் காண்கிறோம். குறிப்பாகப் பழந்தமிழில் கூய், தாய், சாய், வினாய் போன்ற சொற்கள் அதிகமாக வருவது குறிப்பிடத் தக்கது. இவற்றைக் கூவி, தாவி, வினாவி போன்று வகர உடம்படு மெய்களை இட்டுக் குறிப்பிட முடியும். சங்க இலக்கியங்கள் அனைத்தையும் எடுத்து நோக்கின் வகர உடம்படுமெய்ச் சொற்கள்

மிகக் குறைவாகவே உள்ளன. எடுத்துக் காட்டாக, தாஅய் என்ற சொல் பழந்தமிழ் இலக்கியங்களில் நாற்பத்தைந்து இடங்களில் காணப்பட, **தாவி** என்ற சொல் காணப்படாதது இங்குக் குறிப்பிடத்தக்கது. இது போன்றே **கூய்** என்ற சொல் பதினாறு இடங்களில் காணப்பட, **கூவி** என்ற சொல் கிலப்பதிகாரத்தில் ஒரு இடத்தில் மட்டுமே (16-150) காணப்படுகிறது. **ஏஎய்** என்ற சொல் பதி (1), அகம் (1), புறம் (1) ஆகியவற்றில் காணப்பட **ஏவி** என்ற சொல் புறத்தில் ஒரு இடத்திலும் (6-13), சிலம்பில் ஏழு இடங்களிலும் காணப்படுகிறது. இதே நிலையினைத்தான் கடாஅய், தூஉய், வினாஅய் போன்ற இதர சொற்களிலும் காணுகிறோம். இந்நிலையில் வகர உடம்படுமெய் ஏற்று வருநிலைப் பின்பழந் தமிழ்க் கூறாகக் கருதலாம்.

யகர ஒற்று இறந்த காலம் காட்டுவதாகும். இது பற்றிக் கூறும் நச்சினார்க்கினியர்

> "ஆ, போ என்பன முதல் நிலையாய்க்
> காலங்காட்டும் யகர ஒற்றுப் பெற்று ஆயினான்
> போயினான் என முற்றும்......"

எனக் கூறுவார் 'வீரசோழியமும் யகரம் இறந்த காலம் காட்டும் (66) எனக் கூறும். இதுபோன்றே மொழியியல் அறிஞர்களும் யகரம் இறந்த காலம் காட்டும் எனக் கூறுவர் (Agesthialingom, & Shanmugam, 1970: 59; Chithraputhiran 1978: 112).

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் பத்தொன்பது வினைகள் இத்தகைய யகர ஒற்றுப் 'பெற்றுப் பெற்று வருதல் காணத்தக்கது (Agesthialingom 1979; 171).

### 3. 2. 1. 3. எதிர்மறை காட்டும் -ஆ- இடைநிலைக்குப் பின்னர்

இச் சூனிய விகுதி எதிர்மறை காட்டும் ஆகார இடைநிலைக்கு பின்னரும் வருதல் காணலாம். பழந்தமிழ் இலக்கியங்களில் அகம் (8), நற்(2), குறு (3), புறம் (2), பரி (1), கலி (2),

குறள் (16) ஆகியவற்றில் மட்டுமே இச்சூழல் காணப்படு கிறது. தொல்காப்பியம் பொதுவாக எதிர்மறை எச்சவாய் பாட்டினைத் தருவதில்லை.

''பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா''
(721)

எனப் பொதுவாகப் பெயரெச்சமும் வினையெச்சமும் எதிர் மறையில் வரும் எனக் குறிப்பிட்டுச் செல்லுகின்றதே ஒழிய அவற்றின் வாய்பாடு பற்றி வினையியலில் எதுவும் பேசப் படுவதில்லை.

''செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர்'' (222)

என எழுத்ததிகாரத்தில் உயிர்மயங்கியலில் இவ்வாய்பாடு பற்றிக் குறிப்பிடும். செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சம் எதிர்மறையிலும் உடன்பாட்டிலும் வரும் என்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்வாய்பாட்டு வினையெச் சம் உடன் பாட்டிலும் எதிர்மறையிலும் வருவதும், ஆனால் திருக்குறள் ஒழிந்த ஏனைய இலக்கியங்களில் உடன்பாட்டி லேயே அதிகமாக வருவதும் இங்குக் குறிப்பிடத்தக்கன. எனினும் தொல்காப்பியரோ அல்லது உரையாசிரியர்களோ எழுத்தியலில் காணப்படும் சூத்திரம் எதிர்மறையைக் குறிப்பிடு வதா அல்லது உடன்பாட்டினைக் குறிப்பிடுவதா எனச்சுட்டிச் செல்லவில்லை. புணர்ச்சியியலில் இவ் வாய்ப்பாட்டு வினை யெச்சம் எவ்வாறு வரும் என்பதைக் குறித்து நிற்கும் நிலை யில் அதன் பொருள் பற்றிக் கூறவேண்டிய அவசியமில்லை என்பதால் தான் போலும் அவர்கள் பொருள் பற்றிப் பேசவில்லை என எண்ணலாம்.

செய்யா, செய்யாது, செய்யாமை, செய்யாமல் ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்கள் எதிர்மறை காட்டும்.

இவற்றுள் செய்யாது வாய்பாட்டு எச்சமே பழந்தமிழ் இலக்கியங்களில் மிக அதிகமாகக் காணப்படுகிறது. செய்யா, செய்யாமை ஆகிய வாய்பாட்டு எச்சங்கள் வரும் எண்ணிக்கையில் ஓரளவு ஒன்றாகவே உள்ளன.

| | செய்யாது | செய்யா | செய்யாமை | செய்யாமல் |
|---|---|---|---|---|
| பதி | 48 | — | 1 | — |
| ஐங் | 26 | — | — | — |
| அகம் | 136 | 8 | 7 | — |
| நற் | 72 | 2 | 1 | — |
| குறு | 45 | 3 | — | — |
| புறம் | 115 | 2 | 2 | — |
| பத்து | 71 | — | — | 1 |
| பரி | 75 | 1 | 1 | 2 |
| கலி | 115 | 2 | 9 | 11 |
| குறள் | 46 | 16 | 11 | 4 |
| சிலம்பு | 68 | — | 1 | 6 |
| மணி | 90 | — | — | 4 |

செய்யா வாய்பாட்டு எதிர்மறை எச்சம் (செய்+ஆ+∅ பழத்தமிழ் இலக்கியங்களில் முப்பத்துநான்கு இடங்களில் வர, செய்யாமை வாய்பாட்டு எச்சமோ முப்பதுமூன்று இடங்களில் வருவது குறிப்பிடத்தக்கது.

முன்னரே குறிப்பிட்டபடி, பழந்தமிழில் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு, சிலம்பு, மணிமேகலை ஒழிந்த எல்லா இலக்கியங்களிலும் இவ்வெச்சம் வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| அமையா | அமையாமல் | அகம் 27–14 |
| நிலைசெல்லா | நிலைகொள்ளாமல் | நற் 263–8 |
| நில்லா | நில்லாமல் | குறு 256–6 |
| கொடா | கைவிடாது | புறம் 272-7 |
| குறையா | குறையாது | பரி 8–92 |
| செல்லா | செல்லாது | கலி 93-33 |
| அறியா | அறிய மாட்டாது | குறள் 1116 |

### 3. 2. 1. 2. 4 - இ - அளபெடைக்குப் பின்னர்

பழந்தமிழ் இலக்கியங்களில் தனி ஒரு வகையான வினையெச்சங்களையும் காணுகிறோம். இவ்வினையெச்சச் சொற்களில் அளபெடை காணப்படுவதும் அவ்வளபெடைகள் பொதுவாக ஐகார, ஈகார ஈறுகளின் அளபெடைகளாக இருப்பதும் குறிப்பிடத்தக்கது. இச்சொற்களில் காணப்படும் ஐகார, ஈகார ஈறுகளின் அளபெடை நீட்டமே வினையெச்ச விகுதியாக இங்குக் கருதப்படுகிறது.

அசை
அளை
இசை
உடை
உரை

போன்ற ஐகார ஈற்றுச்சொற்கள் அளபெடுக்கும்போது அவை வினையெச்சமாகப் பயன்படுகின்றன. பொதுவாக ஐகார, ஈகாரச் சொற்களே காணப்படினும் சின, விரவு என்னும் இரு வினைச் சொற்களும் கூட, சினைஇ, விரைஇ என ஈகாரத்தை ஏற்று வினையெச்சமாகப் பயன்படுகின்றன. இதுபோன்றே செல் என்ற வினைச்சொல்லும் ஈகாரத்தை ஏற்றுப் பின்னர் அளபெடுத்து வினையெச்சமாகப் பயன்படுகிறது. உண் என்ற வினைச்சொல்லும் ஈகாரத்தை ஏற்று அளபெடுத்து வினையெச்சமாக மாறியுள்ளது. இத்தகைய சொற்கள் சிலவற்றைப் பழந்தமிழில் காணமுடிகிறது.

### 3 2. 1. 2. 4. 1 ஐகார ஈற்றுச்சொற்கள்

| | | |
|---|---|---|
| உரைஇ | சென்று | பதி 40-9 |
| மறைஇ | மறைந்து | ஐங் 115-3 |
| கடைஇ | செலுத்தி | அகம் 74-11 |
| தகைஇ | பெற்று | நற் 124-9 |
| சிதைஇ | சிதைத்து | குறு 349-1 |
| தலைஇ | மேற்சென்று | புறம் 371-12 |

| | | |
|---|---|---|
| நிரைஇ | நிரைத்து | பத்து 4—120 |
| பிணைஇ | தழுவி | கலி 102—26 |

### 3. 2. 1. 2. 4. 2 உகர ஈற்றுச் சொற்கள்

| | | |
|---|---|---|
| ஒரீஇ | நீங்கி | பதி 13—27 |
| இரீஇ | இருத்தி | புறம் 1:0—8 |
| எழீஇ | எழுப்பி | பதி 29—8 |
| உடீஇ | உடுத்தி | புறம் 279—8 |
| உரீஇ | உருவி | புறம் 235—10 |
| இரீஇ | இருந்து | ஐங் 388—2 |
| குழீஇ | கூடி | அகம் 30—6 |
| குழீஇ | சேர்ந்து | நற் 90—11 |
| உடீஇ | உடுத்திக் கொண்டு | குறு 167—2 |
| கொளீஇ | கொளுத்தி | புறம் 14—13 |
| செறீஇ | செருகி | புறம் 22—21 |
| தரீஇ | கொணர்ந்து | பதி 37—9 |
| தழீஇ | அணைத்து | புறம் 58—5 |
| நிறீஇ | நிறுத்தி | பத்து 1—219 |
| இடீஇ | இட்டுக்கொண்டு | பரி 10—11 |
| எழீஇ | எழுந்து | கலி 136—19 |
| தழீஇ | அணைத்து | குறள் 544 |
| படீஇ | படிவித்து | சிலம்பு 27—240 |
| தழீஇ | பற்றிய வண்ணம் | மணி 4—56 |

### 3. 2. 1. 2. 4. 3 ஒற்றுச் சொற்கள்

| | | |
|---|---|---|
| உணீஇ | தின்று | ஐங் 268—2 |
| செலீஇ | சென்று | நற் 54—1 |
| செலீஇ | புகுந்து | மணி 2—13 |

### 3. 2. 1. 3 பொருள்

பழந்தமிழில் இவ்விகுதி வரிசைப் பொருள், துணை நிகழ்ச்சிப் பொருள், தாக்கப் பொருள், உடனிகழ்ச்சிப் பொருள் நிலைமைப்பொருள், காரணப்பொருள், வினையடைப் பொருள்

ஆகியவற்றைக் காட்டி நிற்கும். மேலும் இவ்விகுதியைக் கொண்ட சொற்கள் (ஆடி, போய், செய்யா போன்றவை) தலைமை வினையாகவும் பல இடங்களில் வந்துள்ளன.

3 2 1. 3. 1 வரிசைப்பொருள்

இது துணைநிகழ்ச்சிப் பொருளை அடுத்து வரிசைப் பொருளிலேயே மிக அதிகமான இடங்களில் வந்துள்ளது. பதிற்றுப்பத்தில்

''அவ லெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்'' பதி 29-1

என வரும் அடிகளில் இதனைக் காணலாம். உரை எழுதுபவர்

''அவலிடித்த உலக்கையை வாழை மரத்தில் சார்த்தி விட்டு வளையணிந்த இளமகளிர் வள்ளையினது பூவைப் பறிக்கும்,.........நெல் வயலிடத்தே'' என எழுதுவார். இங்கு ''சார்த்திவிட்டு' என எழுதுதல் காண்க.

இது போன்றே ஐங்குறுநூற்றில்

''கடுவிரன் மந்திக் கல்லா வன்பற
ழுருவரைத் தீந்தே னெடுப்பி யயல
துருகெழு நெடுஞ்சினைப் பாயு நாட'' 272—1

என வரும் அடிகளுக்குப் பொருள் எழுதும் ஆசிரியர் ''ஈக்களை அலைத்து எழுப்பி விட்டுப் பின் அந்த ஈக்களுக்கு அஞ்சிப் பக்கத்தே உள்ள அச்சம் பொருந்திய மரக்கிளையில் பாயும்'' என எழுதுவது இங்குக் கவனிக்கத் தக்கது.

பொதுவாக வரிசைப்பொருளைக் காலவெச்சங்கள் காட்டும்போது ஒரு செயல் முடிந்த பின்னரே மற்றொரு செயல் நடப்பதாகக் கருதலாம். இவ்விரண்டு செயல்களுக்கு மிடையே கால இடையீடு இருக்கவேண்டிய கட்டாயமில்லை. காலவெச்சச் செயல் முற்றுப் பெறுகின்ற நிலையே முக்கிய மானது. இதனால்தான் உரையாசிரியர்கள், விட்டு பின் போன்ற சொற்களை இட்டு உரை எழுதுகின்றனர். ஐங்குறுநூறு

உரையாசிரியரும் ''ஈக்களை அலைத்து எழுப்பிவிட்டுப் பின் அந்த ஈக்களுக்கு அஞ்சி'' என்று எழுதுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. இன்னும் இதனையே எழுப்பியபின் எனவும் கூறமுடியும்.

அகநானூற்றில்

> ''பல்கோள் நெல்லிப் பைங்காய் அருந்தி
> மெல்கிடு மடவரை..............'' அகம் 399-14

(பலவாகக் காய்த்த நெல்லியின் பசிய காய்களை உண்டு அசையிடுகின்ற இளைய மரைமான்)

எனவும், நற்றிணையில்

> ''... ... ... ... சென்று
> தம்வினை முற்றி வருஉம்வரை...'' நற் 129—4

(அவர் தனியே சென்று தமது வினை முடித்து வருமளவும்)

எனவும், குறுந்தொகையில்

> ''நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி
> நின்குறி வந்தனென் இயல்தேர்க் கொண்க''
> குறு 114-1

(அழகிய தேரையுடைய தலைவனே, நெய்தனிலப் பரப்பின் கண் எனது பாவையைத் துயிலப் போகட்டு நினது குறியிடத்தே வந்துள்ளேன்)

எனவும், புறநானூற்றில்

> ''மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்
> கோவெனப் பெயரிய காலை......'' புறம்152-20

(இருபத்தொரு பாடல்துறையையும் முறையாற் பாடி முடித்து, பின்னர்க் கோவேயென்று அவன் பெயர் கூறிய காலத்து)

எனவும், பத்துப்பாட்டில்

"......சிறுதினைப் படுபுள் ஓப்பி
எற்பட வருதியர் ......... ......" பத்து 8–38

(சிறிய தினையிடத்தே வீழ்கின்ற பறவைகளை ஓட்டி ஞாயிறு மறையும் பொழுதில் நீயிர் வருவீராக)

எனவும், பரிபாடலில்

"அருநிலை நீரின் அவள் துயர் கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல்வீழ்ந்து
தழுவுந் தகைவகைத்து.........." பரி 21-43

(அருநிலையான நீரின்கண் அவள் படுகின்ற அல்லலைக் கண்டு கணவன் இன்புற்றுப் பின்னர்க் கொய்தற்குரிய நீர்ப்பூக்கள் மிக்க சுனைநீரிற் பாய்ந்து அவளைத் தழுவும் தன்மையினை யுடைத்து)

எனவும், கலித்தொகையில்

"மறை யேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி
ஊர்வான் போல் தோன்று மவன்" கலி 103-36

(மறுவினையுடைய ஏற்றின் மேலேயிருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறையிடத்துத் தெப்பத்தின் மேற் கிடந்து அதனைத் தள்ளுகின்றவனைப் போலே தோன்றுகின்றவன்)

எனவும், குறளில்

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு" குறள் 86

(தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக்கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ணவிருப்பான் மறுபிறப்பில் தேவனாய் வானிலுள்ளார்க்கு நல்விருந்தாம்)

எனவும், சிலம்பில்

"மாதவத் தாட்டியொடு காதலி தன்னையோர்
தீதுதீர் சிறப்பின் சிறையகத் திருத்தி
இடுமுள் வேலி நீங்கி ஆங்கோர்
நெடுநெறி மருங்கின் நீர்தலைப் படுவோன்"
சிலம்பு 13—40

(கவுந்தியடிகளுடனே கண்ணகியையும் குற்றம் நீங்கிய சிறப்பினையுடைய ஓர் அடைப்புள்ளே இருக்கச் செய்து முள்ளிட்டுக் கட்டப் பெற்ற வேலியைக் கடந்து அவ்விடத்து நீண்ட வழிக்கண் உள்ளதோர் நீர்நிலைக்கண் சார்ந்தவன்)

எனவும், மணிமேகலையில்

''யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
உண்டொழி மிச்சி லுண்டு...........
கண்படை கொள்ளுங் காவலன்......" மணி 13–113

(முக்கட் கூட்டத்தை அணுகி வருக! வருக! என்று இனிதாக அழைத்து அனைவரையும் ஒருங்கே உணவூட்டி, அவர் உண்ட பின் எஞ்சிய உணவினைத் தான் உண்டு ஆருயிர் காவலனாகிய அவ்வருளறச் செல்வன்...... துயிலுவான்)

எனவும் இவ்விகுதி வரிசைப்பொருள் காட்டி நிற்கக் காண்கிறோம்.

### 3. 2. 1. 3. 2 துணைநிகழ்ச்சிப் பொருள்

பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்விகுதி துணைநிகழ்ச்சிப் பொருளிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் வரக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக, அகநானூற்றில் அறுநூற்று ஐந்து இடங்களில் இவ்விகுதி இப்பொருளில் வர, பிற பொருள்கள் அனைத்தும் நானூற்று ஐம்பத்துமூன்று இடங்களிலேயே வந்துள்ளன.

பதிற்றுப்பத்தில்

''துறைநணி மருத மேறித் தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பின்" பதி 27-7

என வரும் அடிகளில் ஏறி என்னும் காலவெச்சம் துணை நிகழ்ச்சிப்பொருளில் வந்துள்ளமையைக் காணலாம். அது கொண்டு முடியும் இசைப்பின் என்னும் வினையின் ஒரு துணைநிகழ்ச்சியாகவே இது வந்துள்ளது. இதற்குப் பொருள் கூறும் போது "விளங்குகின்ற வளையினையுடைய இளமகளிர் நீர்த்துறைக்கண்ணிற்கும் மருத மரத்தின் மேல் ஏறி நெற்

கதிர்களை மேயும் புட்களை ஓப்புதற்காகத் தெளிந்த தம் விளிக்குரலை எடுத்து இசைப்பாராயின்'' என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

"துவலைத் தண்டுளி வீசிப்
பயலை செய்தன பனிபடு துறையே" ஐங் 141-2

(நம் தண்கடற்றுறைகள் துவலையாகிய குளிர்ந்த துளிகளை என்மேல் வீசி எனக்கிந்தப் பசலை நோயை உண்டாக்கின)

எனவும், அகநானூற்றில்

"......நெடுங்கண் நீர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி...
...ஓடி விரைந்துதன்
ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர" அகம் 176-8

(நீண்ட கண்ணிணையுடைய நீர்ஞெண்டானது இரையினை ஆய்ந்து பார்த்திருந்த வெள்ளிய நாரையினைக் கண்டு அஞ்சி ...ஓடிச் சென்று விரைந்து தனது ஈரம் மிக்க மண் அளையுட் பதுங்கும் ஊரனே!)

எனவும், நற்றிணையில்

"... ... ... ... ... பரதவர்
... ... ... ... ... ... ...
மீன் நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய
சிறுதீ விளக்கின் ........." நற் 175-1

(பரதமாக்கள் மீன்கொழுப்பாலாகிய நெய்யை வார்த்துக் கிளிஞ்சலில் ஏற்றிய சிறிய சுடர்விளக்கினொளியிலே)

எனவும், குறுந்தொகையில்

"... ... ... மாலை எய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மா ணாக மணந்துவக் கும்மே" குறு 189-5

(மாலைப்போதிலேயே நம்மனையை அடைந்து சில்வாகிய வரிசையையுடைய வெள்ளிய வளையணல அணிந்த தலைவியினது பலவாகிய மாடசிமையுடைய மார்பத்தை அணைந்து உவப்போம்)

எனவும், புறநானூற்றில்

"வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கம்" புறம் 168-10

(நிணந் தோய்ந்த வெளிய நிறத்தினையுடைய பெரிய புறத்தைக் கழுவாதே உலைநீராக வார்த்து ஏற்றி சந்தன விறகான் உவிக்கப்பட்ட சோற்றை)

எனவும், பத்துப்பாட்டில்

"குறுங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி
நிலையருங் குட்டம் நோக்கி நெடிதிருந்து"
பத்து 3-179

(குறிய தாளினையுடைய காஞ்சிமரத்தின் கொம்பிலே ஏறி ஒரு காலத்தும் நிலைப்படுதல் அரிதாகிய குளத்தின் கண் கூர்ந்து பார்த்து மீன்களை எடுக்கும் காலத்தைக் கருதி நெடிதிருந்து)

எனவும், பரிபாடலில்

" .. ... ... அவ னிடைத் தோன்றி
உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்" பரி 8-3

(அப் பிரமதேவனிடத்தினின்றும் தோன்றி உலகின்கண் நிலவும் இருளைப் போக்கிய ஆதித்தர் பன்னிருவரும்)

எனவும், கலித்தொகையில்

"தன்னலங்காட்டித் தகையினாற் கால்தட்டி வீழ்க்கும்"
கலி 97-17

(தன்னழகைக் காட்டி அவ்வழகாலே ஒருவரும் போகாதபடி காலைத் தடுத்து வீழ்க்கும்)

எனவும், குறளில்

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது" குறள் 29

(நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவர்து வெகுளி, தானுள்ளளவு கணமேயாயினும், வெகுளப்பட்டாரால் தடுத்தல் அரிது)

எனவும், சிலமபில்

"ஏவ லாளர் யாங்கணுஞ் சென்று
கோவலன் தேடிக் கொணர்கெனப் பெயர்ந்ததும்"
சிலம்பு 13-61

(பணியாளர் எத்திசைக்கண்ணும் சென்று கோவலனைத் தேடிக்கொண்டு வருவீராக என்று மாசாத்துவான் கூற அவர்கள் சென்றதும்)

எனவும், மணிமேகலையில்

"நாவால் நக்கி நன்பா லூட்டிப்
போகா தெழுநாட் புறங்காத் தோம்ப" மணி 13-13

(தனது நாவினாலே நக்கியும், நல்ல பாலை அதன் வாயிற் பிலிற்றி ஊட்டியும ஏழு நாள்காறும் அதற்குப் புறம் போகாமல் அயலிலே நின்று பாதுகாவா நிற்ப)

எனவும் இவ்விகுதி பழந்தமிழ் இலக்கியங்களில் துணை நிகழ்ச்சிப் பொருளைக் காட்டி நிற்றலைக் காண்கிறோம.

3. 2. 1. 3 3 உடனிகழ்ச்சிப் பொருள்

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இகர ஈற்றைக் கொண்ட காலவெச்சம் உடனிகழ்ச்சிப் பொருளிலும் வருதல் காணலாம்.

"நெடுவயி னொளிறு மின்னுப் பரந்தாங்குப்
புலியுறை கழித்த புலவுவா யெஃக
மேவ லாடவர் வலனுயர்த் தேந்தி
ஆர ரண் கடந்த தார்" ... ... பதி 24-1

என வரும் அடிகளில் உடனிகழ்ச்சிப் பொருள் வருதல் காண லாம். பகைவீரர்கள் தங்கள் வாள்களை வலக்கையில் ஏந்திக் கொண்டு அரண் கடந்தனர் எனப் பொருள்படும் நிலையில் ஏந்துதல் தொழிலும் கடக்கும் தொழிலும் ஒருசேர நிகழ்ந்து உடனிகழ்ச்சிப் பொருளைத் தருவதாயிற்று. இதுபோன்றே

''அமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே
யகன் பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்
முறுவலி லின்னகை பயிற்றிச்
சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே'' ஐங் 403-2

என வரும் ஐங்குறுநூற்று அடிகளில் 'இன்னகை பயிற்றுதலும்' 'தேர் உருட்டும் தொழிலும்' ஒரு சேர நிகழ்தலைக் காண லாம். உரையாசிரியரும் ''இனிய நகைப்பினை செய்து கொண்டு ... தனது சிறிய தேரினை உருட்டி வருங்கால்'' என எழுதுவது காண்க.

அகநானூற்றில்

''வேறுவேறு கவலைய ஆறுபரிந் தலறி
உழைமான் இனநிரை யோடும்'' அகம் 249-17

(ஆண்மானுடன் கூடிய கூட்டமாய மானினம்...... வேறு வேறாய கவர்த்த நெறிகளில் வருந்தி அலறி ஓடா நிற்கும்)

எனவும், நற்றிணையில்

''செறிதொடி தெளிர்ப்ப வீசி மறுகிற்
... ... ... ... ... ... ...
சென்றனள்... ... ... ...'' நற் 20-5

(நெருங்கிய வளைகள் ஒலிக்கும்படி கைகளை வீசிக் கொண்டு ......எமது மறுகின்கட் சென்றனள்)

எனவும், குறுந்தொகையில்

''... ... நல்ல கூறிப்
புணர்ந்துடன் போதல் பொருளென'' குறு 297-5

(நன்மைடைய செய்திகளைக் கூறிக்கொண்டு தலைவனோடு சேர்ந்து ஒருங்கே செல்லுதல் ஒன்றே செயத்தகும் செயலாகும என்று)

எனவும, புறநானூற்றில்

"... ... ... வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்" புறம் 34-13

(வேண்டிய வார்த்தைகளைப் பல கூறி பெரிய கட்டியாகிய கொழுவிய சோற்றை யருந்திய பாணர்க்கு)

எனவும், பத்துப்பாட்டில்

"சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடுஞ் சோலை" பத்து 1-40

(சீர்மை விளங்குகின்ற மலையிட மெல்லாம் எதிரொலி செய்யு மாறு பாடி கொடுமையுடைய தெய்வமகளிர்கள் ஆடா நிற்கும் சோலை)

எனவும், பரிபாடலில்

"இசைபடு பக்கம் இருபாலுங் கோலி
விடுபொறி மஞ்ஞை பெயர்புட னாட" பரி 21-31

(முகில் முழக்கம் உண்டாய விடத்து சுடர்விடாநின்ற புள்ளி களையுடைய மயில்கள் தம் இரண்டு இறகுகளையும் விரித்துக் கொண்டு பலவும் ஒன்றுகூடி எழுந்து கூத்தாடாநிற்ப)

எனவும், கலித்தொகையில்

"விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்"
கலி 31-8

(அலர்ந்த காஞ்சிப்பூவின் தாதை அளைந்து கரிய குயில்கள் கூவாநிற்கவும்)

எனவும், குறளில்

"காலங் கருதி ___ ___
ஞாலங் கருது பவர்" குறள் 485

(தப்பாது ஞாலமெல்லாங் கொள்ளக் கருது மரசர் ... அதற் கேற்ற காலத்தையே கருதி அது வருந் துணையும பகைமேற் செல்லார்)

எனவும், சிலம்பில்

"தானங் கொள்ளுந் தகைமையின் வருவோன்
தளர்ந்த நடையில் தண்டுகா லூன்றி" சிலம்பு 15-43

(தானத்தைப் பெறும் தகுதியோடு தளர்ந்த நடையுடன் ஊன்றுகோலை ்ய காலாக ஊன்றி வருவோன்)

எனவும், மணிமேகலையில்

"ஓடிமரம் பற்றி ஊர்திரை யுதைப்ப
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மையன் ஆயினன்"
மணி 16-14

(முறிந்து மிதக்கின்ற மரத்தைத் தெப்பமாகப் பற்றிக் கொண்டு கரைநோக்கி இயங்குகின்ற அலைகள் அம் மரத்தினை உந்திச் செலுத்துதலாலே சென்று ஆடையின்றித் திரிகின்றவராகிய நாகர் என்போர் வாழுகின்ற தீவின் மலைப்பக்கத்தே நிலத்தி தவறி அவர் வயப்பட்டனன்)

எனவும் இவ்விகுதி பழந்தமிழ் நூல்கள் அனைத்திலும் உடனி க்ழ்ச்சிப்பொருளைக் காட்டி வருதல் காணத்தக்கது.

### 3. 2. 1. 3. 4 நிலைமைப்பொருள்

இவ்வீற்றெச்சம் நிலைமைப்பொருளிலும் பலவேறு இடங்களில் வந்துள்ளமையைக் காண்கிறோம்.

பதிற்றுப்பத்தில்

"உவலை சூடி யுருத்துவரு மலிர்நிறை" பதி 28-12

என வரும் அடியில் சூடி என்னும் காலவெச்சம் நிலைமைப் பொருளில் வந்திருப்பதைக் காணலாம். உரையாசிரியர் "தழைகளைச் சுமந்து சினமுற்று வருவது போல ஒலமிட்டு மிக்கு வரும் பேரியாற்று வெள்ளம்" என்று உரை எழுதுதல் காண்க.

இது போன்றே ஐங்குறு நூற்றில்

''சுடுபொன் னன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே"
ஐங் 432-2

என வரும் அடிகளிலும் சூடி என்னும் காலவெச்சம் நிலைமைப் பொருளில் வந்துள்ளது. உரையாசிரியரும் "தீயிடைச் சுட்டுத் தூய்மை செய்த பொன் போன்று நிறமும் ஒளியுமுடைய கொன்றை மலரைச் சூடிக்கொண்டு, திருமண விழாவிற்குச் செல்வார் போன்று அணி செய்துகொண்டு திரிகின்ற மறவர் களையும் தன்பாலுடைத்துக் காண்" எனப் பொருள் எழுது தல் காணலாம்.

அகநானூற்றில்

"... வேங்கை மலிதொடர் அடைச்சிப்
பொலிந்த ஆயமொடு காண்டக இயலி" அகம் 188-9

(வேங்கைப் பூக்களாலாய நிறைந்த மாலையைத் தரித்து, பொலிவுற்ற ஆயத்தாருடன் அழகு பொருந்த நடந்து)

எனவும், நற்றிணையில்

"குறுஞ்சுனைக் குவளை அடைச்சிநாம் புணரிய
நறுந்தண் சாரல் ஆடுகம வருகோ" நற் 204-3

(பறித்த சுனைக்குவளை மலரைச் சூடி நாம் பண்டு புணர்ந்த நறிய தண்ணிய மலைப்பக்கத்தில் விளையாடுவோ மாதலால் அதற்கு அங்கு வருவேனோ?)

எனவும், குறுந்தொகையில்

"கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்
பெரும் புனல் வந்த இருந்துறை விரும்பி" குறு 80-1

(ஆம்பலினுடைய கூந்தல் போன்ற நெறிப்பினையுடைய முழுநெறித் தழையை உடுத்து, மிக்க நீர் பெருகிவந்துள்ள பெரிய துறையின்கண் ஆடுதலை விரும்பி)

எனவும், புறநானூற்றில்

"... ... ... சாந்தருந்திப்
பல்பொறிக் கொண்ட வேந்தெழிலகலம்"
புறம் 161–26

(சாந்து பூசப்பட்டுப் பல நல்ல இலக்கணத்தைப் பொருந்திய மேம்பட்ட அழகினையுடைய மார்பை)

எனவும், பத்துப்பாட்டில்

"புதுப்பூஞ் செம்மல் சூடி ... ...
... ... ... ஐது நடந்து" பத்து 3-5

(புதிய பூக்களாகிய வாடலைச் சூடி ... ... மெல்ல நடந்து சென்று)

எனவும், பரிபாடலில்

"உரிமாண் புனைகலம் ஒண்டுகில் தாங்கிப்
புரிமாண் புரவியர் ... ... ..." பரி 19–12

(தத்தமக்கு உரிய மாண்புடைய அணிகலன்களையும், ஆடைகளையும் அணிந்து கொண்டு கண்டோர் விரும்புதல் மாட்சிமையுடைய குதிரைகளை ஊர்வோரும்)

எனவும், கலித்தொகையில்

"... ... ... இவ்வூரார்
தாஅந் தளிர்சூடித் தந்நலம் பாடுப" கலி 143–27

(இவ்வூரின் மகளிர் தாம் விரவின மாலைகளைச் சூடி ஆடவர் மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறுவார்கள்)

எனவும், குறளில்

"சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண்" குறள் 744

(காக்க வேண்டுமிடஞ் சிறிதாய், அகன்ற இடத்தை யுடைத்தாய் தன்னை வந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணாவது)

எனவும், சிலம்பில்

"கடப்பு சூடி உடம்பிடி ஏந்தி
மடந்தை பொருட்டால் வருவ திவ்வூர்"

சிலம்பு 24-10-1

(நீ இவ்வூர்க்கண் கடப்ப மலர்மாலையைச் சூடி வேலினைக் கையிலேந்தி ஓர் மங்கையின் பொருட்டு வருதல்)

எனவும். மணிமேகலையில்

"... ... வஞ்சி சூடி
... ... ... ... ...
தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத்தலை
வந்தோர்" மணி 19-120

(வஞ்சிப் பூமாலையைச் சூடி தலைமைத் தன்மை பொருந்திய தூசிப்படையோடு வந்து போர் செய்து மாறுபட்டு வந்த வராகிய சேரமன்னனும், பாண்டிய மன்னனும்)

எனவும் வந்திருத்தல் காண்க.

**3. 2. 1. 3 5 காரணப்பொருள்**

கால எச்சங்கள், குறை எச்சங்களைப் போன்றே காரணப் பொருளிலும் வருதல் காணலாம். எனினும் இப்பொருளில் கால எச்சங்கள் மிகக் குறைவாகவே வந்துள்ளன என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. இவ்வீற்று எச்சம் பதிற்றுப பத்தில் வரிசைப் பொருளில் முப்பத்தைந்து இடங்களிலும் உடனிகழ்ச்சிப் பொருளில் இருபத்தாறு இடங்களிலும் வர, காரணப்பொருளில் பத்து இடங்களில் மட்டுமே வந்துள்ளது. இதே நிலையைத்தான் பழந்தமிழ் நூல்கள் பலவற்றிலும் காணுகிறோம் (பட்டியல் 3).

"பெயன் மழை புரவின்றா கிவெய் துற்று
வலமின் றம்ம ... ... ... பதி 26-6

என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் காணப்படும் ஆகி என்னும் காலவெச்சம் காரணப்பொருளில் வந்துள்ளமை காணலாம். இவ்வடிகளுக்கு உரை எழுதப் போந்த உரை யாசிரியர் காலத்திற் பெய்தலையுடைய மழை பெய்யாமற்

பொய்த்தமையால் வெயிலது வெம்மை மிகுதலால் நாடு நலம் பயப்பதின் றாயிற்று" என எழுதுதல் காண்க

இது போன்றே ஐங்குறுநூற்றில் வரும் தீண்டி என்னும் காலவெச்சமும் காரணப் பொருளில் வந்துள்ளது.

"கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக் கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கும்"
ஐங் 14-1

என வரும் அடிகளுக்கு உரை எழுதும் உரையாசிரியர் "நீண்ட பூவினையுடைய வேழம் உராய்தலானே பக்கத்தேயுள்ள பிஞ்சு ஈன்ற மாமரத்தினது வளவிய தளிர் நுடங்குதற்குக் காரணமான" என எழுதுவது குறிப்பிடத்தக்கது.

"பசும்பழப் பலவின் கானம் வெம்பி
விசும்புகண் அழிய வேனில் நீடிக்
கயங்கள் அற்ற கல்லோங்கு வைப்பின்" அகம் 189-2

என வரும் அகநானூற்றடிகளில் வரும் 'நீடி' என்ற கால வெச்சமும் காரணப்பொருளில் வருதல் காணலாம். வேனில் நீட்டித்த காரணத்தால் கயங்கள் நீரற்று விட்டன எனப் பொருள்படும் இவ்வரிகளுக்கு உரை எழுதிய உரையாசிரியரும்

"மேகம் வானிடத்தின் றொழிதலின் வேனில் வெப்பம் மிக..." எனக் கூறுவதும் பின்னர் வெம்பி, நீடி என்பனவற்றை வெம்ப, நீட எனத் திரிக்க எனக் கூறுவதும் காண்க.

மேலும் நற்றிணையில்

"அறியாமையின் அன்னை அஞ்சி
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழீஉகஞ் செல்ல" நற்50-1

எனவும், குறுந்தொகையில்

"... ... துறைவனைப்
பெரிய கூறி யாயறிந் தனளே" குறு 248

எனவும் வருதல் காண்க. அஞ்சி, கூறி ஆகியவை காரணப் பொருளில் வந்துள்ளன. உரையெழுதும் ஆசிரியரும் ''யான் கூறுதலானே நம்மன்னை அறிந்து கொண்டாள்'' என எழுது தல் உணரத் தக்கது.

இதைப்போன்றே புறநானூற்றில் வரும்

''கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்ந ரார்வமொ டீண்டிக்
கடலொலி கொண்ட தானை" புறம் 377-27.

என்னும் அடிகளில் வரும் ஈண்டி என்ற காலவெச்சமும் காரணப் பொருளில் வந்துள்ளது. 'பலவேறு படையினரும் கூடியிருத்தலால் கடலினது முழக்கத்தையுடைய' எனப் பொருள் படும். உரையாசிரியரும் ''விற்பண்ட வேற்படைகட்குத் தலை வர்களும் ... வாண் மறவருடைய தலைவரும் ஆர்வத்துடனே கூடியிருத்தலால் கடலினது முழக்கத்தையுடைய தானை" எனப் பொருள் எழுதுவார்.

பெரும்பாணாற்றுப்படையில்

''குறுந்தாட் டுருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புன்க சூழ் கொட்டில்"
பத்து 4-189

எனவும் (சார்த்தி என்பது சார்த்தி வைக்கப்பட்டமையால் எனப் பொருள்படும்), பரிபாடலில்

''... ... ... தத்திப்
புகலவரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்''
பரி 10- 13-14

எனவும் (தத்தி என்பது தாவுதலால் எனப்பொருள்படும்), கலித்தொகையில் (98)

... ''அளித்தமர் காதலோ டப்புன லாடி
வெளிப்படு கவ்வையை........'' கலி 98—20—21

எனவும் (காதலோடே அப்புனலை ஆடுதலால் வெளிப்படு கின்ற அலர்), குறளில்

"மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா அ
என்னல்ல தில்லை துணை" குறள் 1168

(இவ்விரா உயிர்களையெல்லாந் தானே துயிலப் பண்ணுதலான் என்னையல்லது வேறு துணையுடைத்தாயிற்றில்லை) எனவும்

சிலப்பதிகாரத்தில்

"பால்விக்கிப் பாலகன் தான் சோர ... ... ..."
சிலம்பு 9-6

(பால் விக்குதலாலே அக்குழவி மரிக்க) எனவும், மணிமேகலையில்

"பொறாஅ நெஞ்சிற் புகையெரி பொத்திப்
பறாஅக் குருகின் உயிர்த்தவன் போயபின்"
மணி 19-27

(காமத்தீப் பற்றித் தீய்த்தலாலே ... ... வெய்தாக நெடு மூச்செறிந்து) எனவும் வருதல் காண்க.

### 3. 2 1. 3. 6. தாக்கப்பொருள்

இவ்வீற்றெச்சம் முன்னர்க் குறிப்பிட்ட பொருள்களில் மட்டுமின்றித் தாக்கப் பொருளிலும் வரக் காணலாம். பத்துப் பாட்டு, பரிபாடல் தவிர்ந்த பிற இலக்கியங்கள் அனைத்திலும் இவ்வெச்சம் இப்பொருளில் காணப்படினும் மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே வரக் காண்கிறோம். (காண்க பட்டியல் 3)

பதிற்றுப்பத்தில்

"... ... — சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து
... ... ... மார்புகவர் முயக்கத்து" பதி 50-16

எனவரும் அடிகள் இப்பொருளைக் காட்டுவனவாக உள்ளன. பூசிய சந்தனம் புலருமாறும், வண்ணங்கள் நீங்குமாறும் மெல்லிய படுக்கையிலே கிடந்து முயங்கும் முயக்கம் என வரும் நிலையில் இது தாக்கப்பொருளைக் காட்டுவதாக அமையும். வண்ணம் நீவி என்பதற்கு "வண்ணங்கள் நீங்குமாறு" எனப் பொருள் எழுதுதல் காண்க.

இது போன்றே

"பேரு ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னொடு தண்புன லாடுதும்" ஐங் 77-2

என வரும் ஐங்குறுநூற்று அடிகளில் கலங்கி என்ற கால வெச்சம் கலங்கும்படி என்ற பொருளில் வருவது கவனிக்கத் தக்கது. இவ்வடிகளுக்கு உரை எழுதப் போந்த உரை யாசிரியரும் ,'இந்தப் பெரிய ஊரின் கண் யாண்டும் அலர் உண்டாகும்படி நின்னொடு யாங்கள் நீர் அலையினாலே கலங்கும்படி குளிர்ந்த நீரிலே விளையாட்டயரா நிற்பேம்" என எழுதுவதும் "நீரலைக் கலங்கி என்புழிச் செய்தெனெச் சத்தைச் செயவெனெச்சமாக்குக" என விளக்குவதும் இங்குக் கவனிக்கத்தக்கன.

இதுபோன்றே அகநானூற்றில்

"பசும்பழப் பலவின் கானம் வெம்பி
விசும்புகண் அழிய வேனில் நீடி" அகம் 189-1

(செவ்வி வாய்ந்த பழத்தினைக் கொண்ட பலா மரங்களை யுடைய காடு வெதும்ப மேகம் வானிடத் தினின்றொழிதலின் வேனில் வெப்பம் மிக)

எனவும், நற்றிணையில்

"இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி
உருள்பொலி போல ... ... " நற் 270-3

(இருளொத்த கூந்தலில் மிக்க துகள் படிய நிலத்திலே புரண்டு சாய்ந்தாற் போலாக)

எனவும், குறுந்தொகையில்

"பசலை யாகி விளிவது கொல்லோ
... ... ... ... ... ... ...
விலங்குதிரை உடைதருந் துறைவனொ
டிலங்கெயிறு தோன்ற நக்கதன் பயனே"

குறு 381-3

(குறுக்கிடும் அலைகள் உடையாநின்ற கடற்றுறையையுடைய நந்தலைவனோடே விளங்குகின்ற பற்கள் தோன்றும்படி நகைத்ததனால் உண்டாகிய பயன் ... ... மேனியிற் பசலை உண்டாகும்படி அழிந்து படுவது தானோ)

எனவும், புறநானூற்றில்

"ஒண்செங் குரலித் தண்கயங் கலங்கி
வாளை நீர்நாய் நாளிரை பெறூஉ" புறம் 283-1

(ஒள்ளிய செங்குரலிக்கொடி நிறைந்த தண்ணிய நீர்நிலை கலங்க வாளைமீனை நீர்நாய் தன் நாட் காலையுணவாகப் பெற்றுண்டு)

"... ... ... ... ... கவின்வாடி
எரிபொத்தி என்னெஞ்சஞ் சுடு மாயின் வென்
செய்கோ"

கலி 34-10

(யான் அழகு கெடும்படி என் நெஞ்சு காமத்தீ கொளுத்தி என்னைச் சுடுமாயின் யான் அதற்கு என் செய்வேன்?)

எனவும், குறளில்

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்" குறள் 559

(மன்னவன் தான் செய்யும் பொருளை முறைதப்பச் செய்யுமாயின் அவனாட்டுப் பருவமழை இன்றாம் வகை மேகம் பொழிதலைச் செய்யாது)

எனவும், சிலம்பில்

"... ... ... ... ... பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
விளங்கு கொடி நந்தின் வீங்கிசை நாவும்
நடுங்குதொழி லொழிந்தாங்கு ஒடுங்கியுள் செறிய"
சிலம்பு 26-200

(போர்க்களத்தை அடைந்த யானைகளிற் கட்டிய கவிழ்ந்த மணிகளின் நாவும், விளங்கும் கொடியுடன் கட்டிய மிக்க ஒலியையுடைய சங்குகளின் நாவும அசையுந் தொழிலொழிந்து ஒடுங்குமாறு அவற்றினுள்ளே நிறைய)

எனவும், மணிமேகலையில்

"... ... ... புகையழல் பொங்கி
... ... ... மழைவளம் கரத்தலின்" மணி 11-82

காட்டுத்தீப் பற்றி மிகுமாறு மழைவளம் ஒழிந்து போதலாலே)

எனவும் இவ்விகுதி தாக்கப் பொருளில் வருதலைக் காண்கிறோம்.

### 3. 2. 1. 3. 7. வினையடைப் பொருள்

இவ்விகுதி பழந்தமிழ் நூல்களில் எட்டு இடங்களில் மட்டுமே வினையடைப் பொருளில் வந்திருக்கக் காண்கிறோம். இப்பொருளில் இது வரும் போது கொண்டு முடியும் வினையின் அடையாகவே வருவதைக் காணலாம்.

பதிற்றுப் பத்தில்

"... ... ஓங்கி நடந்து ..." 20-10

என வரும் அடியில் ஓங்கி என்னும் காலவெச்சம் நடந்து என்னும் காலவெச்சத்தின் அடையாக வந்துள்ளது. உரையாசிரியர் "பெருமிதத்துடன் நடந்து" எனப் பொருள் எழுதுதல் காண்க. உடன், ஓடு போன்ற மூன்றாம் வேற்றுமை

உருபுகளோ அல்லது ஆக போன்ற ஒட்டுக்களையோ இட்டு உரை எழுதுவர் உரையாசிரியர்கள்.

இதுபோன்றே அகநானூற்றில்

"... ஊன்றித் தோன்றும்" அகம் 79—8

என வரும் அடியிலும் ஊன்றி என்னும் காலவெச்சம் தோன்றும் என்னும் வினையின் அடையாக வந்துள்ளது. இவ்வடிக்கு "மிக்குத் தோன்றும்" என உரையாசிரியர் உரை எழுதுதல் காண்க.

நற்றிணையில்

"... ... ... துனைஇச்
செல்ப ... ... ..." குறள் 175

(விரைந்து செல்வாராயினர்)

எனவும், குறளில்

"அஃகி யகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்"

(நுண்ணிதாய் எல்லா நூல்களிலும் சென்ற தம்மறிவு என்ன பயத்ததாம்? பொருளை விரும்பி யாவர்மாட்டும் அறிவோடு படாத செயல்களை அறிவுடையார் செய்வராயின்)

எனவும். சிலம்பில்

"நீடித் தலையை வணங்கி ..." சிலம்பு 21-33

(நெடிதாகத் தலையை வணங்கி)

எனவும் வந்திருத்தல் காண்க.

**3. 2. 1. 3. 8 நோக்கப் பொருள்**

இவ்வீற்றெச்சம் பத்துப்பாட்டு (2) பரிபாடல் (4) ஆகிய இரு இலக்கியங்களில் மட்டுமே நோக்கப் பொருளில் வரக் காண்கிறோம்.

பத்துப்பாட்டில்

"அகழ் இழிந் தன்ன கான்யாற்று நடவை
வழூஉமருங் குடைய வழாஅல் ஓம்பிப்
பரூஉக்கொடி வலந்த மதலை பற்றித்
துருவி னன்ன புன்றலை மகாரோடு
ஒருவிர் ஒருவிர் ஓம்பினர் கழிமின்" பத்து 10—214

என வரும் அடிகளில் ஓம்பி என்னும் காலவெச்சம் நோக்கப் பொருளில் வந்துள்ளது. இவ்வடிகளுக்குப் பொருள் எழுதும் உரையாசிரியர் "அகழியில் இழிந்தாற் போன்ற காட்டாற்று வழி, கால் வழுக்கும் இடங்களை உடையவாகலான் அங்ஙனம் கால் வழுக்கி வீழ்தலைத் தடுத்தற்பொருட்டுப் பரிய கொடிகள் மரங்களிற் சுற்றிக் கிடப்பவற்றைப் பற்றுக் கோடாகப் பிடித்து, செம்மறியாட்டினை ஒத்த புற்கென்ற தலையினுடைய நும் பிள்ளைகளோடே ஒருவரை ஒருவர் பாதுகாத்துப் போவீராக" என எழுதுவதும் ஓம்பி என்பதற்கு 'தடுத்தற் பொருட்டு' என உரை எழுதுவதும் காண்க.

இதுபோன்றே பரிபாடலில்

"அயலய லணிநோக்கி ஆங்காங்கு வருபவர்"
பரி 20—32

என வருவதையும், உரையாசிரியர் "சிலர் பிறர் பிறர் அணிந்துள்ள ஆடை அணிகலன்களைப் பார்க்கும் பொருட்டு அவ்வவ் விடங்களிலே சுற்றி வருபவர்கள்"

எனப்பொருள் எழுதுவதையும் காணலாம்.

**3. 2. 1. 3. 9. தலைமைவினை**

செய்து வாய்பாட்டுக் காலவெச்சமே பெரும்பான்மையும் தலைமைவினையாக வரினும், ∅ ஈற்றுக் காலவெச்சமும் ஒரு சில இடங்களில் தலைமைவினையாக வந்திருப்பதைக் காண்கிறோம்.

### 3. 2. 1. 3. 9. 1 இடு

இவ்வீற்றெச்சத்துடன் இடு என்னும் துணைவினை சிலம்பில் ஒரு இடத்திலும், மணிமேகலையில் இரு இடங்களிலு மாக மூன்று இடங்களில் மட்டுமே வந்துள்ளது சிலம்பில்

"உரைவினை இய பலர்வாழ்த்திட" சிலம்பு 20—18
(முதுமகளிர் பலர் புகழ் கலந்த மொழிகளான் வாழ்த்த) என வரும் அடியில் வாழ்த்தி என்னும் காலவெச்சம் தலைமை வினையாகவும், இட என்பது துணை வினையாகவும் வந்திருத்தல் தெளிவு. இது போன்றே

"மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்
தடிந்தெரி ஊட்டினுந் தானுண ராதெனின்"
மணி 16-97*

(அவ்வுடம்பு தானே பொறிகளின் வாயிலாயுணரும் பொருளாய்த் தனக்குள்ளில் நிலைபெற்றிருந்த உயிர் போய் விட்ட காலத்தே வாளாலே துணித்துத் தீயாற் சுட்டாலும், தான் ஒரு சிறிதும் உணரமாட்டாது)

என வரும் மணிமேகலை அடிகளில் நீங்கி என்பது தலைமை வினையாக இடில் என்னும் துணைவினை கொண்டு முடிந்தலைக் காண்க.

### 3. 2. 1. 3. 9. 2 இரு

இத்துணைவினை ஒரு இடத்தில் மட்டுமே இவ்வீற்றெச்சத்துடன் வரக் காண்கிறோம். கலித்தொகையில்

"... ... ... யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ" கலி 111-17

(யாம் எப்பொழுதும் என் சுற்றத்தார் கோலஞ் செய்து எழுதுங் காலம் பார்த்திருப்போமோ)

---

மணி 1-24

என வரும் அடிகளில் நோக்கி என்பது தலைமைவினையாகவும், அது கொண்டு முடியும இருத்துமோ என்னும் வினைமுற்று துணைவினையாகவும் வந்துள்ளன.

3. 2. 1. 3 9. 3 ஈ

இத்துணைவினை கலித்தொகையில் மட்டுமே இவ்வீற்றெச்சத்துடன் காணப்படுகிறது. கலித்தொகையில்

"... ... ... அருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது" கலி 94-20

(பக்கத்தே சிறிது முயங்கும்படியாக வருவாயாக)
என வரும் அடிகளில் அருளி என்னும் காலவெச்சம் ஈமோ என்னும் துணைவினை கொண்டு முடிதல் காண்க.[1]

3. 2. 1. 3. 9. 4 கொள்

இத் துணைவினை நற்றிணை (1), பத்துப்பாட்டு (3) பரிபாடல் (1), கலித்தொகை (2), குறள் (6) ஆகிய நூல்களில் இவ்வீற்றெச்சத்துடன் வரக் காண்கிறோம். நற்றிணையில்

"மூந்துவினை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
அங்கை நிறைய நெமிடிக் கொண்டு தன்
திரையணற் கொடுங்கவுள் நிறைய மூக்கி" நற் 22-2

(முதலிலே பறிந்து முற்றிய பெருங் கதிர்களைக் கொய்து கொண்ட மந்தி பாயுந் தொழிலன்றிப் பிற கல்லாத கடுவனொடு நல்லவரை மீதேறி அகங்கை நிறையக் கயக்கித் தூய்மை செய்து தன் திரைத்த அணலையுடைய வளைந்த கவுள் நிறைய உண்டு) என வந்துள்ள அடிகளில் நெமிடி என்னும் காலவெச்சம் தலைமை வினையாக, கொண்டு என்னும் துணைவினையைக் கொண்டு முடிகிறது.

---

1. கலி 93-10, 144-20, 42

இது போன்றே

"வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்" பத்து 10-572[1]

யானை படுகின்றவிடத்தே பிடித்துக்கொள்ளாத மலையென்று மயங்குதற்குக் காரணமான யானைகளையும்)

எனவும்

"படிநிலை வேள்வியுள் பற்றியாடு கொளலும்"
பரி 2-62

(படிப்படியாக ஒன்றற் கொன்று உயர்ந்த வேள்வியினிடத்தே வேள்வித்தூணாகி நின்று அதன்கட் பிணிக்கப்படும் யாகப் பசுவினைப் பற்றிக் கொள்ளுதலும்)

எனவும்

"ஆருயிர் வெளவிக் கொண்டறிந்தீயா திறப்பாய்கேள்"
கலி 58-6

பெறுதற்கரிய என் உயிரைக் கொண்டு இளமையாற்கைக் கொண்டதனை அறியாதே போகின்றவளே! யான் கூறு கின்றதனைக் கேள்) எனவும்

"வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று"
கலி 62-15

(மகளிரை வலிதிற் புணர்தலும் ஒரு மணமென நூல் கண்டது) எனவும்

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று" குறள் 22[2]

(இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வள வென்று எண்ணாற் கூறி யறியலுறின், அளவுபடாமையான் இவ்வுலகத்துப் பிறந்திறந்தாரை எண்ணி இத்துணையரென அறியலுற்றாற்போலும்)

1. பத்து 10-365, 515
2. குறள் 442, 633, 678, 976, 1187

எனவும் வரும் இடங்களில் கொள் துணைவினையாக வந்து உள்ளது.

3. 2. 1. 3. 9. 5. விடு

இத் துணைவினை இவ்வீற்றெச்சத்துடன் கலித்தொகை (1), குறள் (10) ஆகிய இரு நூல்களில் மட்டுமே வந்துள்ளது. கலித்தொகையில்

"... ... ... ... ... நறுநுதல்
நல்காள்கண் மாறி விடின்" கலி 61-24

(நெறிய நுதலினையுடையாள் அருளாளாய அருளை மாறியே விடின்) எனவும், குறளில்

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" குறள் 28

(நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது பெருமையை நிலவுலகத்தின்கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும்) எனவும் வந்திருத்தல் காண்க. குறளில் பல இடங்களில் இத்துணைவினை வந்துள்ளது.[1]

3. 2. 1. 3. 10 கூட்டுவினை

இவ்வீற்றெச்சம் பத்து (1), சிலம்பு (2), மணிமேகலை (1 ஆகிய நூல்களில் மட்டுமே கூட்டுவினைச் சொல்லின் முதல் வினையாக வரக் காண்கிறோம்.

சொல்லிக் காட்ட பத்து 2-100, 10-79
காட்டிக் கொடுத்த சிலம்பு 24—21—7
சாற்றிக் காட்டி மணி 25—50

போன்றவை கூட்டுவினையாக உள்ளன.

---

1. குறள் 17, 128, 133, 476, 535, 608, 616, 980, 1039, 1253

### 3. 2. 1. 4 எழுவாய்

முன்னரே குறிப்பிட்டபடி காலவெச்சமும் அது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலும், ஒரே எழுவாயைக் கொண்டு வருதலும் காலவெச்சம் காட்டும் பொருளைக் சார்ந்தே இருப்பதைக் காண்கிறோம். Ø வீற்று எச்சமும் இதே பண்பினைத்தான் கொண்டுள்ளது.

### 3. 2. 1. 4. 1 வரிசைப்பொருள்

இவ்வீற்று எச்சம் ஐநூற்றெண்பத்தைந்து இடங்களில் இப்பொருளில் வந்திருப்பினும் இரு இடங்களைத் தவிர்த்து பிற இடங்கள் அனைத்திலும் ஒரே எழுவாயையே கொண்டு வரக்காண்கிறோம்.

### 3. 2. 1. 4. 1. 1. ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"அவலெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வளை கொய்யும்" பதி 29-1

என வரும் அடிகளில் சேர்த்தி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் கொய்யும் என்னும் பெயரெச்சமும் மகளிர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வருகின்றன. 3. 2. 1 3. 1 பிரிவின் கீழ்த் தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமை இங்கு நினைவுகூரத்தக்கது.

### 3. 2. 1. 5. 1. 2 இருவேறு எழுவாய்கள்

முன்னர்க் குறிப்பிட்டது போன்று இரு இடங்களில் மட்டுமே இப்பொருளில் இவ்வீற்றெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலைக் காண்கிறோம்.

குறுந்தொகையில்

"இம்மை மாறி மறுமை யாயினும்" குறு 49-3

என வரும் அடிகளில் மாறி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக இம்மை என்ற சொல்லும் அது கொண்டு முடியும் ஆயினும் என்ற சொல்லின் எழுவாயாக மறுமையும் வந்திருத்தல் காணலாம்.

இதுபோன்றே பத்துப்பாட்டில்

"... ... கரிகால் வளவன்
தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுதுமுன் னிற்குவி ராயின் ...
... ... ... பட்டுடை நல்கிப்
பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கைகவி பருகி
எரியகைந் தன்ன வேடில் தாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
... ... ... ... ... ... வேழம்
தரவிடைத் தங்கலோ விலனே ..." பத்து 2-148-173

என வரும் அடிகளில் பருகி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நீவிர் (தோன்றா எழுவாய்) என்னும் முன்னிலைப் பன்மையும் அது கொண்டு முடியும் சூட்டி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக கரிகால் வளவனும் வந்துள்ளன "கரிகாற் சோழனுடைய திருவடி நீழலிடத்தே அணுகி நின்று வணங்கி நும் வறுமை தோன்ற முன்னே நிற்பீராயின் ...., பட்டாகிய உடைகளைத் தந்து பெறுதற்கரிய பொற்கலத்தே விரும்பியபடியே உண்பாயாக என்று இன்சொல்லியம்பி தீம்பூ மணக்கின்ற கள்தெளிவை மேன்மேலே வார்த்துத் தருந்தோறும் நாள்தோறும் அமையும் அமையும் எனக் கையை மறித்துத் தடுத்துண்டு, நெருப்புத் தழைத்தது போன்ற ஒருவன் செய்ததன்றித் தனக்கென இதழில்லாத தாமரையை கடைகுழன்ற கரிய மயிரிலே பொலிவு பெறச் சூட்டி ... ... ...

யானைகளைத் தருதற்றொழிலிடத்தே நிலை பெறுதலை ஒழிதலிலன்'' என உரையாசிரியர் பொருள் கூறுதல் காண்க.

### 3. 2. 1. 4. 2 துணைநிகழ்ச்சிப் பொருள்

இப்பொருளில் இவ்வீற்றெச்சம் 3389 இடங்களில் வந்திருப் பினும் ஏழு இடங்கள் தவிர்த்து பிற இடங்களில் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வரக் காண்கிறோம்.

### 3. 2. 1. 4. 2. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

''துறைநணி மருத மேறி ... ...
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பின்'' பதி 27—6

என வரும் அடிகளில் ஏறி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் இசைப்பின் என்னும் சொல்லும் மகளிர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இது போன்றே ஐங்குறுநூற்றில்

''... ... ... நன்மாப் பூட்டி
... ... ... கடவுமதி தேரே" ஐங் 488–3

என வரும் அடிகளில் பூட்டி என்ற காலவெச்சமும் அது கொண்டு முடியும் கடவுமதி என்ற ஏவல்வினையும் நீ என்ற ஒரே எழுவாயையே (தோன்றா எழுவாய்) கொண்டு வந்துள் ளது. 3. 2. 1. 3. 2 பிரிவின் கீழ்த் தரப்பட்டுள்ள அனைத்து எடுத்துக்காட்டுக்களும் ஒரே எழுவாயையே கொண்டு வந்து உள்ளன.

### 3. 2. 1 4. 2. 2 இரு எழுவாய்கள்

முன்னரே குறிப்பிட்டபடி பழந்தமிழ் இலக்கியங்களில் ஏழு இடங்களில் மட்டுமே இவ்வீற்றெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு

வந்திருத்தலைக் காண்கிறோம். (நற் 1, புறம் 1, பத்து 2, பரி 1, சிலம்பு 2)

நற்றிணையில்

"சிற்சில வித்திப் பற்பல விளைந்து" நற் 28—2

என வரும் அடியில் வித்தி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக தினைப்புனத்தோரும் (வருவித்த எழுவாய்), அது கொண்டு முடியும் விளைந்து என்னும் எச்சத்தின் எழுவாயாக பலவும் (தினை) வந்துள்ளன. இது போன்றே

"... ... ... ... கானவர்
கரிபுன மயக்கிய வகன்கட் கொல்லை
ஐவன வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லா வேனற்கு ... ..." புறம் 159—15

என வரும் புறநானூற்று அடிகளில் வித்தி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக கானவரும், அது கொண்டு முடியும் கவினி என்ற காலவெச்சத்தின் எழுவாயாக ஏனலும் வந்திருத்தல் காண்க.

பத்துப்பாட்டில்

"... ... ... பாக்க மெய்தி
... ... ... ... ... ... ...
கிழவர் போலக் கேளாது கெழீஇச்
சேட்புலம் பகல இனிய கூறிப்
பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவிர்"
பத்து 10—162

(சீறூர்களைச் சேர்ந்து ... முன்பே கிழமையுடையீர் போல அவரைக் கேளாதே உறவு கொள்ளுகையினாலே சேணிடை வந்த நுமது வருத்தந் தீரும்படி இனிய மொழிகள் அவர் கூறி பரிய தசை மிகச் சொரிந்த நெய்யிடத்தே கிடந்து வெந்த பொரியலோடே நிறம் மிக்குத் தோன்றும் வடிவினையுடைய தினைச்சோற்றைத் தரப் பெறுகுவிர்) என வரும்.

அடிகளில் கூறி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக ஊர் மக்களும், அது கொண்டு முடியும் பெறுகுவிர் என்னும் வினை முற்றின் எழுவாயாக நீவிரும் (தோன்றா எழுவாய்) வந்திருத் தலைக் காணலாம். துணைநிகழ்ச்சிப் பொருளில் ஒரே எழு வாய் வருதலே பெரும்பான்மையாகக் காணப்படுவது. இங்கும் உரையாசிரியர் "இன்மொழி கூறப்பெற்று ... பெறு குவிர்" என, கூறி என்பதனை கூறப்பெற்று எனப் பொருள் எழுதி ஒரே எழுவாய் வருமாறு உரை எழுதுதல் காண்க.

இதுபோன்றே பரிபாடலிலும்

"... ... ... ... பழமதிச்

சூடி யசையுஞ் சுவன்மிசைத் தானையின்"

பரி 19—24

(பழைய வரிசையாலே சூடப்பட்டுப் பிடரிற் கிடந்து அசையா நின்ற துகிலினை உடையரும்) என வரும் அடிகளில் சூடி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக மக்களும் (தோன்றா எழுவாய்) அது கொண்டு முடியும் அசையும் என்னும் பெய ரெச்சத்தின் எழுவாயாக தானையும் வந்துள்ளன.

சிலம்பில்

"செவ்வென் கதிர் சுருங்கிச் செங்கதிரோன் சென்

றொளிப்ப" சிலம்பு 19—32

(தனது சிவந்த கதிர்களைச் சுருக்கிக் கொண்டு ஞாயிறு சென்று மறைய) என வரும் அடியில் சுருங்கி என்னும் காலவெச்சத் தின் எழுவாயாகக் கதிரும், அது கொண்டு முடியும் சென் றொளிப்ப என்னும் சொல்லின் எழுவாயாகச் செங்கதிரோனும் வருதல் காண்க.

இதுபோன்றே

"கோமகன் கொற்றங் குறைவின் றோங்கி

நாடு பெருவளஞ் சுரக்க ... ... ... ..." சிலம்பு 30—6

(வேந்தனது வெற்றி குறைவில்லாது உயர்தலானே நாடு மிக்க செல்வம் பெருகுவதாக) என வரும் அடிகளில் ஓங்கி

என்னும் காலவெச்சத்தின் எழுவாயாகக் கொற்றமும், அது கொண்டு முடியும் வினையான சுரக்க என்னும் வியங்கோளின் எழுவாயாக வளமும் வந்துள்ளன. உரையாசிரியர் ஓங்கி என்பதற்கு உயர்தலானே எனப் பொருள் எழுதினும் பின்னர் "ஓங்கி என்பதனைக் காரணப் பொருட்டாக்காது ஓங்கிச் சுரக்க வெனப் பிறவினை முடிந்ததாகக் கூறலும் அமையும்" என விளக்கம் எழுதுதல் காண்க.

### 3. 2. 1. 4. 3 உடனிகழ்ச்சிப் பொருள்

இவ்விகுதி இப்பொருளில் வரும்போது மிகப் பெரும் பான்மையான இடங்களில் ஒரே எழுவாயையே கொண்டு வரினும் ஒருசில இடங்களில் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலையும் காணலாம். பழந்தமிழ் இலக்கியங் களில் அறுபத்திரண்டு இடங்களில் இவ்விகுதி இப்பொருளில் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வரக் காண்கிறோம். ஆனால் எழுநூற்று இருபது இடங்கள் ஒரே எழுவாயைக் கொண்டுள்ளன.

### 3. 2. 1. 4. 3. 1 ஒரே ஓழுவாய்

பதிற்றுப்பத்தில்

"... ... ... பல்கதிர் பரப்பி
ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்கு" பதி 59—5

என வரும் அடிகளில் பரப்பி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் தோன்றியாங்கு என்ற சொல்லும் ஞாயிறு என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இது போன்றே ஐங்குறுநூற்றிலும்

"... ... தந்தை பெயரன்
... ... இன்னகை பயிற்றிச்
சிறுதேர் உருட்டும் ... ..." ஐங் 403—3

என வரும் அடிகளில் பயிற்றி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான உருட்டும் என்ற பெயரெச்சமும் தந்தை பெயரன் என்ற ஒரே எழுவாயையே கொண்டு

வரக் காண்கிறோம். எஞ்சிய பழந்தமிழ் இலக்கியங்களிலும் இப் பண்பு உள்ளமையை 3. 2 1. 3. 3.பிரிவில் காணும் எடுத்துக் காட்டுக்களில் கண்டு கொள்க.

### 3. 2. 1. 4. 3. 2 இருவேறு எழுவாய்கள்

முன்னர்க் குறிப்பிட்டது போன்று 62 இடங்களில் மட்டுமே இருவேறு எழுவாய்கள் வந்துள்ளமையைக் காண் கிறோம்.

பதிற்றுப்பத்தில்

"கவலை வெண்ணரி கூஉமுறை பயிறிசிக்
... ... ... ... ... ... ...
கருங்கட் பேய்மகள் வழங்கும்
பெரும்பா ழாகும் ... ... ..." பதி 22—35

என வரும் அடிகளில் பயிற்றி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக வெண்ணரி என்ற சொல்லும், அது கொண்டு முடியும் வினையான வழங்கும் என்ற பெயரெச்சத்தின் எழு வாயாக பேய்மகள் என்ற சொல்லும் வந்துள்ளன. இதற்கு "பசியால் வருந்துதலையுடைய குறுநரிகள் முழவொலி போல ஊளையிட்டுக் கூவுதலை முறையே செய்ய, ... ... பெரிய கண்களையுடைய பேய்மகள் கூத்தாடும் பெரிய பாழ்நிலமாய் விடும்" என உரையாசிரியர் உரை எழுதுதல் காண்க.

இது போன்றே அகநானூற்றில்

"... ... ... அம்முள் நெடுங்கொடி
அருவி ஆம்பல் அகலடை துடக்கி
அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழும்
கழனி ... ... ... ..." அகம் 96—5

என வரும் அடிகளில் துடக்கி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக நெடுங்கொடி என்னும் சொல்லும் அது கொண்டு முடியும் வீங்குபு ஞெகிழும் என்னும் வினைவடிவங்களின் எழு

வாயாக அகலடை என்னும் சொல்லும் வந்திருப்பதைக் காணலாம்.

நற்றிணையில்

"தண்ணந் துறைவன் ... ... ...
... ... ... ... தொடலை தைஇக்...
கண்ணறிவு உடைமை அல்லது ... ...
அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே" நற் 138-5

என வரும் அடிகளில் தைஇ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாகத் துறைவனும் அது கொண்டு முடியும் கண்ணறிவு உடைமை என்னும் சொல்லின் எழுவாயாக மூதூரும் வந்து உள்ளன. "தலைமகன் ... மாலையை நினக்குச் சூட்ட, அதனைக் கண்ணால் அறியக் கிடந்த தொன்றன்றி இவ்வூர் பிறிது ஒன்றனையும் அறிந்ததில்லை" என உரையாசிரியர் எழுதுதல் காண்க.

"கொடுங்குழை மகளிர் கோதை சூட்டி
நடுங்குபனி களைஇயர் நாரரி பருகி
... ... ... விரைதி நீயே ..." புறம் 304—1

என வரும் புறநானூற்று அடிகளில் சூட்டி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக மகளிர் என்னும் சொல்லும், அது கொண்டு முடியும் வினையான பருகி என்ற காலவெச்சத்தின் எழுவாயாக நீ என்ற சொல்லும் வந்திருப்பதைக் காண்கிறோம். உரையாசிரியரும் " 'சூட்டி' என்பதைச் 'சூட்ட' எனத் திரிக்க" என்று எழுதுதல் காண்க.

பத்துப்பாட்டில்

"கிளிமழலை மென்சாயலோர்
... ... ... ...
செறிதொடி முன்கை கூப்பி ...
... ... ... ...
விழவறா வியலாவணத்து ..." பத்து 9—150

என வரும் அடிகளில் கூப்பி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக மென்சாயலோர் என்ற சொல்லும் அது கொண்டு முடியும் வினையான அரு என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக விழவு என்னும் சொல்லும் வந்திருத்தலைக் காண்கிறோம். இதுபோன்றே பரிபாடலில

"... ... ... மார்பணி கல்வி
... ... ... ... ... ...
செந்தளிர் மேனியார் செல்ல நீர்ப்ப" பரி 8—116

என வரும் அடிகளில் கலவி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக அணி என்னும் சொல்லும் அது கொண்டு முடியும் வினையான நீர்ப்ப என்பதன் எழுவாயாக செந்தளிர் மேனியார் என்ற சொல்லும் வருதல் காண்க. "கலவி என்னும் செய்தென்னெச்சத்தைக் கலவ எனச் செயவென்னெச்சமாக்குக்" என உரையாசிரியர் உரை எழுதுவதையும் காண்கிறோம்.

"வையை என்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள் போல்
... ... ... ... ...
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப்
புனல்யா றன்றிது பூம்புனல் யாறென
அனநடை மாதரும் ஐயனுந் தொழுது"
சிலம்பு 13—170

என வரும் சிலப்பதிகார அடிகளில் அடக்கி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக வையையும் அது கொண்டு முடியும் வினையான தொழுது என்னும் வினையெச்சத்தின் எழுவாய்களாக மாதரும் ஐயனும் வருதலைக் காணலாம். "அடக்கி அடக்க எனத் திரிக்க" என உரையாசிரியர் எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

மணிமேகலையில்

"குறுவியர் பொடித்த கோலவாள் முகத்தன்
... ... ... ... ... ... ...
... ... திருந்தடி பொருந்திநின் றேத்தித்
திருந்தெயி றிலங்கச் செல்வியி னக்கவன்" மணி 18-40

என வரும் அடிகளில் ஏத்தி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக முகத்தலும், அது கொண்டு முடியும் நக்கவன் என்ற சொல்லின் எழுவாயாக அவனும் வந்துள்ளன. "சித்திராபதி வீற்றிருந்த அரசிளங்குமரனாகிய உதயகுமரன் அழகிய திருவடியிலே வீழ்ந்து வணங்கி எழுந்து கைகூப்பித் தொழுது நின்று பாராட்ட, சித்திராபதியின் வருகை கண்டு தன் அழகிய பற்கள் தோன்றுமளவில் இதழ் திறந்து சிறிதே சிரித்த உதயகுமரன்" என உரை ஆசிரியர் பொருள் எழுதுதல் காண்க.

### 3. 2. 1. 4. 4. நிலைமைப் பொருள்

இப்பொருளில் வரும் போதும் ஒரே எழுவாயே பெரும்பான்மையும் வந்துள்ளமையைக் காணலாம்

### 3. 2, 1. 4. 4. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சி
சேஎ ருற்ற செல்படை மறவர்" பதி 41-9

என வரும் அடிகளில் மிலைச்சி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான செல் என்னும் வினையும் மறவர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வரக் காண்கிறோம். ஏனைய பழந்தமிழ் இலக்கியங்களின் எடுத்துக் காட்டுக்களுக்கு பிரிவு 3. 2. 1. 3. 4. காண்க.

### 3. 2. 1. 4. 4. 2 இரு எழுவாய்கள்

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் இருபத்தொரு இடங்களில் (நற் 3 குறு 3, புறம் 2, பத்து 10, மணிமேகலை 3) மட்டுமே இவ்வீற்றெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் நிலைமைப்பொருளில் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வரக் காண்கிறோம். நற்றிணையில்

"சுடர்முழு தெறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவி ன்த்தம் ... ... ..." நற் 26-5

என வரும் அடிகளில் திரங்கி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக செழுங்காய் என்னும் சொல்லும், அது கொண்டு முடியும் முடமுதிர் என்ற வினையின் எழுவாயாகப் பலவு என்ற சொல்லும் வந்திருத்தலைக் காண்கிறோம். உரையாசிரியர் "ஆதித்த மண்டிலம் தன் வெயிலை வீசுதலானே செழுங்காய்கள் திரங்கப்பெற்று முடம்பட்ட முதிர்ந்த பலாமரங்கள் நிரம்பிய கொடிய காட்டில்" என எழுதுதல் காண்க. இதுபோன்றே குறுந்தொகையில்

"நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினில் தோன்றுந் துறைவன்"

குறு 318-2

ஞாழலோடே புன்னையினுடைய நறிய மலர்கள் பரந்து வெறியாடுமிடத்தைப் போன்று தோன்றாநின்ற கடற்றுறையையுடைய நந்தலைவன்)

எனவும், புறநானூற்றில்

"களரி பரந்து கள்ளி போகி
... ... ... ... ...
அஞ்சுவத் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு" புறம் 356-1

(காடு படர்ந்து கள்ளி மிகுந்து இந்தப் புகை தவழும் சுடுகாடு காண்பார்க்கு அச்சம் வரப் பண்ணுகின்றது)

எனவும்

"முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன் ஞாலம்" புறம் 18-1

(ஒலிக்கின்ற கடலானது முழுதும் சூழப்பட்டு பரந்து கிடக்கின்ற அகன்றவுலகத்தை)

எனவும், பத்துப்பாட்டில்

"பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி
அழுந்துபட் டிருந்த பெரும்பாண் இருக்கையும்"

பத்து 6-341

(பலவாய் வேறுபட்ட பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழப்பட்டு, நெடுங்காலம் அடிபட்டிருந்த பெரிய பாண்சாதி யின் குடியிருப்பினையும்)
எனவும், மணிமேகலையில்

"தான்றியும் மடுவையும் உழிஞ்சிலு மோங்கி
... ... ... ... ... ... ... ...
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்"

மணி 6-80

(தான்றியும் ஒடு வையும் உழிஞ்சிலும் ஆகிய மரங்கள் வளரப் பெற்று ... ... முகில் தவழ்கின்ற பெரிய கிளைகளோடு கூடிய வாகைமரம் நிற்றலாலே வாகைமன்றம் என்றும் கூறப்படு கின்ற மன்றமும்)

எனவும் இவ்வீற்றெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலைக் காண்க.

### 3. 2. 1. 4. 5 காரணப்பொருள்

இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலும், ஒரே ஒழு வாயைக் கொண்டு வருதலும் பொதுவாகப் பொருளைச் சார்ந்தே வரும் எனினும், காரணப்பொருளில் வரும்போது இருவகைப்பண்புகளும் ஏறக்குறைய ஒரே அளவில் காணப்படு கின்றன எனலாம்.

### 3. 2. 1. 4. 5. 1 ஒரே எழுவாய்

அனைத்துப் பழந்தமிழ் நூல்களிலும் இவ்வீற்றெச்சம் இப்பொருளில் பல இடங்களில் ஒரே எழுவாயைக் கொண்டு வருதலைக் காண்கிறோம். பதிற்றுப்பத்தில்

"தொன்மருங் கறுத்த லஞ்சியரண் கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக" பதி 81-35

என வரும் அடிகளில் அஞ்சி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான துஞ்சா என்னும் பெயரெச்ச மும் வேந்தர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வரக் காண்கிறோம். இதுபோன்றே

ஐங்குறுநூற்றிலும்

> "தண்புன லாடித்தன் னலமேம் பட்டன
> ளொண்டொடி மடவரல் ... ... ..." ஐங் 76-2

என வரும் அடிகளில் ஆடி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான மேம் பட்டனள் என்னும் வினைமுற்றும் ஒண்டொடி மடவரல் என்னும் ஓரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இதுபோன்றே அகநானூற்றில்

> "... ... நெடுங்கண் நீர்ஞெண்டு
> இரைதேர் வெண்குரு குஅஞ்சி ...
> ... ... ... ... ... ...
> ... ... ஓடி விரைந்தன்
> ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர" அகம் 176-8

என வரும் அடிகளில் அஞ்சி எனக் காரணப் பொருட்டாய் வரும் வினையெச்சமும் அது கொண்டு முடியும வினையான செறியும் என்னும் பெயரெச்சமும் நீர்ஞெண்டு என்னும் ஒரே எழுவாயையே கொண்டுவரக் காணலாம்.

> "குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
> கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்
> ... ... ... ... ... சிறுநெறி" நற் 85—4

என வரும் நற்றிணை அடிகளில் அஞ்சி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாகவும் அது கொண்டு முடியும் வினையான அல்கும் என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாகவும் வேழம் என்னும் ஒரே சொல்லே வந்திருத்தல் காணலாம்.

இதுபோன்றே குறுந்தொகையில்

> "ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
> கான யானை கைவிடு பசுங்கழை" குறு 54—2

என வரும் அடிகளில் வெரீஇ என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான கைவிடு என்னும் பெயரெச்ச

மும் யானை என்னும் ஒரே எழுவாயையே கொண்டிருத்தல் காணலாம். இது போன்றே புறநானூற்றில்

"... ... ... மனையோள்
கணவ னெழுதலு மஞ்சி ...
... ... ... ... ... ...
இல்வழங் காமையின் ... ... ..." புறம் 320-7

என வரும் அடிகளிலும் அஞ்சி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான வழங்காமை என்னும் சொல்லும் மனையோள் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. பத்துப்பாட்டில்

"பேருலகத்து மேஎந்தோன்றிச்
சீருடைய விழுச்சிறப்பின்
... ... ... ... ...
நற்கொற்கையோர்" பத்து 6—133

(பெரிய நன்மக்களிடத்தே மேலாய்த் தோன்றுகையாலே புகழையுடைய விழுமிய தலைமையினையும் ... ... ... உடைய நன்றாகிய கொற்கையென்னும் ஊரிலுள்ளோர்)
என வரும் அடிகளில் தோன்றி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் சிறப்பின் என்ற சொல்லும் கொற்கையோர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வருதல் காண்க.

இதுபோன்றே பரிபாடலில்

"நின்னஞ்சிக் கடற்பாய்ந்த ... ...
அன்னவர் ... ... ... ... " பரி 3—55

என வரும் அடிகளில் அஞ்சி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் வினையான பாய்ந்த என்னும் பெயரெச்சமும் அன்னவர் என்ற சொல்லையே எழுவாயாகக் கொண்டு வரக் காண்கிறோம்.

கலித் தொகையிலும்

"கதிர் தாங்கி யேந்திய குடை நீழல்
... ... ... ... ... அந்தணீர்" கலி 9-1

என வரும் அடிகளில் தாங்கி என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் ஏந்திய என்னும் பெயரெச்சமும் ஒரே எழுவாயையே கொண்டுள்ளன.

இதுபோன்றே

"வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்" குறள் 1261

என வரும் குறட்பாவில் ஒற்றி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் தேய்ந்த என்னும் பெயரெச்சமும் விரல் என்னும் ஒரே எழுவாயையே கொண்டுள்ளன. "தொட்டு எண்ணுதலான் விரல்கள் தேய்ந்தன" என உரையாசிரியர் எழுதுதல் காண்க. சிலம்பிலும்

"திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
அங்கண்ஏர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே"
சிலம்பு 47—11—4

என வரும் அடிகளில் அஞ்சி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வாழ்வது என்னும் வினையாலணையும் பெயரும் திங்கள் என்னும் ஒரே எழுவாயையே கொண்டிருத்தல் காணலாம். இது போன்றே மணிமேகலையிலும்

"சார்ங்கல னென்போன் ... ...
... ... ... ... ...
... வெரீஇக் கடுநவை யெய்தி" மணி 6—106

என வரும் அடிகளில் வெரீஇ என்னும் காரணப் பொருட்டாய் வரும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வினையான எய்தி என்னும் கால வெச்சமும் சார்ங்கலன் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன.

### 3. 2. 1. 4. 5. 2 இரு எழுவாய்கள்

முன்னரே குறிப்பிட்டபடி இவ்வெச்சம் இப்பொருளில் வரும்போது இருவேறு எழுவாய்களைக் கொண்டு வரும் இடங்களும் பல உள்ளன.

பதிற்றுப்பத்தில்

"... ... புயனெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇப்
பல்குரற் புள்ளி னொலியெழுந் தாங்கே" பதி 84-22

என வரும் அடிகள் "மழைமுகில் நெடுங்காலம் பெய்யா திருந்து மலையையடைந்து மிக்க மழையைப் பெய்ததால் பலவேறு குரலோசையையுடைய பறவைகளின் ஒலி எழுந்தது போல" எனப் பொருள் படுவதையும், தலை இ என்னும் கால வெச்சத்தின் எழுவாயாகப் புயல் என்னும் பெயரும், அது கொண்டு முடியும் எழுந்தாங்கு என்ற சொல்லின் எழுவாயாக ஒலி என்னும் பெயரும் வந்துள்ளன.

இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

"... செம்புன லாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே" ஐங் 80-3

என வரும் அடிகளில் ஆடி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நீ (தோன்றா எழுவாய்) என்னும் சொல்லும் அது கொண்டு முடியும் வினையான சிவந்தன என்னும் வினை முற்றின் எழுவாயாகக் கண் என்னும் பெயர்ச்சொல்லும் வந்திருக்கின்றன.

அகநானூற்றிலும்

"மாரி வானந் தலைஇ நீர்வார்பு" அகம் 128-12

என வரும் அடிகளில் தலைஇ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக மாரி என்ற சொல்லும் அதுகொண்டு முடியும் வினையான வார்பு என்னும் சொல்லின் எழுவாயாக நீர் என்னும் சொல்லும் வந்துள்ளன.

நற்றிணையில்

"கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
... ... ... ... ... மாமழை" நற் 89-1

என வரும் அடிகளில் ஆற்றி என்னும் காலவெச்சத்தின் எழு வாயாகக் கொண்டல் என்னும் பெயர்ச்சொல்லும், அது கொண்டு முடியும் வினையான செறீஇயர் என்னும் வினை யின் எழுவாயாக மாமழை என்ற சொல்லும் வரக் காணலாம்.

இதுபோன்றே குறுந்தொகையில்

"... ... ... கானல் மயங்கி
துறைநீர் இருங்கழி புல்லென் றன்றே" குறு 177-1

என்ற அடிகளில் மயங்கி என்னும் வினையெச்சத்தின் எழு வாயாகக் கானலும், அது கொண்டு முடியும் வினையான புல்லென்றன்று என்னும் வினைமுற்றின் எழுவாயாக இருங் கழியும் வந்திருத்தலைக் காண்கிறோம்.

"... மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முனியுங் கோடை .. " புறம் 266-2

என வரும் புறநானூற்று அடிகளிலும் மாறி என்ற வினை யெச்சத்தின் எழுவாயாக மாமழையும், அது கொண்டு முடியும் வினையான முனியும் என்னும் வினையின் எழுவாயாகக் கயம் என்னும் பெயர்ச்சொல்லும் வந்துள்ளன.

பத்துப்பாட்டில்

"... ... வெண்ப லெயிற்றியர்
... ... ... ... ...
வாரா தட்ட வாடூன் புழுக்கல்
... ... ... ... ...
... ... தேக்கிலைக் குவைஇ ...
... ... பெறுகுவிர்" பத்து 9-94

என வரும் அடிகளில் குவைஇ என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக வெண்பல் எயிற்றியர் என்னும் சொல்லும், அது கொண்டு முடியும் வினையான பெறுகுவிர் என்ற சொல்லின் எழுவாயாக நீர் என்னும் தோன்றா எழுவாயும் வந்துள்ளதைக் காணலாம்.

இது போன்றே

"... பெய றலைஇ யேற்ற
நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே" பரி 11-1

என வரும் பரிபாடல் அடிகளில் தலைஇ என்னும் வினையெச்சத்தின் எழுவாயாகப் பெயல் என்னும் பெயர்ச் சொல்லும் அது கொண்டு முடியும் வினையான ஏற்ற என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாகச் சுனையும் வந்துள்ளன.

இதுபோன்றே கலித்தொகையிலும்

"... துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்
உள்ளிடப் பட்ட அரசனைப் பெயர்த்தவர்
உயர்நிலை யுலகம் உறீஇ யாங்கு ..." கலி 139-34

என வரும் அடிகளில் வழீஇ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக அரசனும் அது கொண்டு முடியும் உறீஇயாங்கு என்னும் வினைச்சொல்லின் எழுவாயாக ஆன்றோரும் வந்து உள்ளமையைக் காண்கிறோம். இதுபோன்றே

"பனைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்" குறள் 1234

என வரும் குறட்பாவில் நீங்கி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக துணையும், அது கொண்டு முடியும் வாடிய என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாகத் தோளும் வந்திருத்தல் காண்க. சிலம்பிலும்

"பால்விக்கிப் பாலகன் தான்சோர ..." சிலம்பு 9-6

என வரும் அடிகளில் விக்கி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாகப் பாலும், அது கொண்டு முடியும் வினையான சோர என்னும் வினையின் எழுவாயாகப் பாலகன் என்பதும் வரக் காணலாம். மணிமேகலையில்

— ... சுகந்தன் கேட்டு
கடுஞ்சினந் திருகி மகன்றுயர் நோக்கான்
மைந்தன் றன்னை வாளா லெறிந்தனன்"
மணி 22-156

என வரும் அடிகளில் திருகி (முறுகுதலாலே) என்னும் கால வெச்சத்தின் எழுவாயாகச் சினமும் அது கொண்டு முடியும் எறிந்தனன் என்னும் வினைமுற்றின் எழுவாயாகச்சந்தனும் வந்திருத்தல் காண்க.

### 3. 2. 1. 4. 6 தாக்கப் பொருள்

இவ்வீற்றெச்சம் தாக்கப்பொருளில் வரும்போது இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலே மிகப் பெரும்பான்மை யான எண்ணிக்கையில் காணப்படுகிறது. இவ்விகுதி இப் பொருளில் வரும் இருபத்தைந்து இடங்களில் இரு இடங்களில் மட்டுமே ஒரே எழுவாய் வரக் காண்கிறோம்.

### 3. 2. 1. 4. 6. 1 ஒரே எழுவாய்

முன்னரே குறிப்பிட்டபடி இரு இடங்களில் தான் இவ் வெச்சம் இப்பொருளில் ஒரே எழுவாயைக் கொண்டு வந்து உள்ளது. இவை குறுந்தொகையில் காணப்படுகின்றன

> "கல்லென் கானத்துக் கடமா வாட்டி
> எல்லும் எல்லின்று ... ... " குறு 179-1

என வரும் குறுந்தொகை அடிகளில் ஆட்டி என்னும் கால வெச்சமும் அது கொண்டு முடியும் வினையான எல்லின்று என்னும் வினையும் எல் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

### 3. 2. 1. 4. 6. 2 இரு எழுவாய்கள்

இவ்வெச்சம் தாக்கப் பொருளில் வரும் இருபத்தைந்து இடங்களில் 23 இடங்கள் இரு வேறு எழுவாய்கள் வருவன வாகவே உள்ளன.

> பதிற்றுப்பத்தில்
>
> "வண்ணம் நீவி ... ...
> ... ... ... ... ... ...
> ... ... மார்புகவர் முயக்கத்து
> ... ... பெரும ... ... " பதி 50-16

என வரும் அடிகளுக்கு உரை எழுதும் உரையாசிரியர் "வண்ணங்கள் நீங்க ... மார்படைய முயங்கும் முயக்கத்தால்" என எழுதுவதையும் நீங்க என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக வண்ணம் என்ற சொல்லும், அது கொண்டு முடியும் (முயங்கும்) முயக்கம் என்னும் சொல்லின் எழுவாயாக நீ தோன்றா எழுவாய்) என்ற சொல்லும் வந்திருத்தலையும் காண்கிறோம். ஐங்குறுநூறு, அகநானூறு போன்ற நூல்களிலும் இந்த நிலையே காணப்படுகிறது. இவற்றிற்கான எடுத்துக்காட்டுக்களை 3. 2. 1. 3. 6 பிரிவில் காணலாம்.

### 3. 2. 1. 4. 7 வினையடைப் பொருள்

இவ்வீற்றெச்சம் வினையடைப் பொருளில் வரும்போது ஒரே எழுவாயையே கொண்டு வருகின்றது

#### 3. 2. 1. 4. 7. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"... ஓங்கி நடந்து
... ... அட்டுமலர் மார்பன்" பதி 20–11

என வரும் அடிகளில் நடந்து என்னும் வினையெச்சத்தின் வினையடையாக ஓங்கி என்ற வினையெச்சம் வருதலைக் காண்கிறோம். நடந்து என்னும் வினையெச்சத்தின் எழுவாயான மார்பன் என்னும் சொல்லே ஓங்கி என்னும் வினையெச்சத்தின் எழுவாயாக இருத்தல் தெளிவு. பிற பழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுக்களை 3. 2. 1. 3. 7 பிரிவில் காண்க.

### 3. 2. 1. 4. 8 நோக்கப்பொருள்

இவ்வெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் நோக்கப்பொருளில் ஒரே எழுவாயையே கொண்டு வரக் காண்கிறோம்.

3. 2. 1. 4. 8. 1 ஒரே எழுவாய்

பத்துப்பாட்டில்

"அகழ்இழிந் தன்ன கான்யாற்று நடவை
வழூஉமருங் குடைய வழாஅல் ஓம்பிப்
பரூஉக்கொடி வலந்த மதலை பற்றித்
துருவி னன்ன புன்றலை மகாரோடு
ஒருவிர் ஒருவிர் ஓம்பினிர் கழிமின்" பத்து 10-214

என வரும் அடிகளில் ஓம்பி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் பற்றி என்னும் காலவெச்சமும் நீவிர் என்னும் ஒரே எழுவாயையே (தோன்றா எழுவாய்) போன்ற

"அயலயலணி நோக்கி ஆங்காங்கு வருபவர்"
பரி 20-32

என வரும் பரிபாடல் அடியில் நோக்கி என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வா என்னும் வினையின் எழுவாயாக மக்களும் (வினையாலணையும் பெயர் (வருபவர்) வந்திருத்தல் காண்க.

3. 2. 1. 5 காலம்

இவ்வீற்றெச்சமும் காலவெச்சங்கள் காட்டும் எல்லாப் பொருள்களையும் காட்டி வந்துள்ளமையின் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களையும் காட்டுகின்ற நிலையைக் காண்கிறோம்.

3. 2. 1. 5. 1 இறந்த காலம்

வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள், நிலைமைப் பொருள், காரணப்பொருள் ஆகிய பொருள்களில் இவ்வீற்றெச்சம் இறந்தகாலம் காட்டுவதைக் காணலாம். எடுத்துக் காட்டாக, ஐங்குறுநூற்றில்

"... புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்
கழனித் தாமரை மலரும்" ஐங் 53-2

(புதிய நீர் பாய்ந்த அளவிலேயே கழனியிலுள்ள தாமரைகள் முதலிற் கலங்கிப் பின்னர் மலருதற்கு இடனான)

என வரிசைப்பொருளிலும், குறுந்தொகையில்

"... ... பாறை ஏறிக்
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்
கவலைத்து ... ... ..." குறு 12-2

(பாறையின் மேல் ஏறி கொடிய வில்லையுடைய வேடர் அம்புகளைத் தேய்த்துக் கூர்மை செய்தற்குக் காரணமான கவர்த்த வழிகளை உடைத்து)

எனத் துணைநிகழ்ச்சிப்பொருளிலும்,

"... வேம்பி னமலை வான்பூச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
குன்றுதலை மணந்த கானம்
சென்றனர் ... ... ..." குறு 281-3

(வேம்பினது நெருங்கியவெள்ளிய பூவினைச்சுரிதல் பொருந்திய மயிரையுடைய தலையின்கண் விளங்கும்படி அணிந்துகொண்டு (மலைகள் பொருந்திய காட்டிடத்தே ... சென்றுவிட்டனரோ)

என நிலைமைப்பொருளிலும்,

"... ... ... அவன்மார்
புறுக வென்ற நாளே குறுகி
ஈங்கா கின்றே தோழி ... ... ..." குறு 248-1

(நந் தலைவனுடையமார்பினை நீ பொருந்துக என்று வரையறுத்த நான் அணித்தாகலான் இவ்வாறு நிகழ்கின்றது காரணம்)

எனக் காரணப்பொருளிலும் வரும் இடங்களில் எல்லாம் இவ் வீற்றெச்சம் இறந்தகாலம் காட்டி தவருவதைக் காண்கிறோம். பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் இதே நிலை காணப்படு

வதை 3. 2. 4. 1, 3. 2. 4, 2, 3. 2. 4. 4, 3. 2. 4. 5 ஆகிய பிரிவுகளில் மேலே கண்ட பொருள்களைக் காட்டும் எடுத்துக் காட்டுகளில் காண்க.

### 3. 2. 1. 5. 2 நிகழ்காலம்

இவ்வீற்றெச்சம் உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் போது நிகழ்காலம் காட்டுவதைக் காணாலம் எடுத்துக்காட்டாகக் குறுந்தொகையில்

"நீலப் பைம்போ துளரி ...
... ... ... ... ...
இன்னா தெறிதரும் வாடையொடு" குறு 110-3

(நீரிலுள்ள நீலத்தினது பசிய போதுகளை அசைத்து ... இன்னாதாக வீசாநின்ற வாடைக்காற்றினால்)

என வரும் அடிகளில் உளரி என்னும் காலவெச்சம் உணர்த்தும் நிகழ்ச்சியும் அது கொண்டு முடியும் எறிதரும் என்னும் வினை காட்டும் நிகழ்ச்சியும் ஒருசேர நிகழ்ந்து நிகழ்காலத்தைக் காட்டி நிற்கக் காணலாம். பிரிவு 3. 2. 4. 3-ல் பிற இலக்கிய எடுத்துக்காட்டுக்களைக் காண்க.

### 3. 2. 5. 3. 1 எதிர்காலம்

இவ்வீற்றெச்சம் தாக்கப்பொருள், நோக்கப்பொருள் ஆகிய இருபொருள்களிலும் எதிர்காலத்தைக் காட்டும். புறநானூற்றில்

"தேர்மா வழிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை"
புறம் 373-3

தேர்களும் குதிரைகளும் சிதைந்து பரந்து மழைத் துளியாக வீழ்ந்து கெட அச்சமுண்டாக அன்புகளாகிய காற்று வீசுகின்ற இடமகன்ற பாசறையும்)

எனத் தாக்கப்பொருளிலும், பரிபாடலில்

"அயலய லணிநோக்கி ஆங்காங்கு வருபவர்"

பரி 20-32

(பிறர் பிறர் அணிந்துள்ள ஆடை அணிகலன்களைப் பார்க்கும் பொருட்டு அவ்வவ் விடங்களிலே சுற்றி வருபவர்கள்) என நோக்கப் பொருளிலும் வரும் இடங்களில் இவ்வீற்றெச்சம் எதிர்காலம் காட்டி நிற்பதைக் காண்க.

# 3.3

## பழந்தமிழில் காலவெச்சவிகுதிகள்-3

### -உள (உ)

### 3. 3. 1 — ள (உ)

இவ்விகுதியும் பழந்தமிழ் இலக்கியங்களில் குறுந்தொகை, திருக்குறள் ஒழிந்த ஏனைய நூல்கள் அனைத்திலும் காணப் படுகிறது. சிலம்பு, மணிமேகலை ஆகியவற்றில் மிகக் குறை வாகவே இது உள்ளது. எனவே இதனையும் முன்பழந்தமிழ்க் கூறாகவே கருதலாம். பதிற்றுப்பத்தில் ஒன்பது இடங்களி லும், ஐங்குறுநூற்றில் மூன்று இடங்களிலும், அகநானூற்றில் பதின்மூன்று இடங்களிலும், நற்றிணையில் நான்கு இடங் களிலும், புறநானூற்றில் ஏழு இடங்களிலும், பத்துப்பாட்டில் பதினைந்து இடங்களிலும், பரிபாடல், கலித்தொகை, சிலப் பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றில் முறையே 5, 2, 2, 2 இடங்களிலும் காணப்படுகிறது.

பொதுவாக இவ்விகுதி வல்வினை, மெல்வினை, இடை வினை ஆகிய மூன்றுவகை வினைகளிலும் வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது இவ்விகுதி க. ட. த, ற ஆகிய இறந்தகால இடைநிலைகளை ஏற்கும் வினைகளுக்குப் பின்னர் வரும் -Ø-வுக்குப் பின்னர்க் காணப்படினும் இகர ஒற்றினை எடுத்து வரும் கழுவு, தழுவு ஆகிய வினைச்சொற்களுக்குப் பின்னர் வரும் -Ø-வுக்குப் பின்னரும் வருதல் காணத்தக்கது.

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் கூர்ந்து நோக்கின் 40 வினைச்சொற்களுடனேயே இது வந்துள்ளமை காணலாம்.

### 3. 3. 1. 1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கு உதாரணம் தர வந்த இளம்பூரணர்
செய்யூ

என்பதையும், சேனாவரையர் (சூத்.228)

உண்ணூா வந்தான்
தின்னூா வந்தான்

என்பவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத்.230)

உண்ணூா வந்தான்

என்பதைத் தருவதோடு

"படுமகன் கிடக்கை காணூஉ"

"நிலம்புடையூ எழுதரும் வலம்படு குஞ்சரம்"

என முறையே புறம் (278), பதிற்றுப்பத்து (இடம் விளங்காத பாட்டு) ஆகியவற்றிலிருந்து இரண்டு எடுத்துக் காட்டுகளையும், தெய்வச்சிலையார் (224) நச்சினார்க்கினியர் தரும் உதாரணங்களையும, கல்லாடனார்

உழூஉ, உண்ணூஉ, தின்னூஉ
புகூஉ, ஓடூஉ, தூஉ

ஆகிய எடுத்துக்காட்டுக்களையும் தருவர்.

சேனாவரையர் செய்யா வாய்பாட்டு வினையெச்சம் பற்றிக் கூறும்போது இவ் ஊகாரமே, ஆகாரமாய்த் திரிந்து வரும் எனக் குறிப்பிடுவார். "அஃது உண்ணா என ஆகார மாயும் வரும்" எனக் கூறுவார். ஆனால் நச்சினார்க்கினியரோ அல்லது தெய்வச்சிலையாரோ இதுபற்றி எதுவும் கூறுவதில்லை. உண்ணூஉ, உண்ணா ஆகிய இரண்டும் பதில்நிலை வழக்கில் வருவனவாக இருப்பினும் ஒன்றிலிருந்து ஒன்றை வருவிப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை.

உரையாசிரியர்கள் தரும் உதாரணங்களை உற்று நோக்கின் உண்மை ஒன்று விளங்கும். இளம்பூரணரும் சேனாவரையரும் அளபெடை இல்லாத செய்யூ வாய்பாட்டுச் சொற்களையும் பிற உரையாசிரியர்களில் நச்சினார்க்கினியர் இரு வகைச் சொற்களையும், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகிய இருவரும் அளபெடைச் சொற்களையும் எடுத்துக் காட்டுகளாகத் தருவர். பொதுவாகச் சங்க இலக்கியங்களை நோக்கின் ஐமபத்தெட்டு இடங்கள் அளபெடையினைக் கொண்டும் ஐந்து இடங்கள் அளபெடை இன்றியும் காணப் படுகின்றன.

| | -ஊஉ | -ஊ |
|---|---|---|
| பதி | 6 | 3 |
| ஐங் | 3 | — |
| அகம் | 13 | — |
| நற் | 4 | — |
| குறு | 1 | — |
| புறம் | 7 | — |
| பத்து | 13 | 2 |
| பரி | 5 | — |
| கலி | 2 | — |
| குறள் | — | — |
| சிலம்பு | 2 | — |
| மணி | 2 | — |

மேலும் இவ் விகுதி பற்றிக் குறிப்பிடும் சேனாவரையர் "ஊகாரம் உண்ணூ வந்தான், தின்னூ வந்தான் என பின் வருந் தொழிற்கு இடையின்றி முன்வரும் தொழின்மேல் இறந்த காலம் பற்றி வரும்"

எனக் கூறுவதும், நச்சினார்க்கினியரும் சேனாவரையரைப் பின்பற்றி "தொழிற்கு இடையின்றி வரும்" எனக் கூறுவதுடன் "விரைவு உணர்த்திவரும்" எனவும் குறிப்பிடுவார். ஆனால் தெய்வச் சிலையார் இதுபற்றி எதுவும் கூறாவிடினும் இவ்வாய் பாட்டு வினையெச்சம் இறந்தகாலமும், நிகழ்காலமும் குறிக்

கும் எனக் குறிப்பிடுவார். கல்லாடனார் எதுவும் குறிப்பிடுவ தில்லை. தெய்வச்சிலையார் இது பற்றிக் கூறுவது உண்மை யெனவே தோன்றுகிறது. அவர் தரும்

"படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்றஞான்றினும் பெரிதுவந்தனளே"

என வரும் அடிகளில் அவன் கிடப்பதைக் கண்டதும் மகிழ்ச்சி அடைந்தாள் எனக் கூறும்போது காண்பதும் மகிழ்ச்சி அடைவதும் இடையீடின்றி நடப்பதைக் காண்கிறோம். இதனைப் "படுமகன் கிடக்கை காணப் பெரிதுவந்தனளே" எனவும் கூற முடியும். இதுபோன்றே

"நிலம்பிறக் கிடுவது போற்குளம்பு கடையூஉ
உள்ளமொழிக்குங் கொட்பின் மான்" புறம் 303-1

என வருவதிலும் "காற் குளம்பை ஊன்றி விரைந்து செல்லும் குதிரை" எனக் குறிப்பிடுவதிலும் விரைவு இருப்பதைக் காணலாம். இதுபோன்றே ஐங்குறுநூற்றில்

"மாமழை இடியூஉத் தளி சொரிந்தன்றே" 423

என வரும் அடியும் இங்கு நினைவுகூரத்தக்கது "கரிய முகில்கள் இடித்து முழங்கி நிரம்ப மழை பொழியாநின்றது" என்பதி லும் இந்நிலையைக் காண்கிறோம். விரைவு மிகுதியால் இது உடனிகழ்ச்சி போல அமைந்திருப்பது இங்கு உணரத்தக்கது. இந்நிலையில் பெரும்பான்மையான இடங்களில் இது விரைவு காட்டி வருதல் கவனிக்கத்தக்கது.

8. 3. 1. 2 குழல்

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலை -Ø- விற்குப் பின்னர் வரும்.

3. 3. 1. 2. 1

செய்யூ வாய்பாட்டு விகுதி அளபெடை எடுத்தும் அளபெடை எடுக்காதும் வரும்.

**செய்யூஉ வாய்பாடு**

| | | |
|---|---|---|
| அடூஉ | அடப்படும் | பதி 13-18 |
| இடியூஉ | இடித்து | ஐங் 423-1 |
| இடூஉ | இடப்பட்டு | அகம் 31-9 |
| பயிரிடூஉ | இடப்பட்டு | நற் 31-4 |
| கழூஉ | கழுவுதல் அழைத்து | குறு 279-5 |
| இடூஉ | குறி செய்து | புறம் 158-24 |
| உடையூஉ | உடைவதனால் | பத்து 6-305 |
| அறையூஉ | ஒலிக்க | பரி 10-7 |
| காணூஉ | கண்டு | கலி 84-11 |
| விடூஉ | விட்டு | சிலம்பு 27-102 |
| புகூஉ | ஓடி | மணி 18-77 |

**செய்யூ வாய்பாடு**

| | | |
|---|---|---|
| புடையூ | புடைத்து | பதி 26-8, |
| புடையூ | புடைத்து | பத்து 8-160 |

### 3. 3. 1.3 பொருள்

இவ்வாய்பாட்டு எச்சம் வரிசைப் பொருள், துணை நிகழ்ச்சிப்பொருள், உடனிகழ்ச்சிப்பொருள், காரணப்பொருள், நோக்கப்பொருள் ஆகியவற்றில் வந்துள்ளது.

எனினும் உடனிகழ்ச்சிப் பொருளிலேயே அதிகமாக வந்துள்ளது. அதனை அடுத்துத் துணைநிகழ்ச்சிப் பொருள் பின்னர் வரிசைப் பொருள் ஆகியவற்றில் வரக்காணலாம். காரணப்பொருள், நோக்கப் பொருள் ஆகிய பொருள்களில் ஒவ்வொரு இடங்களிலேயே வந்திருக்கின்றது.

#### 3. 3. 1. 3. 1 வரிசைப்பொருள்

இவ்வெச்சம் பதிற்றுப்பத்து (1), அகம் (5), புறம் (1) பத்துப்பாட்டு (1), சிலம்பு (1), மணிமேகலை (1) ஆகிய இலக்கியங்களில் மட்டுமே இப்பொருளில் வந்துள்ளது.

"... ... ... பூசலிற் புகன்ற வாயம்
முழவிமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயரும்"
பதி 30-20

"ஆரவாரத்தில் விருப்புற்ற மக்கட் கூட்டம் முழவு முழங்கும் பழைதாகிய வூரிடத்து நிகழும் திருவிழாக் கண்டு மீண்டு செல்லும்" எனப் பொருள் எழுதுவார் உரையாசிரியர். கண்டுவிட்டு மீண்டு செல்லும் என எழுதினும் அமையும்.

"ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத்து உண்ட
சிறுபல் கேணி பிடியடி நசைஇக்
களிறு தொடூஉக் கடக்குங் கான்யாற்று அத்தம்"
அகம் 137-1

(சுரநெறியிற் செல்லும் புதியர் சேற்றைக் கிண்டி ஊறிய நீரை உண்ட சிறிய பலவாய கேணிகளை தன் பிடியின் அடிச்சுவடென விரும்பி களிறுகள் தொட்டுப் பார்த்துக் கடந்து செல்லும் காட்டாற்றினையுடைய அச்சுரநெறியில்)

எனவும்

"வாளை நீர்நாய் நாளிரை பெறூஉப்
... ... ... ... ... ... ...
... ... முதலையொ டூழ்மாறு பெயரும்
அழும்பில் ... ... ... ..."
புறம் 283-2

(வாளைமீனை நீர்நாய் தன் நாட் காலையுணவாகப் பெற்று முதலைகளோடு முறைமுறை மாறுபட்டு நீங்கும் அழும்பில் என்னும் ஊர்)

எனவும்

"... ... கயி றரீஇ யிதைபுடையூ
... ... ... ... ... ... ...
கடுங்காற் றெடுப்ப ... ... ..."
பத்து 6-376

(கயிற்றை அறுத்துப் பாயையும் பீறிப் பாய்மரம் அடியிலே முறியும்படி மோதி ... கடிய காற்று எடுக்கையினாலே)

எனவும்

"... ... மனைக் கிழத்தி
நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவும்"
சிலம்பு 27-10

(மாநாய்கன் மனைவி வாழ்நாளை விட்டு நல்ல உயிரினைத் துறந்து உடம்பை யொழிக்கவும்)
எனவும்

"... ... கருங்கயல் நெடுங்கண்
அறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச்
செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும்" மணி 18-75

(கரிய கயல்மீன் போன்ற நெடிய அவளுடைய கண்கள் தாமே நம்மையுடைய மணிமேகலைக்கு இப்பொழுது அறிவு வேறு பட்டது காண் என்று மறைவாக அறிவுறுத்தற்கு அவளுடைய செவிமருங்கே ஓடி மீண்டும் மற்றொரு செவிக்குக் கூறுதற்குச் சென்றதொரு செய்கையும்)

எனவும் இப்பொருளில் வருதல் காண்க.

3. 3. 1. 3. 2 துணைநிகழ்ச்சிப்பொருள்

குறுந்தொகை, பரிபாடல், குறள், சிலம்பு ஒழிந்த எல்லாப் பழந்தமிழ் இலக்கியங்களிலும் இவ்விகுதி இப்பொருளில் வரக் காண்கிறோம்.

"... ... நெடிய மொழியூஉக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமார்
இடாஅ வேணி வியலறைக் கொட்ப" பதி 81-12

(வஞ்சினம் கூறி அவ்வஞ்சினம் தப்பாமல் தாம் பிறந்த குடிக்குக் கெடாத நல்ல புகழை நிலைநிறுத்துதற்கு அளவிடப் படாத எல்லையால் அகன்ற பாசறைக்கண்ணே சுழன்று திரிய)

எனவும்

"குரவ மலர மரவம் பூப்பச்
சுரனணி கொண்ட கானங் காணூஉ
வழுங்குக செய்பொருட் செலவென...
... ... ... ... ... ... ...
வந்தனர் தோழிநங் காதலோரே" ஐங் 357-1

(நங்காதலர் குரா மரங்கள் மலர்ந்தமையானும் மராமரங் கள் மலர்ந்தமையானும் வழிகள் அழகுற்ற காட்டினை நோக்கி நாம் குறித்து வந்த இளவேனிற் பருவம் இதோ தொடங்கிவிட்டது, இதுகாறும் ஈட்டிய பொருளே சாலும். இனி முயன்று செய்தற்குரிய பொருளின் மேற் செல்லும் செலவு தவிர்வதாக என்று அமைதி கொண்டு வந்து விட்டனர்காண்)

எனவும்

"கவைக்கதிர் இருப்புறங் கதூஉ உண்ட
.................. நெடுமாத் தோகை" அகம் 194-10

(கவைத்த கதிர்களின் கரிய புறத்தினைப் பற்றி உண்ட நீண்ட கரிய மயில்)

எனவும்

"செயிறா வெறிந்த சிறுவெண் காக்கை
பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்
தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉஞ் சுரக்கும்"
நற் 31-2

(செய்ய இறாமீனைப் பற்றுதற்குப் பாய்ந்த கழுத்தளவு சிறிது வெண்மையுடைய நீர்க்காக்கை பரவிய பெரிய குளிர்ச்சியை யுடைய கழியிடத்தைத் துழாவியெடுத்துத் தான் விரும்பிய பசிய காலையுடைய பெடையை அழைத்து, அதற்குக் கொடா நிற்கும்)

எனவும்

"முட்புற முதுகனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்"
புறம் 158-23

(முள்ளைப் புறத்தேயுடைய முதிர்ந்த பலாப்பழத்தைப்பெற்ற கடுவன் பஞ்சுபோலும் மயிரை யுடைத்தாகிய தலையினை யுடைய மந்தியைக் கையால் குறிசெய்து அழைக்கும்)

"குறியவு நெடியவு மடிதரூஉ விரித்து" பத்து 6-520
(சிறியனவும் நெடியனவுமாகிய மடிப்புடைவைகளைக்கொண்டு வந்து விரித்து)

எனவும்

"... ... நின் செம்மலைக் காணூஉ
இவன்மன்ற யானோவ உள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனன்...." கலி 84-11

(நின் பிள்ளையைக் கண்டு தாய்மார் யான் நோம்படி மனத்தைக் கைக்கொண்டு பின்னர் என்னை நினையாத நன்கு மதிக்கும் மகனல்லாதவன் பெற்றமகன் அறுதியாக இவனென்று கருதி அகன்ற மனையினுடைய வாயிலினெல்லையைக் கைவிட்டுப் புறப்பட்டுத் தெருவிலே வந்து தடுப்ப அவரிடத்தே தங்கினான்)

எனவும்

"காலை தோன்ற வேலையின் வரூஉ
நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை"
மணி 21-54

(அவ் விடியற்காலம் தோன்றுகின்றே பொழுதே வந்து மகிழ்ச்சியின்கண் உண்டான சோர்வு காரணமாக நடந்து செல்லும்

பொழுது வழுக்கித் தனது நல்ல கால் தளர்ந்து அடுக்களை யின்கண் உள்ள அடிசிற்கலங்கள் உடைந் தொழியும்படி அவற்றின் மேல் வீழ்ந்த அம்மடைத்தொழிலாளனை)

எனவும் வருதல் காண்க.

3. 3. 1. 3. 3 உடனிகழ்ச்சிப்பொருள்

பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்வெச்சம் பத்தொன்பது இடங்களில் இப்பொருளில் வந்துள்ளது.

> "உயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டம்
> கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க" பதி 30-35

(உயர்ந்தோன் படைத்த பெறுதற்கரிய பலியினை பெரிய கண்களையுடைய பேய்மகள் தீண்டுதற் கஞ்சிக் கைகளைப் புடைத்துக்கொண்டு நடுங்க)

என உடனிகழ்ச்சிப் பொருளில் வருதல் காணத்தக்கது. புடையூஉ என்பதற்குப் புடைத்துக் கொண்டு எனப்பொருள் எழுதுதல் உடனிகழ்ச்சிப் பொருள் என்பதைக் காட்டிநிற்கும். இதுபோன்றே

> "மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே" ஐங் 423-1

(பருவமோ கார்ப்பருவமாகிக் கரிய முகில்கள் இடித்து முழங்கி நிரம்ப மழை பொழியாநின்றது)

எனவும்

> "ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப" அகம் 322-3

(அமையாத காமம் வருத்தாநின்று அலைத்திட)

எனவும்

> "... ... ... உவக்காண்
> கழிப்பெயர் களரில் போகிய மடமான்
> விழிக்கண் பேதையொடு இனனிரிந் தோடக்
> காமர் நெஞ்சமொடு அகலாத்
> தேடூஉ நின்ற இரலை ஏறே" நற் 242-6

(கழிந்து பெயர்கின்ற களர்நிலத்திலே சென்ற பிணைமான் மருண்டு விழித்தலையுடைய கண்களையுடைய தன் குட்டியோடு கூட்டத்தினின்று இரிந்தோடுதலும் அதன்பால் உற்ற விருப்பமிக்க நெஞ்சத்தோடு சென்ற தேடாநின்ற ஆண்மானை உவ்விடத்தே பாராய்)

எனவும்

> "பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி
> விளரூன் றின்ற வெம்புலான் மெய்யர்" புறம் 359-4

(பேய்ப்பெண்டிர் பிணங்களைத் தழுவிப் பற்றிக்கொண்டு வெள்ளிய தசையைத் தின்றதனால் வெவ்விய புலால் நாறும் மெய்யினையுடையராய்)

எனவும்

> "............... கொடுங்கோற் கோவலர்
> ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
> ... ... ... கவுள்புடையூஉ நடுங்க" பத்து 7-3

(கொடிய கோலினை உடைய இடையர் பற்பறை கொட்டி நடுங்காநிற்ப)

எனவும்

> "ஆய்ந்தளவா வோசை யறையூஉப் பறையறையப்
> போந்தது வையைப் புனல்" பரி 10-7

(வையையாற்றின்கண் பெருகிய நீர் ஆராய்ந்து அளவிடப் படாத பல்வேறு ஓசைகள் ஒலியா நிற்பவும், கரைக்காவலரை அழைத்தற்குரிய பறைகள் முழக்கும் படியும் வந்தது)

எனவும் இப்பொருளில் வருதல் காண்க.

### 3. 3. 1. 3. 4 நிலைமைப்பொருள்

இவ்விகுதி இப்பொருளில் மிகஅருகியே காணப்படுகின்றது பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் அகம் (1), பத்துப்பாட்டு (1) ஆகிய இரு நூல்களில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வரக் காண்கிறோம்.

அகநானூற்றில்

> "கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன" அகம் 31-9

(செவ்வலரி மாலை இடப்பட்டு இறந்துகிடந்தாலொப்ப) எனவும் வரக் காணலாம்.

இதைப்போன்றே பத்துப்பாட்டில்

"... ... ... இழைபுனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய" பத்து 6-552

(அணிகளை அணிந்து நன்றாகிய நெடிய கூந்தலிற் பூசின நறிய மயிர்ச்சந்தனத்தை அலைத்து நீக்கும்படி)
என வந்துள்ளது.

3. 3. 1. 3. 5 காரணப்பொருள்

இவ்வெச்சம் பத்துப்பாட்டில் மட்டுமே அதிலும் ஒரு இடத்தில் மட்டும் இப்பொருளில் வந்துள்ளது.

பத்துப்பாட்டில்

"கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்து"
பத்து 6-305

(மூங்கிலின் கணுக்கள் திறக்கப்பட்டு உடைவதனால் முழக்க முண்டாகும்படி தட்டை அழகு அழிகையினாலே)
என வரும் பகுதியில் இப்பொருளில் வந்துள்ளது.

3. 3. 1. 3. 6 நோக்கப்பொருள்

இவ்விகுதி பதிற்றுப்பத்தில் மட்டுமே ஒரே ஒரு இடத்தில் இப்பொருளில் வந்துள்ளது.

"... ... ... விசும்பு துடையூ
வான்றோய் வெல்கொடி .... ... ..." பதி 44-1

(வானத்தைத் தடவுதற்கென் வானளாவ உயர்ந்த வெற்றிக் கொடி) தடவுதற்காக என எழுதினும் பொருந்தும். இது நோக்கப்பொருளைக் காட்டும்.

### 3. 3. 1. 3. 8 தொழில் பெயர்

இவ்வெச்சம் குறுந்தொகை (1), சிலப்பதிகாரம் (1) ஆகிய இரு நூல்களில் மட்டுமே தொழில் பெயராக வந்துதுள்ளது.

குறுந்தொகையில்

''மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல்'' குறு 279-5 என வரும் அடியில் கழூஉ என்னும் காலவெச்சம் தொழில் பெயராக வருதலைக் காண்கிறோம்.

''மழை கழுவுதலை மறந்துவிட்ட பெரிய கரிய பொற்றைக் கல்'' என உரையாசிரியர் பொருள் எழுதுவது காண்க.

இதுபோன்றே சிலம்பிலும்

''... ... ... ... ... கானவன்
கவண்விடு புடையூஉக்காவல் கைவிட'' சிலம்பு 27-217

என வருதலும், உரையாசிரியர் ''வேட்டுவன் கவண் கற்களை விடுத்துப் புடைக்கின்ற காவலினைக் கைவிடுதலால்'' என்று பொருள் எழுதி ''புடையூ என்பதனைப் புடைத்தல் எனத் தொழிற்பெயராகவும் கொள்க'' என விளக்குதலும் காண்க.

### 3. 3. 1. 4 எழுவாய்

பிற விகுதிகளைப் போன்றே இவ்விகுதியும் ஒரே எழுவாயைக் கொண்டு வருவதும், இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருவதும் பொருளை அடிப்படையாகக் கொண்டே உள்ளது.

### 3. 3. 1. 4. 1 வரிசைப்பொருள்

இவ் விகுதி இப்பொருளில் வரும் அனைத்து இடங்களிலும் (10 இடங்கள்) ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளது.

### 3. 3. 1. 4. 1. 1 ஒரே எழுவாய்

அகநானூற்றில்

"... ... ... ... கானவன்
... ... ... ... எறிந்த சிறுகல்
... ... ... ... ...
வேங்கை வரியிணர் சிதறித்தேன் சிதையூஉப்
பலவின் பழத்துள் தங்கும்" அகம் 292-10

என வரும் அடிகளில் சிதையூஉ என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வினையான தங்கும் என்னும் பெயரெச்சமும் சிறுகல் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வருதலைக் காண்கிறோம்.

இதே நிலையே பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் நிலவுவதை பொருள் பிரிவில் கொடுத்துள்ள எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

### 3. 3. 1. 4. 2 துணைநிகழ்ச்சிப்பொருள்

இவ்விகுதி ஒரு இடம் தவிர்த்து துணைநிகழ்ச்சிப்பொருளில் வரும் அனைத்து இடங்களிலும் ஒரே எழுவாயையே கொண்டு வரக்காண்கிறோம்.

### 3. 3. 1. 4. 2. 1 ஒரே எழுவாய்

புறநானூற்றில்

"செங்களந் துழவுவோள் ...
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" புறம் 278-7

என வரும் அடிகளில் காணூஉ என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வினையான உவந்தனள் என்னும் வினைமுற்றும் செங்களந் துழவுவோள் என்னும் ஒரே எழுவாயையே கொணடு வந்துள்ளன. பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் இதே நிலை காணப்படுவது பொருள் பிரிவில் உள்ள எடுத்துக் காட்டுக்களினின்றும் தெளிவாகும்.

### 3. 3. 1. 4. 2. 2 இரு எழுவாய்கள்

புறநானூற்றில் ஒரு இடத்தில் மட்டுமே இவ்வெச்சம் இப் பொருளில் இரு எழுவாய்களைக் கொண்டு வருதலைக் காண் கிறோம்.

"... ... ... ... ... நின்
கழூஉ விளங் காரங் கவைஇய மார்பே" புறம் 17-19

என வரும் புறநானூற்று அடிகள் "நினது கழுவி விளங்கின முத்தாரம் அகத்திட்ட மார்பை" என்று பொருள்படுவன இவற்றில் கழூஉ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக யாரோ என்னும் வருவித்த சொல்லும், அது கொண்டு முடியும் விளங்கின என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக ஆரமும் வந்திருத்தல் காண்க

### 3. 3. 1. 4. 3 உடனிகழ்ச்சிப்பொருள்

பழந்தமிழ் இலக்கியங்களில் மூன்று இடங்கள் தவிர்த்து எஞ்சிய இடங்கள் அனைத்திலும் ஒரு எழுவாயே காணப்படு கிறது.

### 3. 3. 1. 4. 3. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"... ... ... கடிப்பிகூஉப்
புண்டோ ளாடவர் போர்முகத் திறுப்ப" பதி 40-3

என வரும் அடிகளில் இகூஉ என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் வினையான இறுப்ப என்னும் வினை யெச்சமும் புண்தோள் ஆடவர் என்னும் ஒரே எழுவாயைக் கொண்டு வந்துள்ளன. பிற பழந்தமிழ் இலக்கிய எடுத்துக் காட்டுகளுக்கு பிரிவு 3. 3. 1. 3. 3. ஐக் காண்க.

### 3. 3. 1. 4. 3. 2 இரு எழுவாய்கள்

இவ்விகுதி இப்பொருளில் வரும்போது மூன்று இடங் களில் மட்டுமே இரு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளது.

பத்துப்பாட்டில்

"... ... கொடுங்கோற் கோவலர்
... ... ... ... ... ... ...
... ... ... கவுள்புடையூஉ நடுங்க" பத்து 7-3

என வரும் அடிகளில் புடையூ என்னும் காலவெச்சம் கவுள் என்னும் எழுவாயையும், அது கொண்டு முடியும் வினையான நடுங்க என்னும் வினையெச்சம் கோவலர் என்னும் எழுவாயையும் கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

இதுபோன்றே

"நேரிழை ... ... ...
... ... ... ... ...
... ... ஆங்கவன் பின்றொடரூஉத்
தாயத் திறமறியாள் தாங்கி ..." பரி 11-109

என வரும் பரிபாடல் அடிகளில் பின்தொடரூஉ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நேரிழையும், அது கொண்டு முடியும் வினையான தாங்கி என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக தாயும் வந்திருத்தல் காணலாம்

### 3. 3. 1. 4. 4 நிலைமைப்பொருள்

இச்வெச்சம் நிலைமைப்பொருளில் இரு இடங்களில் மட்டுமே வரக் காண்கிறோம். இரு இடங்களிலும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இரு எழுவாய்களையே கொண்டு வந்துள்ளன.

### 3. 3. 1. 4. 4. 1 இரு எழுவாய்கள்

அகநானூற்றில்

"கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன
புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்" அகம் 31-9

என வரும் அடிகளில் இடூஉ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக யாரோ என்னும் வருவித்த எழுவாயும் (இடப்பட்டு என உரையாசிரியர் செயப்பாட்டு வினையாக எழுதுதல் காண்க) அது கொண்டு முடியும் கழிந்தன்ன என்ற சொல்லின்

எழுவாயாக கிடந்தோர் என்ற வினையாலணையும் பெயரும் வந்திருத்தல் காண்க.

இதுபோன்றே பத்துப்பாட்டில்

"... ... ... ... நயந்தோர்
... ... ... ... ... இழைபுனையூஉ
நன்னெடுங் கூந்தல் ... ..." பத்து 6-549

என வரும் அடிகளில் புனையூஉ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நயந்தோர் (விரும்பின மகளிர்) என்னும் வினையாலணையும் பெயரும் அது கொண்டு முடியும் நன் (நன்றாகிய) என்னும் குறிப்புவினை அடியின் எழுவாயாக கூந்தலும் வந்திருத்தலைக் காணலாம்.

### 3. 3. 1. 4. 5 காரணப்பொருள்

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் பத்துப்பாட்டில் ஒரு இடத்தில் மட்டுமே இவ்வெச்சம் காரணப் பொருள் காட்டி வந்துள்ளது என்று முன்னரே கண்டோம். அந்த ஒரு இடத்திலும் இதுவும இது கொண்டு முடியும் வினையும் இரு எழுவாய்களையே கொண்டு வந்துள்ளன.

### 3. 3. 1. 4. 5. 1 இரு எழுவாய்கள்

"கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்து"
பத்து 6-305

என வரும் பத்துப்பாட்டு அடிகளில் உடையூ என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக கண் என்னும் சொல்லும் அது கொண்டு முடியும் வினையான அழிந்து என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக தட்டையும்வரக் காண்கிறோம்.

### 3. 3. 1. 4. 6 நோக்கப்பொருள்

இவ்விகுதி பதிற்றுப்பத்தில் மட்டுமே ஒரே ஒரு இடத்தில் இப்பொருளில் வந்துள்ளது. அந்த ஒரு இடத்தி

லும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழு வாயையே கொண்டு வருவதைக் காண்கிறோம்.

**3. 3. 1. 4. 6 1 ஒரே எழுவாய்**

"... ... ... ... விசும்பு துடையூ
வான்றோய் வெல்கொடி ... ..." பதி 44–1

என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் துடையூ என்னும் கால வெச்சமும் அது கொண்டு முடியும் வினையான தோய் என் னும் வினைவடிவமும் கொடி என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக் காணலாம்.

**3. 3. 1. 5 காலம்**

தாக்கப்பொருள் தவிர்த்து பிற பொருள்கள் அனைத்தி லும் செய்யூ வாய்பாடு வந்துள்ளமையை முன்னரே கண்டோம். எனவே இவ்வாய்பாட்டு எச்சமும் மூன்று காலங்களிலும் வந்திருத்தல் கண்கூடு.

**3. 3. 1. 5. 1 இறந்த காலம்**

அகநானூற்றில்

"... ... ... ... ... ஐம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயிர் இச்சுரம்
அறிதலும் அறிதிரோ என்னுநர்ப் பெறினே"
அகம் 8–15

(அழகிய கூந்தலை பிடரி மறையப் பின்னே கோதி அம்மயிர்த் தொகுதியைப் பிழிந்துவிட்டு வழிகள் செல்லமுடியாதபடி பின்னிக் கிடக்கும் இச்சுரத்தின் நெறியினை நீவிர் முன்பு அறிதலும் செய்வீரோ என்று பரிவுற்று வினவுவாரைப் பெறின்) என வரிசைப்பொருளிலும்,

"படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" புறம் 278–8

தன் மகனது கிடக்கையைக் கண்டு அவனைப் பெற்ற நாளிற் கொண்ட உவகையினும் பேருவகை கொண்டாள்)

என துணைநிகழ்ச்சிப்பொருளிலும்,

"கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன" அகம் 31-9

(செவ்வலரி மாலை இடப்பட்டு இறந்து கிடந்தாலொப்ப)
என நிலைமைப்பொருளிலும்,

"கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்து"
பத்து 9-305

(மூங்கிலின் கணுக்கள் திறக்கப்பட்டு உடைவதனால் முழக்க முண்டாகும்படி தட்டை அழகு அழிகையினாலே, என காரணப் பொருளிலும் வரும் இடங்களில் எல்லாம் இவ்வெச்சம் இறந்த காலம காட்டி நிற்பதைக் காண்கிறோம்.

3. 3. 1. 5. 2 நிகழ்காலம்

"... ... பெருஞ்சினை யேறிக் கணக்கலை
கூப்பிடூஉ உகளுங் குன்று ... ..." அகம் 205-22

(பெரிய கிளையில் ஏறி கூட்டமாய ஆண்குரங்குகள் தம் இனங்களைக் கூப்பிட்டுத் தாவும் குன்று)

என உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் இடங்களில் இவ்வெச்சம் நிகழ் காலம் காட்டி நிற்கக் காணலாம்.

3. 3. 1. 5. 3 எதிர்காலம்

இவ்வெச்சம் பதிற்றுப்பத்தில்

"... ... விசும்பு துடையூ
வான்றோய் வெல்கொடி ... ..." பதி 44-1

(வானத்தைத் தடவுதற்கென வானளாவ உயர்ந்த வெற்றிக் கொடி) என நோக்கப்பொருளில் வந்து எதிர்காலமும் காட்டி நிற்பதைக் காண்கிறோம்.

# 3.4

# பழந்தமிழில் காலவெச்ச விகுதிகள் - 4

## 3. 4. 1 —ஆ

செய்யா என்னும் வாய்பாட்டு எச்சம் உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வரும் என்பது முன்னரே கூறப்பட்டது. இது எதிர்மறையில் வரும்போது இதில் காணப்படும் -ஆ- இடைநிலை எதிர்மறை காட்டும் எனவும், காலவெச்சவிகுதியாக -Ø பயன்படும் என்பதும் முன்னரே கூறப்பட்டது. உடன்பாட்டு எச்சமாக இது வரும்போது -ஆ கால வெச்ச விகுதியாகவும், -Ø- கால இடைநிலையாகவும் வரும் எனக் கொள்ளலாம். சங்கத் தமிழில் செய்யா வாய்பாட்டுக் காலவெச்சம் உடன்பாட்டிலேயே மிக அதிகமாக வந்துள்ளது.

**செய்யா எனும் வாய்பாடு**

| | உடன்பாடு | எதிர்மறை |
|---|---|---|
| பதி | 3 | — |
| ஐங் | 1 | — |
| அகம் | 36 | 8 |
| நற் | 16 | 2 |
| குறு | 4 | 3 |

| | | |
|---|---|---|
| புறம் | 23 | 2 |
| பத்து | 16 | — |
| பரி | 8 | 1 |
| கலி | 31 | 2 |
| குறள் | 5 | 16 |
| சிலம்பு | 9 | 1 |
| மணி | 5 | — |

காலவெச்ச வாய்பாடுகள் பற்றிக் குறிப்பிடும்போது வினையியலில் இவ்வாய்பாடு குறிப்பிடப்படவில்லையென்றாலும் எழுத்ததிகாரத்தில்,

> "செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்
> அவ்வியல் திரியாதென்மனார் புலவர்" சூத் 222

என்ற சூத்திரத்தால் இவ்வாய்பாடு குறிப்பிடப்பட்டிருப்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

### 3. 4. 1. 1 உரையாசிரியர்கள்

முன்னர்க் குறிப்பிடப்பட்டது போலத் தொல்காப்பியர் இது உடன்பாடா, எதிர்மறையா எனக் குறிப்பிடவில்லை. இதைப்போன்றே உரையாசிரியர்களும் வெளிப்படையாக இதுபற்றி எதுவும் கூறவில்லை. ஆனால் செய்யூ வாய்பாடு பற்றிக் குறிப்பிடும் சேனாவரையர் அதுபற்றிப் பேசிவிட்டு "அஃது உண்ணா என ஆகார மாயும் வரும்" எனக் குறிப்பிடுவதிலிருந்து அதனை உடன்பாடாகவே கொண்டமை நன்கு விளங்கும்.

மேலும் நச்சினார்க்கினியர் தரும்

"கல்லாக் கழிப்பர்"

"நிலங் கிளையா நாணிநின்றோள்"

என்ற எடுத்துக்காட்டுக்களிலிருந்து அவர் இதை உடன்பாட்டு எச்சமாகவே கொண்டுள்ளமை நன்கு விளங்கும். ஆனால் தெய்வச்சிலையார் தரும் எடுத்துக் காட்டு எதிர்மறைப்பெயரெச்சத்திற்குரிய எடுத்துக்காட்டாக உள்ளது.

"வானிடு வில்லின் வரை வறியாவாய்மையால்"

என்பதில் வரைவறியா என்பதற்கு "வருகையை அறிந்து கொள்ளக் கூடாத " எனப் பொருள் எழுதுதல் காண்க. இந் நிலையில் இது வினையெச்சம் என்பது பொருத்தமாக இல்லை.

கல்லாடனார் செய்யூ என்பதற்குச் செய்யா என்பதூ உம் ஓர் வாய்பாடு எனக் கூறுகின்றாரேயன்றி எடுத்துக்காட்டுக் கள் எதுவும் தரவில்லை.

3. 4. 1 2 சூழல்

இவ் விகுதி இறந்தகால இடைநிலை -∅- விற்குப் பின்னர்வரும்.

3. 4. 1. 2. 1 இறந்தகால இடைநிலை -∅- விற்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| கூரா | மிகுந்து | பதி 71–22 |
| மடாஅ | மடுத்து | ஐங் 128-2 |
| கவியா | கவித்து | அகம் 9-21 |
| அகலா | சென்று | நற் 242-9 |
| எஞ்சா | எஞ்சி | குறு 211-3 |
| அடா | அடக்கி | புறம் 212-4 |
| தெறியா | தெறித்து | பத்து 7-165 |
| புனையா | கோலஞ்செய்து | பரி 19-86 |
| அஞ்சா | அஞ்சி | கலி 143-8 |
| பறியா | பறித்து | குறள் 774 |
| நீங்கா | நீங்கி | சிலம்பு 10-159 |
| காவா | காத்து | மணி 21-168 |

3. 4. 1. 3 பொருள்

இவ்விகுதி துணைநிகழ்ச்சிப் பொருளிலும், உடனிகழ்ச்சிப் பொருளிலுமே மிக அதிகமான எண்ணிக்கையில் வந்துள்ளது.

3. 4. 1. 3. 1 வரிசைப்பொருள்

இவ்விகுதி இப்பொருளில் முப்பத்திரண்டு இடங்களில் வந்திருப்பினும் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பரிபாடல், குறள், மணிமேகலை ஆகிய நூல்களில் இப்பொருளில் காணப் படுவதில்லை.

... ... ... ... காலிற் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்'' அகம் 110-19

(எம் சிற்றில் சிறு சோறுகளைக் காலாற் சிதைத்துவிட்டு அங்கு நில்லாது போய பலருள்ளும்)

என்பதில் வரிசைப்பொருளில் இவ்விகுதி வந்துள்ளது. இது போன்றே

"... ... ... ... ...மந்தி
கல்லென் சுற்றங் கைகவியாக் குறுகி" நற் 57-3

(மந்தி கல்லென ஒலிக்கும் தன் சுற்றத்தை அவை ஒலியாவாறு தன் கையால் அமர்த்திவிட்டு அருகிலே சென்று)

எனவும்

"ஏதி லாளர் சுடலை போலக்
காணாக் கழிய ... ... ..." குறு 231-3

(அவர் சேயிடத்தே வரும்பொழுதும் அயலாருடைய சுடுகாட்டைக்கண்டு செல்லுவார் போல நம்மைக் காணுமாத்திரையானே வாளா செல்லாநிற்பர்)

எனவும் இப்பொருளில் வருதல் காண்க. காணாக் கழிப என்பதற்கு உரையாசிரியர் "கண்டு செல்வார்" என்றும், "காணா: செய்யா என்னும் உடன்பாட்டு வினையெச்சம்" என்றும் எழுதுவது குறிப்பிடத்தக்கது.

"... ... ... வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீடவாரா
ஆரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ" புறம் 212-2

(மதுவை ஆமையிறைச்சியுடனே வேட்கை தீர அக்களமர் உண்டு ஆரல்மீனாகிய கொழுவிய சூட்டை அழகிய கதுப்பகத்தே அடக்கி)

எனவும்,

"... ... ... கடவுட் காணின்
தொழாஅநிர் கழியின் அல்லது வறிது
நும்மியந் தொடுதல் ஓம்புமின் ..." பத்து 10-230

(கடவுளைக் கண்டீராயின் அக் கடவுளை வணங்கி நீயிர் போகும் அத்துணையல்லது சிறிது நும்முடைய இசைக்கருவி களைத் தீண்டுதலைக் காப்பீராக)

எனவும்,

"சுரையாவெந் நோக்கத்தாற் கைசுட்டிப் பெண்டின்
இகலி னிகந்தானை ... ... ..." பரி 9-35

(வெறிச்சென்ற பார்வையுடனே கையாற்றன்னைச் சுட்டிச் சொல்லி அவன் வழிமுறைக் கிழத்தியாகிய வள்ளி காரணமாக ஊடிச் செல்லாநிற்ப அங்ஙனம் செல்லும் தேவ சேனையை)

எனவும்

"மணற் சிற்றில் காலிற் சிதையா... ...
வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி ... ..." கலி 51-2

(மணலாற் செய்த சிற்றிலைக் காலால் அழித்து ... வரியினை டைய பந்தை எடுத்துக்கொண்டு ஓடி நாம் நோவத்தக்க தொழில்களைச் செய்யும் சிறியவனாகிய காவலில்லாதவன்)

எனவும்

"மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து"
சிலம்பு 10-10

(நீலமணி போலும் நிறமுடையோனாகிய திருமாலின் கோயிலை வலம் செய்து நீங்கி)

எனவும் வந்திருத்தல் காண்க.

3. 4. 1. 3. 2 துணைநிகழ்ச்சிப் பொருள்

குறுந்தொகை, பத்துப்பாட்டு தவிர்ந்த பிற இலக்கியங்கள் அனைத்திலும் இவ்வெச்சம் இப்பொருளில் வந்துள்ளது.

"... ... ... குடிபுறந் தராஅ

... ... ... ... ... ...

பூத்தன்று பெருமநீ காத்த நாடே" பதி 13-23

(வணிகர் குடியைப் பேணி ... நீ காத்தோம்பும் நாடு பல்வளமும் நிரம்பியுள்ளது)

எனவும்,

"... ... வறுமுலை மடாஅ

உண்ணாப் பாவையை யூட்டு வோளே" ஐங் 128-2

(வறிய தன் முலையை (பாவையின்) வாயின்கண் வைத்து உண்ணுமியல்பில்லாத பாவையைப் பாலூட்டுவாள்)

எனவும்,

"நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறிது

அவிழினும் உயவும் ஆய்மடத் தகுவி" அகம் 289-7

(மெத்தென்ற பிணிப்பு மிக்க கை நெகிழ்ந்து சிறிது விலகினும் வருந்தும் அழகிய மடப்பமுடைய நம் தலைவி)

எனவும்

"காமர் நெஞ்சமொடு அகலாத்

தேடூஉ நின்ற இரலை ஏறே" நற் 242-9

(அதன்பால் உற்ற விருப்பமிக்க நெஞ்சத்தோடு சென்று தேடாநின்ற ஆண்மானை உவ்விடத்தே பாராய்)

எனவும்,

"... ... அரியன காணா ... ...

செருச்செய் முன்ப ... ..." புறம் 41-11

(பொறுத்தற்கரியவற்றைக் கண்டு போர் செய்யும் வலியையுடையோய்)

எனவும்,

"நினயானைச் சென்னி நிறங்கு குமத்தாற்

புனையா ... ... ... ... ....

மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியும்"

பரி 19-85

(நினது யானையினது மத்தகத்தின் நிறத்தினைக் குங்குமத் தாலே கோலஞ் செய்து ... அதனோடே அன்பர்கள் உவகை மிக்க நெஞ்சத்தோடே நின் திருக்கோயிலை வலம் வந்து நினக் குச் செய்யும் பூசையின்கண்)

எனவும்,

"ஏறெவ்வங் காணா எழுந்தார் ... ..." கலி 102-28

(ஏற்றையுடைய நல்லவர்கள் தங்கள் ஏற்றுடைய வருத்தத் தைக் கண்டு எழுந்திருந்தார்)

எனவும்,

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்" குறள் 774

(தன் கைப் படையாய வேலைத் தன்மேல் வந்த களிற்றோடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேல்நாடித் திரிவான் தன் மார்பின்கணின்ற வேலைக் கண்டு பறித்து மகிழும்)

எனவும்,

"பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்
... ... ... ... ... ... ...
இலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளி"
சிலம்பு 10-159

(பட்டினப்பாக்கத்தை விட்டு நீங்கி ... விளங்கும் ஒளியினை யுடைய சிலாவட்டத்தின்கண் எழுந்தருளி)

எனவும்.

"இன்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ வறியான் மயக்க மெய்தா
... ... ... ... ... ... ...
... ... ... பணிந்து தொழில் கேட்ப" மணி 24-33

(ஈங்குத் தோன்றிய இவள் இன்னாள் என்றாதல் யார் என் றாதல் அவ்வரசன் அறியாதவனாய் அவள் அழகில் மயக்கம் எய்தி ...அம்மடந்தையைப் பணிந்து நாள்தோறும் அவள்

ஏவிய தொழில்களை எல்லாம் செய்ய)
எனவும் வருதல் காண்க.

3. 4. 1. 3. 3 **உடனிகழ்ச்சிப்பொருள்**

"... ... நிலங் கிளையா
நாணி நின்றோள்... ... ... " அகம் 16-15

(நிலத்தைக் கால் விரலாற் கீறி நாணி நின்ற அவள்)
எனவும்

"கோடு துவையாக் கோள்வாய் நாயொடு
காடுதேர் ... ... ... ... வேட்டு
வயவர் ... ... ... ... ..." நற் 276-1

(கொம்பையூதிக் கௌவிக் கொல்லும் நாயோடு காட்டின் கண்ணே ஆராய்கின்ற ... ... வேட்டுவ வீரர்)
எனவும்

"... ... ... படுபிணம் பெயராச்
செங்களந் துழவு வோள் ... ..." புறம் 278-9

(அங்கே இறந்து கிடக்கும் மறவர் பிணங்களைப் பெயர்த்துப் பெயர்த்துப் பார்த்துக்கொண்டே குருதி படிந்து சிவந்த போர்க்கள முற்றும் சுற்றி வருபவள்)
எனவும்

"பாயிருள் நீங்கப் பகல்செய்யா எழுதரு
ஞாயிறு ... ... ... ... " பத்து 10-84

(பரந்த இருள் நீங்கும்படி பகற்பொழுதைச் செய்து தோன்றும் ஞாயிறு)

எனவும்

"ஒண்கதிர் ஞாயிற் றூறளவாத் திரிதரும்
செங்கால் அன்னம் ... ... ... பத்து 6-385

(ஒள்ளிய கதிரையுடைய அஞ் ஞாயிற்றைத் தாம் சேர்தலை நெஞ்சாலே கருதிக்கொண்டு பறக்கும் சிவந்த காலையுடைய அன்னம்)

எனவும்,

"தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள்" பரி 11-106

(வாழைத்தண்டினைத் தழுவிப் பாய்கின்ற நீரையுடைய வையையாற்றின்கண்)

எனவும்,

"நின்னொடு சூழுங்கால்
நீயும் நிலங்கிளையா
என்னொடு நிற்றல் எளிதன்றோ..." கலி 63-15

(நின்னொடு யான் இதனை ஆராயுங்காலத்து நீயும் நாணத்தால் நிலத்தைக் கீறி என்னுடனே வேறுபட்டு நின்றநிலை செய்தற்கு எளிதன்றோ)

எனவும்,

"முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்" குறள் 824

(கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாராய வஞ்சரை அஞ்சல் வேண்டும்)
எனவும்

"செத்தும் பிறந்தும் செம்பொருள் காவா
இத்தலம் நீங்கேன் ... .... .." மணி 1-168

(யான் இறந்தும் பிறந்தும் பௌத்தர் கூறுநின்ற மெய்ப்பொருளைப் பாதுகாத்து இக்காஞ்சி நகரத்தைக் கைவிட்டுப் போகேன். யானும் இந்நகரத்திலேயே உறைவேன் காண்)
எனவும் வருதல் காண்க.

### 3. 4. 1 3. 4 நிலைமைப்பொருள்

பதிற்றுப்பத்து (1), குறுந்தொகை (1), பத்துப்பாட்டு (2), கலித்தொகை (2) ஆகிய நான்கு நூல்களில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளது.

"... ... .. அருங்கலந் தராஅர்
மெய்பணி கூரா வணங்கெனப் பராவலின்" பதி 71-21

(அரிய அணிகலன்களையும் நிறையாகச் செலுத்தாத பகை வேந்தர் உடல்நடுக்கம் மிகுந்து வருத்தக்கூடிய தெய்வமென நின்னை நினைந்து பரவுவதால்)

எனவும்,

"பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
... ... ... பொழிலணிக் கொளாஅச்
சினையினி தாகிய காலையும் ..." குறு 341-1

(பலவாகிய பூக்கள் தோன்றிய பசிய அரும்புகளையுடைய குராமரம்... சோலையினிடத்தே அழகைக் கொண்டு கொம்புகள் காண்டற்கு இன்பமுடையனவாகிய இப்பருவத்திலும்)

எனவும்,

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
சூரர மகளிர் ஆடுஞ் சோலை" பத்து 1-37

(விளவினது சிறிய தளிரைக் கிள்ளித் தெறித்துக்கொண்டு ... கொடுமையுடைய தெய்வமகளிர்கள் ஆடாநிற்கும் சோலை)

எனவும்,

"... ... ... அடிதளரா
... ... ஒருத்திவந்து ... ..." கலி 90-9

(ஒருத்தி அடி தளர்ந்துவந்து)

எனவும் வருதல் காண்க.

### 3. 4. 1. 3. 5 காரணப்பொருள்

அகநானூறு (1), குறுந்தொகை (1) ஆகிய இரு நூல்களில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளது.

"... ... வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயின் ஓடலின்" அகம் 39-8

(காற்றானது சுழற்றிப் பரவச் செய்ய காட்டைக் கவரும் பெரிய தீயானது காற்றுச் சென்ற விடமெல்லாம் பரத்தலின்)
எனவும்,

"... ... ...எஞ்சாத்
தீய்ந்த மராஅத்து ... ... " குறு 211-3

(எஞ்சி நின்ற வேனிலால் வெம்பிய மராமரத்தினது)
எனவும் இப்பொருள் காட்டி வந்துள்ளது.

3. 4. 1. 3 6 தாக்கப்பொருள்

பதிற்றுப்பத்து (1), நற்றிணை (2) ஆகிய இரு இலக்கியங்களில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளமையைக் காண்கிறோம்,

"நிலம் பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி"
பதி 72-9

(நிலமகள் சுமை நீங்க நீர் பரந்து வந்து பெருகுதலால்) ("ஒராஅ என்பதனை ஒருவ என்று திரித்துக்கொள்க" என உரையாசிரியர் உரை எழுதுதல் காண்க)
எனவும்,

"... ... யானைச் செங்கோடு கழாஅ
வழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி" நற் 247-2

(புலியைக் கொன்ற யானையின் சிவந்த தந்தம் கழுவும்படி வீழ்கின்ற மழையைப் பெய்த இனிய முழக்கத்தையுடைய மேகம்)
எனவும் வந்துள்ளது.

3. 4. 1. 3. 7 நோக்கப்பொருள்

இவ்வெச்சம் நற்றிணையில் மட்டும் ஒரே ஒரு இடத்தில் இப்பொருளில் வந்துள்ளது.

"... ... ... ... நின்வயின்
சேரி சேரா வருவோர்க் கென்றும்
அருளல் வேண்டும் ... ... ..." நற் 342-3

என வரும் நற்றிணை அடிகளில் சேரா என்னும் எச்சம் நோக்கப்பொருளை உணர்த்தி நிற்கும். "நீ இருக்கின்ற சேரியைச் சேர வருபவர்க்கு எக்காலத்தும் அருள் செய்ய வேண்டும்" என உரையாசிரியர் பொருள் எழுதுதல் காண்க.

### 3. 4. 1. 3. 8 தலைமை வினை

இவ்வாய்பாட்டுக் காலவெச்சம் தலைமை வினையாக வருதலும் உண்டு. பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் புறநானூற்றில் அதுவும் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே வந்துள்ளது

"நின்று நிலைஇயர்நின் னாண்மீ னில்லாது
படாஅச் செலீஇயர்நின் பகைவர் மீனே"

புறம் 24-25

என வரும் புறநானூற்று அடிகளில் காணப்படும்

"படாஅச் செலீஇயர்"

என வருவதில் படாஅ என்னும் முழுவினை செலீஇயர் என்னும் துணைவினையைக் கொண்டு வந்துள்ளது.

இன்றைய தமிழில்

செத்துப்போனான்
உடைந்து போயிற்று

போன்றவற்றில் வரும் 'போ' என்னும் துணைவினையைப் போன்றே 'செல்' என்னும் துணைவினை இங்கு வந்திருக்கக் காண்கிறோம். செல், போ ஆகியவை ஒரே பொருளைக் குறிப்பினும் துணைவினையாக இன்றைய தமிழில் 'போ' வரப் புறநானூற்றில் 'செல்' வந்திருத்தல் கவனித்தற்குரியது.

இதற்கு உரை எழுதப் போந்த உரையாசிரியர்

"நின்று நிலைப்பதாக நினது நாளாகிய மீன்; நில்லாது பட்டுப்போவதாக நின் பகைவருடைய நாளாகிய மீன்"

என எழுதுவது காண்க.

### 3. 4. 1. 4 எழுவாய்

இவ்விகுதி தாக்கப்பொருளில் வரும் மூன்று இடங்களையும், காரணப் பொருளில் வரும் இரு இடங்களையும் தவிர்த்து எஞ்சிய அனைத்து இடங்களிலும் அனைத்துப் பொருள்களிலும் இவ்வெச்சமும், இதுகொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வ'துள்ளன.

### 3. 4 1. 4 1 வரிசைப்பொருள்

இவ்வெச்சம் இப்பொருளில் வரும் அனைத்து இடங்களிலும் ஒரே எழுவாயே காணப்படுகிறது.

### 3. 4. 1. 4. 1. 1 ஒரே எழுவாய்

அகநானூற்றில்

"... ... ... கைபிணி விடாஅ
.. ... ... ஒரீஇ நின்ற
என்னுரத் தகைமையில் ... ... " அகம் 32-12

என வரும் அடிகளில் விடாஅ என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் நின்ற என்னும் பெயரெச்சமும் நான், என்னும் ஒரே எழுவாயையே (தோன்றா எழுவாய்) கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம். எஞ்சிய பழந்தமிழ் இலக்கியங்களிலும் இதே நிலை காணப்படுவதை இவ்விகுதியின் பொருள் பற்றிப் பேசும் பிரிவில் காணும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

### 3. 4. 1. 4. 2 துணைநிகழ்ச்சிப்பொருள்

இப்பொருளிலும் இவ்விகுதி ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக் காணலாம்.

### 3. 4. 1. 4. 2. 1 ஒரே எழுவாய்

புறநானூற்றில்

"நறுநெய் யுருக்கி நாட்சோ றீயா
வல்ல னெந்தை பசி தீர்த்தல்..." புறம் 379-9

என வரும் அடிகளில் ஈயா என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் பசிதீர்த்தல் என்னும் வினைவடிவமும் எந்தை என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இதே நிலையினைத்தான் பிற பழந்தமிழ் நூல்களும் கொண்டு உள்ளன. எடுத்துக்காட்டுக்களைப் பொருள் பிரிவில் (3. 4. 1. 3. 2) காணலாம்.

### 3. 4. 1. 4. 3 உடனிகழ்ச்சிப்பொருள்

உடனிகழ்ச்சிப் பொருளில் வரும்போது இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வந்து உள்ளன.

### 3. 4. 1. 4. 3. 1 ஒரே எழுவாய்

அகநானூற்றில்

"கைகவியாச் சென்று ... ...
... ... .... ... ...
... ... ... ... ...
... ... என் நெஞ்சே" அகம் 9-21

என வரும் அடிகளில் கவியா என்னும் காலவெச்சமும், அது கொண்டு முடியும் சென்று என்னும் காலவெச்சமும் நெஞ்சு என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வருவதைக் காண்கிறோம். 3. 4. 1. 3. 3 பிரிவில் காணும் எடுத்துக்காட்டுக்கள் பிற பழந்தமிழ் நூல்களிலும் இதே நிலை நிலவுவதைக் காட்டுகின்றன.

### 3. 4. 1. 4. 4 நிலைமைப்பொருள்

இவ்விகுதி நிலைமைப்பொருளில் வரும்போதும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வருவதைக் காண்கிறோம்.

### 3. 4. 1. 4. 4. 1 ஒரே எழுவாய்

பத்துப்பாட்டில்

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ...
சூரர மகளிர் ஆடுஞ் சோலை" பத்து 1-37

என வரும் அடிகளில் தெறியா என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் ஆடும என்னும் பெயரெச்சமும் சூரர மகளிர் என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. பிற பழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுக்களைப் பொருள் பிரிவில் (3. 4. 1. 3. 4) காண்க.

### 3. 4. 1 4. 5 காரணப்பொருள்

முன்னரே குறிப்பிட்டபடி பழந்தமிழ் நூல்களில் அகநானூறு, குறுந்தொகை ஆகிய இரு நூல்களில் மட்டுமே அதிலும் ஒவ்வொரு இடத்தில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளது. இவ்விரு இடங்களிலுமே இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இரு வேறு எழுவாய்களைக் கொண்டு வரக் காண்கிறோம்.

### 3. 4. 1. 4. 5. 1 இரு எழுவாய்

அகநானூற்றில் வரும்

"... ... வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயின் ஓடலின்" அகம் 39-8

என்ற அடிகளில் உறாஅ என்னும் காரண எச்சத்தின் எழுவாயாக வளி என்ற பெயரும் அது கொண்டு முடியும் ஓடலின்

என்னும் வினையின் எழுவாயாக தீ என்ற பெயரும் வந்து உள்ளன. இதே நிலைதான் குறுந்தொகையிலும் காணப் படுகிறது (காண்க, பிரிவு 3. 4. 1. 3. 5).

### 3. 4. 1. 4. 6 தாக்கப்பொருள்

பழந்தமிழ் நூல்களில் மூன்று இடங்களில் (பதி1, நற் 2) மட்டுமே இவ்விகுதி தாக்கப்பொருளில் வந்துள்ளது. மூன்று இடங்களிலும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இரு எழுவாய்களைக் கொண்டே வந்துள்ளன. பொருளைப் பொறுத்தே இந்நிலை என்பதை முன்னரே கண்டோம்.

### 3. 4. 1. 4. 6. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"... ... ... ...
நிலம்பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி"
பதி 72-9

என வரும் அடிகளில் ஒராஅ என்னும் எச்சத்தின் எழுவாயாக நிலம் என்ற சொல்லும் அது கொண்டு முடியும் வினையான ஈண்டி என்னும் எச்சத்தின் எழுவாயாக நீர் என்றசொல்லும் வந்திருத்தலைக் காண்கிறோம். நற்றிணைக்குரிய எடுத்துக் காட்டினை 3. 4. 1. 3. 6 பிரிவில் காணலாம்.

### 3. 4. 1. 5 காலம்

செய்யா வாய்பாட்டு உடன்பாட்டு எச்சமும் மூன்று காலத்திலும் வந்திருக்கக் காண்கிறோம். இறந்த காலத்தில் மிக அதிகமாகவும், அதனை அடுத்து நிகழ்காலத்திலும், எதிர்காலத்தில் மிகக் குறைவாகவும் இவ்வெச்சம் வந்துள்ளது.

### 3. 4. 1. 5. 1 இறந்தகாலம்

அகநானூற்றில்

"... ... ... காலிற் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்" அகம் 110-19

(எம் சிற்றில் சிறு சோறுகளைக் காலாற் சிதைத்துவிட்டு அங்கு நில்லாது போய பலருள்ளும்)

என வரிசைப்பொருளிலும், நற்றிணையில்

"... ... ... ... நன்றும்
புலரா நெஞ்சமொடு புதுவ கூறி" நற் 339-2

(பெரிதும் வாட்டமுற்று நம்முள்ளத்துடனே புதியனவாய சில வற்றை கூறி)

என துணைநிகழ்ச்சிப்பொருளிலும், குறுந்தொகையில்

"பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
... ... பொழிலணிக் கொளாஅச்
சினையினி தாகிய காலையும் ..." குறு 341-1

(பலவாகிய பூக்கள் தோன்றிய பசிய அரும்புகளையுடைய யுடைய குராமரம் ... சோலையினிடத்தே அழகைக் கொண்டு கொம்புகள் காண்டற்கு இன்பமுடையனவாகிய இப்பருவத் திலும்)

என நிலைமைப் பொருளிலும், அகநானூற்றில்

"... ... வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயின் ஓடலின்" அகம் 39-8

(காற்றானது சுழற்றிப் பரவச் செய்ய காட்டைக் கவரும் பெரிய தீயானது காற்றுச் சென்றவிடமெல்லாம் பரத்தலின்) எனக் காரணப்பொருளிலும் வரும் இடங்களில் எல்லாம் இவ் வெச்சம் இறந்த காலத்தைக் காட்டி நிற்பதைக் காணுகிறோம். பிற பழந்தமிழ் இலக்கியங்களிலும் இவ்வெச்சம் இறந்தகாலம் காட்டிவரும் நிலையை 3. 4. 1. 3. 1, 3. 4. 1. 3. 2, 3. 4. 1. 3 4, 3. 4. 1. 3. 5 ஆகிய பிரிவுகளில் தந்துள்ள எடுத்துக் காட்டுக் களினின்றும் தெளிவாக அறியலாம்.

### 3. 4. 1. 5. 2 நிகழ் காலம்

இவ்வெச்சம் உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் இடங்களில் நிகழ்காலத்தைக் காட்டி நிற்கக் காணலாம்.

அகநானூற்றில்

"... ... நிலங் கிளையா
நாணி நின்றோள் ... " அகம் 16-15

(நிலத்தைக் கால் விரலாற் கீறி நாணி நின்ற அவள்)
எனவும், புறநானூற்றில்

"... ... ... படுபிணம் பெயராச்
செங்களந் துழவு வோள் ... ..." புறம் 278-6

(அங்கே இறந்து கிடக்கும் மறவர் பிணங்களைப் பெயர்த்துப் பெயர்த்துப் பார்த்துக் கொண்டே குருதி படிந்து சிவந்த போர்க்கள முற்றும் சுற்றி வருபவள்)

எனவும் உடனிகழ்ச்சிப் பொருளில் இவ்வெச்சம் வரும் இடங்களில் நிகழ்காலததில் வந்துள்ளமை தெளிவு. பிற பழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுக்களை 3. 4. 1. 3. 3 பிரிவில் காண்க.

3. 4. 1. 5. 3 எதிர்காலம்

இவ்வெச்சம் தாக்கப்பொருள், நோக்கப்பொருள் ஆகிய இரு பொருள்களையும் காட்டும் நிலையில் எதிர்காலத்தைக் காட்டி நிற்கக் காணுகிறோம்.

பதிற்றுப்பத்தில்

"நிலம் பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி"
பதி 72-9

(நிலமகள் சுமை. நீங்க நீர் பரந்து வந்து பெருகுதலால்)
என தாக்கப்பொருளிலும், நற்றிணையில்

"... ... ... ... ... நின்வயின்
சேரி சேரா வருவோர்க் கென்றும்
அருளல் வேண்டும் ... ... " நற் 342-3

(நீ இருக்கின்ற சேரியைச் சார வருபவர்க்கு எக் காலத்தும் அருள் செய்யவேண்டும், என நோக்கப் பொருளிலும் வரும் இடங்களில் இவ்வெச்சம் எதிர்காலத்தைக் காட்டிநிற்றல் காண்க.

# 3.5

# பழந்தமிழில் காலவெச்ச விகுதிகள் —பு

## 3. 5. 1 — பு

செய்பு வாய்பாட்டு எச்சத்தையும் பிற வினையெச்ச வாய்பாடுகளோடு அடக்கிக் கூறுவார் தொல்காப்பியர். பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் ஆராயின் கலித்தொகை ஒழிந்த ஏனையவற்றில் மிகமிகக் குறைவாகவே இவ்வாய்பாட்டு வினையெச்சம் காணப்படுகிறது. சிலபபு, மணிமேகலை ஆகியவற்றில் இவ்வாய்பாட்டு வினையெச்சம் முறையே ஏழு, எட்டு இடங்களில் காணப்பட குறளில் இது வராமலே இருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

இதே நிலையினை இடைக்காலத் தமிழ் நூல்களிலும் காணலாம். அப்பர் தேவாரத்தில் இது இரு இடங்களில் மட்டும்ம வருகிறது. இந்நிலை முன்பழந்தமிழுக்கும் பின் பழந்தமிழுக்கும் இடையே உள்ள ஒரு வேறுபாட்டைக் காட்டுவதோடு பழந்தமிழுக்கும் இடைக்காலத்தமிழுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினையும் காட்டுவதாகக் கொள்ளலாம்.

3. 5. 1. 1 உரையாசிரியர்கள்

செய்பு வாய்பாட்டிற்கு எடுத்துக்காட்டுகள் தரப்போந்த இளம்பூரணர் (225, 226)

நகுபு வந்தான்
கையிறுபு வீழ்ந்தான்

ஆகியவற்றையும், சேனாவரையர் (228)

நகுபு வந்தான்
கையிறுபு வீழ்ந்தான்

என இளம்பூரணர் தரும் அதே உதாரணங்களையும், நச்சினார்க்கினியர் (230, 232, 233)

"பல்கால், வாக்குபு தரத்தர வருத்தம் வீட, ஆர உண்டு"

"புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்த"
"நகுபு வந்தான்"
"வாடுபு வனப்போடி"
"உண்குபு வந்தான்"
"கற்குபு வல்லன் ஆயினான்"
"வயிறு குத்துபு கிடந்தான்"
"ஞாயிறு படுபு வந்தான்"

ஆகிய உதாரணங்களையும், தெய்வச்சிலையார் (222, 225)

"புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த"
"வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர"
"உண்பு வந்தான்"
"கையிறுபு வீழ்ந்தான்"

ஆகியவற்றையும், கல்லாடனார் (230, 232, 233)

செய்பு, உழுபு, உண்குபு, தின்குபு,
"புகுபு, தூபு,

போன்றவற்றையும்

உண்குபு வந்தான்
கையிறுபு வீழ்ந்தான்

ஆகியவற்றையும் தந்துசெல்வர்.

இவ்வாய்பாடு பற்றிப் பேசும் சேனாவரையர்

"பகரவுகரம் நகுபு வந்தான் என நிகழ்காலம் பற்றி வரும். நகா நின்று வந்தான் என்றவாறு. ஈண்டு நிகழ்கால மென்றது முடிக்குஞ் சொல்லாலுணரப்படுந் தொழிலோடு உடனிகழ்தல் உரிஞுபு என உகரமும், கற்குபு எனக் குகரமும், ஏற்றவழிப் பெறுதல் கொள்க"

எனக் கூறுவார். எனவே இவருடைய கருத்துப்படி செய்பு வாய்பாட்டு வினையெச்சம் நிகழ்காலம் காட்டி வருமென்பதும், உடனிகழ்ச்சிப்பொருளை இது காட்டி நிற்கும் என்பதும் விளங்கும்.

இவ்வுருபு நிகழ்காலம் பற்றிவரும் என சேனாவரையர் குறிப்பிடுவது இருசெயல்களும் ஒரே நேரத்தில் நிகழ்வது பற்றிப் போலும். இதனை அவர் "ஈண்டு நிகழ்காலம் என்றது முடிக்குஞ் சொல்லால் உணரப்படும் தொழிலொடு உடனிகழ் தல்" என்பார். எனவே உடனிகழ்ச்சிப் பொருளில் வரு வதெல்லாம் அவருக்கு நிகழ்கால வினையெச்சம்.

பகர ஒற்றினைக் காலங் காட்டும் இடைநிலையாகக் கொண்டு உகரத்தை வினையெச்ச விகுதியாகக் கொள்ள லாமோ எனலாம். பகரத்தைக் கால இடைநிலையாகக் கொள் ளின் இது இறப்பில் காலத்தை மட்டும் காட்டுவதாகக் கருத வேண்டும். அவ்வாறு கருதினால் இவ்வாய்பாட்டு வினை யெச்சம் இறந்த காலத்தில் பல இடங்களிலும் வருதல் இந் நிலைக்கு எதிராக அமையும். இதனால்தான் இது இங்கு புகர விகுதியாகக் கொள்ளப்படுகிறது.

நச்சினார்க்கினியர் சேனாவரையர் கருதுவது போன்று உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்காலத்திலும் வரும் எனக் கருதினாலும் பெரும்பான்மையும் "பெரும்பான்மை இறந்த காலத்து வரும்" என்பார். இவற்றிற்குரிய உதாரணங்களையும் தந்து செல்லுவார் இவர்.

இவ் வாய்பாடு பற்றிக் குறிப்பிடும் தெய்வச்சிலையார் இது மூன்று காலத்திலும் வரும் எனக் கருதுவார்.

"புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த என்பது இறந்தகாலம் குறித்த செய்பு என்னும் வினையெச்சம். வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர என்பது நிகழ் காலங் குறித்த செய்பு என்னும் வினையெச்சம். உண்பு வந்தான்- இது எதிர்காலங் குறித்த செய்யும் என்னும் வினையெச்சம் மூன்றிடத்து ஐந்து பாலொடும் ஒட்டிக்கொள்க" என்பார்.

'இடையிடுபு தொடுத்த' என்பதற்கு உரையாசிரியர்கள் 'இடையிட்டுத் தொடுக்கப்பட்ட' என எழுதுவதும் (புறம்33) "வாடுபு வனப்போடி" என்பதற்கு 'நிறம் வாடி அழகு கெடுகையினாலே' எனப் பொருள் எழுதுவதும் (கலி 16 இங்குக கவனிக்கத்தக்கன. நிறம் வாடுதலும் அழகு கெடுதலும் ஒரே நேரத்தில் நிகழ்கின்ற காரணத்தினால்தான் இது நிகழ் காலத்தில் வருவதாகக் குறிப்பிட்டார் போலும். உண்பு வந்தான் என்பது உண்பதற்காக வந்தான் எனப் பொருள் படுவ்து போலும்.

கல்லாடனார் இது பற்றி எதுவும் குறிப்பிடுவதில்லை.

சுப்பிரமணிய சாஸ்திரியார் (1934: 188) நச்சினார்க்கினியரையும் தெய்வச்சிலையாரையும் பின்பற்றி இது இறந்த காலம் நிகழ்காலம் ஆகிய இரு காலங்களிலும் வரும் எனக் கருதுவார்.

தெரிபு வேறு கிளத்தல் (தொல். சொல் 49)

எனவரும் தொல்காப்பிய அடிகளைக் காட்டி இறந்த காலத்தில் வரும் என்பதற்கு இவ்வடி பொருந்தும் என்பார். சேனாவரையரும்

"தெரிந்து கொண்டு பொதுமையின் வேறாகக் கிளத்தல்" எனப் பொருள் எழுதுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. சாஸ்திரியார் தன்னுடைய தொல்காப்பியம் சொல்லதிகாரம் என்ற ஆங்கில நூலில் (1945 முதல் பதிப்பு, 1979 இ பதிப்பு: 213)

Of these is may generally be stated that ceytu, ceyyu and ceypu denote the past time"

எனக் கூறுவார்.

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் ஆராயின் இவ்வுருபு இறந்த காலத்தில் அதிகமாகவும் நிகழ் காலத்தில் குறைவாகவும் வருதல் காணலாம்.

இது போன்றே உடனிகழ்ச்சிப்பொருளில் மட்டுமல்லாது வேறு பல பொருள்களிலும் ( ) இவ் வெச்சம் வந்துள்ளது.

### 3. 5. 1. 2 சூழல்

இவ் வி நதி

1. -∅- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் வரும்.

### 3. 5. 1. 2. 1 -∅- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| ஏர்பு | எழுந்து | பதி 24-27 |
| இழிபு | இறங்கி | ஐங் 101-2 |
| உளர்பு | பரப்பி | அகம் 98-9 |
| அருந்துபு | அருந்தி | நற் 338-7 |
| சேர்பு | சார்ந்து | குறு 82-1 |
| இறுபு | ஒடிந்து | புறம் 373-20 |
| திரள்பு | திரண்டு | பத்து 6-648 |
| பொலிபு | பொலிந்து | பரி 13-32 |

| | | |
|---|---|---|
| முனிபு | வெறுத்து | கலி 144-42 |
| சிந்துபு | சிந்தி | சிலம்பு 4-43 |
| தொகுபு | கூடி | மணி 2-35 |

3. 5. 1. 3 பொருள்

பிற வாய்பாட்டு எச்சங்களைப் போன்றே இவ்வெச்சமும் வரிசைப்பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள், உடனிகழ்ச்சிப் பொருள், நிலைமைப்பொருள், காரணப்பொருள், தாக்கப் பொருள், வினையடைப் பொருள், நோக்கப்பொருள் ஆகிய பொருள்களில் எல்லாம் வந்துள்ளது, மேலும் இவ்வெச்சம் தொழிற்பெயராகவும் (''நிரம்பு அகல்பு அறியா'' பதி 43-33) பல இடங்களில் வந்துள்ளமையும் இவ்வெச்சமே அதிகமாக இப்பொருளில் வருவதும் குறிப்பிடத்தக்கன. செய்யூ வாய் பாட்டு எச்சம் இரண்டு இடங்களில் மட்டுமே தொழிற் பெயராக வர இவ்வாய்பாட்டு எச்சமோ இருபத்தொரு இடங்களில் தொழிற்பெயராக வருதலைக் காண்கிறோம்.

3. 5. 1. 3. 1 வரிசைப்பொருள்

இவ்வெச்சம் பதிற்றுப்பத்தில் ஒரே ஒரு இடத்தில் தான் இப்பொருளில் வந்துள்ளது.

> ''அழல் விடுபு ... ... ...
> தொழில் புகல் யானை நல்குவன் பலவே'' பதி 40-30

(காட்டுத்தீ போலும் சினமாகிய தீயைக் கைவிட்டு வேண்டுந் தொழில்களைச் செய்தற்கு விருப்பத்தினையுடைய யானைகள் பலவற்றை வழங்குவன்) என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் இதனைக் காணலாம். இதுபோன்றே

ஐங்குறுநூற்றில்

> ''ஏர் கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு
> வந்தன்று ... ... ... ... ...
> ... ... ... ... கொண்கன் றேரே'' ஐங் 101-2

(எம்பெருமான் ஊர்ந்த தேர் எழுச்சியையுடைய பசிய அடம்பங்கொடிகள் அற்றுப்போம்படி செலுத்தப்பட்டுப் பின்னர் கழியின் மருங்கே இறங்கி ... வந்தது)

எனவும், அகநானூற்றில்

"வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய"
அகம் 136-8

(தலைவிக்கு மணநீராட்டிய மகளிர் தமது கூரிய கண்களாலும் இமையாராய் நோக்கி விரைந்து மறைந்திட)

எனவும், நற்றிணையில்

"... — இரையெழுந் தருந்துபு
.... ... ... ... தோடுமடல் ஏறி
... ... ... ... ... ...
பயிர்தல் ஆனா பைதலங் குருகே" நற் 338-7

(நாரையானது ... இரைதேடி அருந்தி ... பனையின் தோடா கிய மடலில் ஏறியிருந்து ... கூவுதலை நிறுத்தவில்லை)

எனவும், குறுந்தொகையில்

"... ... ... தேக்கொக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
... ... ... ... ... ... ...
... ... ... மூங்கிற் றூங்கும்" குறு 201-2

(தேமாங்கனியினை உண்டு நீல நிறமுடைய மெல்லிய சிற கினையும் வளைந்த உகிரினையும் உடைய வௌவால்கள் .... ... ... மூங்கிலின் கிளையிலே தூங்காநின்ற)

எனவும், பத்துப்பாட்டில்

"... ... ... ... வினைஞர்
... ... ... ... ... ... ... ...
பகடூர் பிழிந்த பின்றை" பத்து 4.231

"... ... மண்டுகாற் சார்வா
நளிர்மலைப் பூங்கொடித் தங்குபு கக்கும்" பரி 10-121

(செறிந்த மலையின்கண் பூங்கொடிகளிடத்தே தங்கிப் பின்னர் ஆண்டியங்கும் காற்றினைப் பற்றுக் கோடாகக் கொண்டு வானிடத்தே ஏறிச் செல்லும்)

எனவும் இவ்விகுதி வரிசைப்பொருளைத் தந்து நிற்கக் காண லாம்.

### 3. 5. 1. 3. 2 துணைநிகழ்ச்சிப்பொருள்

பழந்தமிழ் நூல்களில் இவ்விகுதி இப்பொருளிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் வந்துள்ளது.

பதிற்றுப்பத்தில்

"... ... ... வலனேர் பிரங்கும்
... ... ... கமஞ்சூன் மாமழை" பதி 24-27

(வலமாக எழுந்து முழங்கும் ... சூல் கொண்ட கருமுகிற் கூட்டம்)

என வருதலைக் காண்க. இதுபோன்றே ஐங்குறுநூறில்

"... ... ... வளை நெகிழ்போ டும்மே" ஐங் 20-8

(வளைகள் நெகிழ்ந்து கழலாநிற்கும்)

எனவும், அகநானூறில்

"... ... தோட்டு ஆழ்பு
சுரும்புண ... ... ..." அகம் 161-9

(வண்டுகள் மலரிதழுட் புக்குத் தேனையுண்ண)

எனவும், நற்றிணையில்

"... ... ... கழி சேர்பு
... ... ... தேனுடை அழிபழம்
... ... ... ... மூக்கிறுபு
... ... ... இருஞ்சேற்று ஆழப் பட்டென"

நற் 372-2

(பனையின் தேனையுடைய அழிந்த பழம் மூக்கு இற்றுக் கழியை அடைந்து கரிய சேற்றிலே புதையும்படி விழுந்ததனால்)

எனவும், குறுந்தொகையில்

"... ... ... ... புதுமலர்
ஆர்கழல் புகுவ போல" குறு 82-6

(புதிய மலர்கள் தங் காம்பினின்றும் கழன்று உதிர்தலைப் போன்று)

எனவும், புறநானூறில்

"புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த"
புறம் 33-12

(புலராத பசிய இலையை யிடையிட்டுத் தொடுக்கப்பட்ட)
எனவும், பத்துப்பாட்டில்

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா" பத்து 1-37

(விளவினது சிறிய தளிரைக் கிள்ளித் தெறித்துக்கொண்டு)

எனவும், பரிபாடலில்

"... ... ... பாய்புட னாட" பரி 17-37

(பாய்ந்து ஒரு சேர நீராடுதலானே)

எனவும், கலித்தொகையில்

"... ... ... முகையவிழ்பு புதல்நந்த" கலி 119-7
சிறு தூறுகள் ... முகைகள் அவிழ்ந்து விளங்க)

எனவும், சிலம்பில்

"... ... சீறியாழ் வாங்குபு தழீஇ" சிலம்பு 28-31
(சீறியாழை எடுத்தணைத்து)

எனவும், மணிமேகலையில்

"சிந்துபு சின்னீர் ஐம்படை நனைப்ப" மணி 3-138

(சிந்தித் தம் வாயூறல் தம் மார்பிடைக் கிடக்கும் ஐம்படைத் தாலியை நனைப்ப)
எனவும் வந்திருத்தலைக் காண்கிறோம்.

### 3. 5. 1. 3. 3 உடனிகழ்ச்சிப் பொருள்

துணைநிகழ்ச்சிப் பொருளை அடுத்து இப்பொருளிலேயே இவ்விகுதி அதிகமாக வந்துள்ளது.

பதிற்றுப்பத்தில்

"... ... மின்னுமிழ் பிலங்க" பதி 39-15

(ஒளி சொரிந்து விளங்குமாறு)

என வருவதையும், அகநானூற்றில்

"அரும்பிமிர் பூத ... ..." அகம் 304-11

(வண்டு ஒலித்து ஊத)

எனவும், நற்றிணையில்

"கையூன்றுபு இழிதரு களிறு..." நற் 114-12

(தனது துதிக்கையை ஊன்றி இறங்குகின்ற களிறு)

எனவும், குறுந்தொகையில்

"... ... ... தாங்குபு புணரி

... ... ... ... ... ...

பெருங்கலி வான மேர்தரும் பொழுதே" குறு 287-6

(சூலினைத் தாங்கி ஒன்றனோடு ஒன்று சேர்ந்து ... பெரிய ஆரவாரமுடைய முகில்கள் எழாநின்ற இக்காரப் பருவத்தினை)

எனவும், பத்துப்பாட்டில்

"பேய்மகளிர் பெயர்பாட" பத்து 6-16

(பேயாகிய மகளிர் உலாவி ஆடாநிற்ப]

எனவும், பரிபாடலில்

"கரை பொழுகு தீம்புனற்கு ... ..." பரி 16-16

(முழங்கி ஒழுகாநின்ற இனிய வையை நீருக்கு)

எனவும், கலித்தொகையில்

"... வண் டிமிர்பூதுஞ்

சாந்த மரத்தின் ... ... ..." கலி 43-2

(வண்டுகள் ஒலித்துத் தாது ஊதுஞ் சந்தன மரத்தினால்) எனவும், சிலம்பில்

"... ஆயம் நடுங்குபு நின்றிரங்கும்" சிலம்பு 17-4-1

பசுநிரை மெய்நடுங்கி நின்று அரற்றும்)

எனவும் வந்திருத்தலைக் காண்க.

### 3. 5. 1. 3. 4 நிலைமைப்பொருள்

துணைநிகழ்ச்சிப் பொருளையும், உடனிகழ்ச்சிப் பொருளையும் அடுத்து இப்பொருளிலேயே இவ்விகுதி அதிகமான எண்ணிக்கையில் வந்துள்ளது.

பதிற்றுப்பத்தில் இது இப்பொருளில் ஒரே ஒரு இடத்தில் தான் வரக் காண்கிறோம.

"... ... கைதடிபு பலவுடன்
யானை பட்ட ... ... ... ..." பதி 36-5

(பலவாய்க் கை துணிக்கப்பட்டு யானைகள் வீழ்ந்து கிடக்கும்)

எனவும்,

"... ... மடநடை நாரை
கையறு பிரற்றும் ... ..." ஐங் 152-2

(மெல்லிய நடையையுடைய நாரை தன் மருட்கையாலே செயலற்று ஆரவாரிக்கும்)

எனவும்,

"புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்"
அகம் 126-20

(முதுகில் தாழ்ந்து இருண்ட விளங்கும் கொத்தாய ஐந்து பகுப்பையுடைய கூந்தலையும்)

எனவும்,

"புறந்தாழ்பு இருண்டு கூந்தல் ..." நற் 284-1

(புறத்தே தாழ்ந்து இருண்ட கூந்தல்)

எனவும்

"... ... ... பால் வார்பு
... ... இறைஞ்சிய செறிகோட் பைங்குரல்"
குறு 198-3

(பால் நிறைந்து வளைந்த செறிந்த குலைகளையுடைய பசிய கதிர்)

எனவும்

"வேந்துடை யவையத் தோங்குபு நடத்தலும்"
புறம் 157-4

(அரசுடைத்தாகிய அவைக்களத்தின்கண் மேம்பட்டு நடத்தலும்)

எனவும்

"நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை"
பத்து 1-86

(ஒளி தங்கி அசையும் தொழிற் கூறமைந்த பொன்னாற் செய்த மகரக்குழை)

எனவும்

"... ... ... தளர்பொல்கிப்
பாங்கருங் கானத் தொளித்தேன் ..." கலி 115-14

(அச்சத்தாலே தளர்ந்து நடந்து பக்கத்திலுண்டான சொல்லுதற்கரிய கானத்திலே சென்று ஒளித்தேன்)

எனவும் வருதல் காண்க.

**3. 5. 1. 3. 5 காரணப்பொருள்**

பதிற்றுப்பத்து (1), அகநானூறு (2), நற்றிணை (1), குறுந்தொகை (3), பத்துப்பாட்டு (1), பரிபாடல் (1) ஆகிய ஆறு இலக்கியங்களில் ஒன்பது இடங்களில் மட்டுமே வந்துள்ளது. பதிற்றுப்பத்தில்

"நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லுபு
ஏன மாகிய நுனைமுரி மருப்பின்
... ... மழகளிறு முழங்கும் பாசறை" பதி 16-5

(நல்ல அழகிய நெடிய கதவுகளை தாக்கிச் சிதைத்தலால் நுனி முரிந்து குறுகிய மருப்பினை யுடையவாதலால் பன்றியைப் போலத் தோன்றும் இளங்களிறுகள் பிளிறும் பாசறை)

எனவும், அகநானூற்றில்

"வயந்திகழ் பிமிழ்தரும் ... ... ... ...
... ... ... ... ... ... ... —
கடும்பகட் டியானை ... ... ..." அகம் 93-17

(வலி விளங்குதலின் முழங்கும் ... கடிய பெரிய யானைப் படையினையும்)

எனவும், நற்றிணையில்

"... ... ... ... ... எழிலி
தெற்கேர் பிரங்கும் அற்சிரக் காலையும்" நற் 5-5

(மேகமானது தென்றிசையின் கண்ணே யெழுந்து செல்லு தலாலே பிரிந்தோர் இரங்குகின்ற முன்பனிக்காலத்தும்)

எனவும், குறுந்தொகையில்

"புடைத்தொடு புடைஇப் பூநாறு பலவுக்கனி"
குறு 373-6

(பக்கத்திலே தோண்டியமையானே உடைந்து மலர் மணக்கு மாறு போலே மணக்கும் பலாப்பழம்)

எனவும், பத்துப்பாட்டில்

"... ... ... ... நிலாவிரிபு
பகலுரு வுற்ற இரவு ... ..." பத்து 6-548

(நிலாப் பரக்கையினாலே பகலின் வடிவை ஒத்த இராக்காலம்)
எனவும், பரிபாடலில்

"... ... ஊர்பொறை கொள்ளாது
கரையுடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு"
பரி 7-2

(முகில்கள் தம்மேல் ஏறின பாரம் தாங்கமாட்டாமல் தம் வயிறு கிழிந்தமையாலே கரையுடைந்த குளத்தின் நீர் கழலு மாறு போலக் கழலாநிற்ப)

எனவும் வந்திருத்தலைக் காண்கிறோம்.

3. 5. 1. 3. 6 தாக்கப்பொருள்

புறநானூறு, பத்துப்பாட்டு, கலித்தொகை குறள் ஒழிந்த பிற பழந்தமிழ் நூல்கள் அனைத்திலும் இவ்வெச்சம் தாக்கப் பொருளில் வரக் காண்கிறோம்.

"... ... கவரு நெய்வழி புராலின்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல" பதி 47-5

(எரிக்கப்படும் நெய் வழியுமாறு பெய்து நிரப்புதலால் கால் விளக்கினது படுத்த திரியானது பேரொளி காட்டி யெரிய)

எனவும்,

"... ... ... ... ... புரவி
... ... ... ... ...
விசையுபு கடைஇ ... ... " ஐங் 422-1

(நம் குதிரைகளை மேலும் விரைந்தோடுமாறு தூண்டிச் செலுத்தி)

"விரவுறு பன்மலர் வண்டுசூழ்பு அடைச்சி"
அகம் 379-10

(கலப்புற்ற பல மலர்களை வண்டு மொய்க்கும்படி சூடி)

எனவும்,

"அதிர்குரல் எழிலி ... ... ... ...
கண்டூர்பு விரிந்த கனையிருள் நடுநாள்" நற் 228-2

(முழங்குகின்ற குரலையுடைய மேகம் ... கண்ணொளி மறை யும்படி பரத்தலினாலே செறிந்த இருளையுடைய நடு யாமத்தில்)

எனவும்,

"முகைதலைத் திறந்த நாற்றம்
... ... ... ... ... புதல் மிசை
பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல" குறு 382-2

(அரும்புகள் மலர்ந்தமையானே உண்டாய மணம் புதலின் மேல் பூக்கள் மிக்க செம்முல்லையோடே தேன்மணக்குமாறு நெருங்கா நிற்ப)

எனவும்,

"இடியெதிர் கழறும் ... ... ...
... ... ... ... செவிசெவிடு படுபு
... ... ... ... ... ... ... ...
நணி முரல் வளை ... ... ..." பரி 2-37

(நீ ஏந்தியுள்ள நினது மிக்கு முழங்கும் சங்கு அவ்வவுணர் களின் செவிகள் செவிடுபட்டுப்போக இடிபோல முழங்கா நிற்கும்)

எனவும்,

"விரிகதிர் மண்டிலந் தெற்கேர்பு வெண்மழை
அரிதில் தோன்றும் அச்சிரக் காலையும்"
சிலம்பு 14-104

(விரிந்த கதிரையுடைய ஞாயிற்று மண்டிலம் தெற்கே எழுந்து இயங்குதலானே வெண்முகில் அரிதாகத் தோன்றும் முன்பனிக் காலமும்)

எனவும்,

"பொன்னின் ஆடியிற் பொருந்துபு நிற்போர்"
மணி 19-90

(திருமகள் போன்று தமது நிழல் நிலைக்கண்ணாடியிலே பொருந்தும்படி அதனெதிரே தமதழகைக் கண்டு நிற்பவரும்) எனவும் வந்திருத்தல் காண்க.

3. 5. 1. 3. 7 வினையடைப் பொருள்

பழந்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்க இவ்விகுதி இப்பொருளில் பதினான்கு இடங்களில் வந்துள்ளது. அகநானூற்றில்

"... ... பாம்பின் விரைபுநீர் முடுக" அகம் 324-13

(பாம்பு போல விரைந்து நீர் முடுகிச் செல்ல)
எனவும், குறுந்தொகையில்

"கழலோன் காப்பக் கடுகுபு போகி" குறு 356-2

(வீரக்கழலணிந்த தன் தலைவன் காத்துச் செல்லாநிற்ப விரைந்து சென்று)

எனவும், புறநானூற்றில்

"நட்டோரை யுயர்பு கூறினன்" புறம் 239-5

(நட்டோரை மிகுத்துக் கூறினான்)

எனவும், பரிபாடலில்

"விரைபு விரைபு மிகைமிகை யீண்டி" பரி 12 30

(விரைந்து விரைந்து மிகமிக நெருங்கிச் செல்லாநிற்ப)
எனவும், கலித்தொகையில்

"... ... ... ஞாயிறு
கடுகுபு கதிர் மூட்டிக் காய்சினந் தெறுதலின்"
கலி 8-2

(பகலோன் கருகிக் காய்கின்ற கிரணங்களைச் செலுத்திச் சினத்தாற் சுடுகையினாலே)
எனவும் வந்துள்ளன.

### 3. 5. 1. 3 8 நோக்கப்பொருள்

பழந்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்கின் புறநானூற்றில் ஒன்றும், சிலம்பில் ஒன்றுமாக இரு இடங்களில் மட்டுமே இவ்விகுதி இப்பொருளில் வந்துள்ளதைக் காண்கிறோம்.

புறநானூற்றில்

"... ... ... ... நிலங்கவர்பு
விரைந்துவந்து சமந்தாங்கிய
வல்வேன் மலையன் ... ... ..." புறம் 125-12

(போர்க்களத்தைக் கைக்கொள்ள வேண்டி விரைந்து வந்து போரைத் தடுத்த வலிய வேலினையுடைய மலையன்)
என வரும் அடிகளிலும், சிலம்பில்

"மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணியில்
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோள்"
சிலம்பு 23-165

(மலையுச்சியிடத்து ஏறி ஒப்பற்ற பெரிய வானெல்லையில் கொலையிடத்துப்பட்ட தன் கணவனைக் கூடுவதாக நின்றவள், என வரும் அடிகளிலும் இவ்விகுதி நோக்கப்பொருளில் வந்து உள்ளமையைக் காணலாம்.

### 3. 5. 1. 3. 9 தலைமை வினை

பொதுவாகச் செய்து வாய்பாட்டு எச்சமும், சூனியவீற்று எச்சமுமே (ஆடி போன்றவை) தலைமைவினைகளாக வரினும் செய்பு வாய்பாட்டு எச்சமும் பழந்தமிழ் இலக்கியங்களில் ஒரு இடத்தில் தலைமைவினையாக வந்துள்ளதைக் காண்கிறோம். நற்றிணையில்

"நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த
வெறிகமழ் கொண்ட நாற்றமும் .... ..." நற் 368-5

என வரும் அடிகளில் முதிர்பு என்னும் எச்சம் தலைமைவினையாக இரு என்னும் துணைவினை கொண்டு முடிந்துள்ளது.

"கார் முதிர்பு இருந்த" என்ற தொடருக்கு "கருமை முதிர்ந் திருந்த கூந்தலில்" என உரையாசிரியர் பொருள் எழுது தல் காண்க.

3. 5. 1. 3. 10 **தொழிற் பெயர்**

பிற ஈற்று எச்சங்களைக் காட்டிலும் புகர வீற்றெச்சமே மிக அதிகமான இடங்களில் தொழில் பெயராக வந்துள்ள மையைக் காண்கிறோம்.

பழந்தமிழ் இலக்கியங்களில் இது இருபது இடங்களில் தொழில்பெயராக வந்துள்ளது. செய்யூ வாய்பாட்டு எச்சம் மட்டும் இரு இடங்களில் தொழிற்பெயராக வருதலும், பிற எச்சங்கள் எதுவும் இப்பொருளில் வாராமையும் இங்குக் குறிப்பிடற் குரியவை.

பதிற்றுப்பத்தில்

"முள்ளிடு பறியா வேணி ..." பதி 45–15

(முள் வேலி யிடுவதை அறியாத எல்லைப்புறம்)

எனவும்,

"... ... உள்ளுபு மறந்தறி யேமே" ஐங் 298-4

வளை நினைத்தலை ஒருநாளும் மறந்தறியேம்)

எனவும்,

"சென்றுசேர்பு ஒல்லா ராயினும் ..." அகம் 137.4

(சென்று சேர்தலை நம் தலைவர் இசையார் ஆயினும்)

எனவும்,

"சிறுமை உறுபவோ செய்பறி யலரே" நற் 1-9

(செய்வதறியாராய்த் தடுமாற்றமடைவாரோ)

எனவும்,

"... ... ... தூங்குபு தொடரி" குறு 257-2

(தொங்குதலைச் செய்து தொடர்ந்து)

எனவும்,

"... ... ஒருமுறை கொய்பு கூடி" பரி 2-45
(ஒரு முறையிலேயே கொய்தல் பெற்று)

எனவும்,

''தளியுறு பறியாவே ... ...'' கலி 20-8
(மழை பெய்தலைக் கண்டறியாவாதலால்)

எனவும் இவ்வெச்சம் தொழிற்பெயராக வந்திருத்தலைக் காண்க

### 3. 5. 1. 4 எழுவாய்

பிற விகுதிகளைப் போன்றே செய்பு வாய்பாட்டு விகுதியும் அது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயைக் கொண்டு வருதலும், இருவேறு எழுவாய்களைக் கொண்டு வருதலும் பெருமபாலும் பொருளைச் சார்ந்தே உள்ளது. பழந்தமிழ் நூல்களில் வரிசைப் பொருள் வரும் இடங்களில் எல்லாம் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. நிலைமைப் பொருளில் ஒரு இடம் உடனிகழ்ச்சிப்பொருளில நான்கு இடங்கள் தவிர்த்து எஞ்சிய இடங்கள் அனைத்திலும் ஒரே எழுவாயே காணப்படுகிறது. காரணப் பொருளில் ஒரு இடத்தில் ஒரே எழுவாயும, எட்டு இடங்களில் இரு எழுவாய்களும் வர, தாக்கப் பொருளிலோ அனைத்து இடங்களிலும் இருவேறு எழுவாய்களே வந்துள்ளன.

### 3. 5 1. 4. 1 வரிசைப் பொருள்

இப்பொருளில் இவ்விகுதி வரும் எல்லா இடங்களிலும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

### 3. 5. 1. 4. 1. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்
''அழல் விடுபு ... ... ...
தொழில்புகல் யானை ... ...'' பதி 40-30

என வந்துள்ள அடிகளில் விடுபு என்னும் எச்சமும் அது கொண்டு முடியும் புகல் என்னும் சொல்லும் யானை என்ற ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. இது போன்றே ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல் ஆகிய நூல்களிலும் வந்துள்ளமையை இது காட்டும். பொருள் பிரி வில் (3. 5, 1. 3. 1) காணும் எடுத்துக்காட்டுக்கள் இதனைத் தெளிவுபடுத்தும்.

**3. 5. 1. 4. 2 துணைநிகழ்ச்சிப் பொருள்**

இப்பொருளிலும் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வரக்காண்கிறோம்.

**3. 5. 1. 4. 2. 1 ஒரே எழுவாய்**

பதிற்றுப்பத்தில்

"பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதல்" பதி 15-10

என வரும் அடிகளுக்கு உரை எழுதும் ஆசிரியர் "பீர்க்கங் கொடி ஏறிப்படர்ந்த நீரற்ற உழுசால்கள்" என எழுதுவதையும் இவர்பு என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் பரந்த என்ற பெயரெச்சமும் பீர் (பீர்க்கங் கொடி) என்னும் ஒரே எழுவாயையே கொண்டிருப்பதையும் காண்கிறோம். இதே நிலைதான் பிற பழந்தமிழ் நூல்களிலும் காணக்கிடப்பதைத் துணைநிகழ்ச்சிப்பொருள் பிரிவில் காணும் எடுத்துக் காட்டுகளில் காணலாம்.

**3. 5. 1. 4. 3 உடனிகழ்ச்சிப் பொருள்**

நான்கு இடங்கள் தவிர்த்து இப்பொருள் வரும் அனைத்து இடங்களிலும் ஒரே எழுவாயே வந்துள்ளது.

**3. 5. 1. 4. 3. 1 ஒரே எழுவாய்**

பதிற்றுப்பத்தில் வரும்

"... ... ... பாடிமிழ் புழிதரும்
மடங்கல் ... ... ... ..." பதி 62-7

என்னும் அடிகள் 'முழக்கத்தை செய்து திரியும் கூற்று' என்ற பொருள் தரும். இவ்வடிகளில் இமிழ்பு என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் உழிதரும் என்னும் பெயரெச்சமும் மடங்கல என்னும் ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. பிற பழந்தமிழ் நூல்களிலும் நாம் இதே நிலையினை காணக் கூடியதாக இருக்கிறது. இதனை 3. 5. 1. 3. 3 பிரிவில் காணலாம்.

### 3. 5. 1. 4. 3. 2 இரு எழுவாய்கள்

பழந்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்கின் நான்கு இடங்களில் மட்டுமே இப்பொருளில் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன.

பதிற்றுப்பத்தில் வரும்

"... ... ... அழல்<br>
... ... ... சுடர் திகழ்பு<br>
... ... ... ... ... ...<br>
மடங்கல் வண்ணங் கொண்ட<br>
... ... ... கொற்ற வேந்தே" பதி 62-6

என்னும் அடிகளில் திகழ்பு என்னும் சாலவெச்சத்தின் எழுவாயாக அழலும், அது கொண்டு முடியும் வினையான கொண்ட என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக வேந்தனும் வந்துள்ளமையைக் காண்கிறோம்.

உரையாசிரியர்

"நெருப்பானது சுடர்விட்டு எங்கணும் விளங்க ... ... கூற்றினது இயல்பினைக் கொண்ட வெற்றியையுடைய அரசே''

என்று பொருள் எழுதுதலைக் காண்க.

இதுபோன்றே அகநானூற்றில்

"... ... ... ... நன்னர் நெஞ்சம்
... ... ... ... ... ...
மாரி வானந் தலைஇ நீர்வார்பு
... ... ... ... ... ...
... ... ... ... ... அவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே" அகம் 128-6

என வரும் அடிகளில் வார்பு என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நீரும, அது கொண்டு முடியும் தாங்கிய என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக நெஞ்சமும் வந்திருத்தலைக் காணலாம். மேகம் மழை பெய்தலால் நீர் ஒழுகா நிற்க, நமது நல்ல நெஞ்சம் அவரது தளராநின்ற அடியைத் தாங்கும் பொருட்டு இன்று சென்று விட்டது என உரையாசிரியர் பொருள் எழுதுதல் காண்க.

இது போன்றே

"அம்மென் குரும்பைக் காய்படுபு பிறவும்
... ... ... ... ... ...
இரவுத்தலைப் பெயரும் ... ... ... " பத்து 6-683

எனவரும் பத்துப்பாட்டு அடிகளில் படுபு என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக குரும்பைக்காயும் பிறவும் வர அது கொண்டு முடியும் தலைப்பெயரும் என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக இரவும் வருதலைக் காண்க.

### 3. 5. 1. 4. 4 நிலைமைப்பொருள்

இப்பொருளில் ஒரு இடம் தவிர்த்துப் பிற இடங்கள் அனைத்திலும் இவ்வெச்சமும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வருகின்றன.

### 3. 5. 1. 4. 4. 1 ஒரே எழுவாய்

அகநானூற்றில்

"தோள் தாழ்பு இருளிய குவையிருங் கூந்தல்"
அகம் 197-10

என வரும் அடிகளில் தாழ்பு என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் இருளிய என்னும் பெயரெச்சமும் கூந்தல் என்ற ஒரே எழுவாயையே கொண்டுள்ளமையைக் காண் கிறோம். பிற பழந்தமிழ் நூல்களிலும் இதே நிலை தான் காணப்படுகிறது. இதனைப் பொருள்பிரிவில் கண்டு கொள்க.

### 3. 5. 1. 4. 4. 2 இரு எழுவாய்கள்

பத்துப்பாட்டில் மட்டும் ஒரே ஒரு இடத்தில் இவ்வெச்சமும், இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளமையைக் காண்கிறோம்.

"நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை"
பத்து1-86

என வந்துள்ள அடியில் தாழ்பு என்ற எச்சத்தின் எழுவாயாக நகை என்ற சொல்லும் அது கொண்டு முடியும் துயல்வரூஉம் என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாகக் குழையும் வந்திருத்தலைக் காண்க.

### 3. 5 1. 4. 5 காரணப்பொருள்

வினையெச்சங்கள் காரணப்பொருளில் வரும்போது ஒரே எழுவாய் வருவதைப் போன்றே இரு எழுவாய்களும் வருதல் இயல்பு என்பதை முன்னரே கண்டோம். இவ்விகுதியும் அதற்கு விலக்கன்று. பழந்தமிழ் நூல்களில் ஒரு இடத்தில் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையும், எட்டு இடங் களில்இ ருவேறு எழுவாய்களையும் கொண்டு வந்துள்ளன.

### 3. 5. 1. 4. 5. 1 ஒரே எழுவாய்

பதிற்றுப்பத்தில்

"நல்லெழி னெடும் புதவு முருக்கிக் கொல்லுபு
ஏன மாகிய நுனைமுரி மருப்பின்
... ... ... மழகளிறு முழங்கும் பாசறை" பதி 16-5

என வந்துள்ள அடிகளில் கொல்லுபு என்னும் காலவெச்ச மும் அது கொண்டு முடியும் ஆகிய என்னும் பெயரெச்சமும் களிறு என்ற ஒரே எழுவாயையே கொண்டிருத்தலைக் காண்கிறோம். நல்ல அழகிய நெடிய கதவுகளைத் தாக்கிச் சிதைத்தலால் நுனி முரிந்து பன்றியைப் போலத் தோன்றும் இளங் களிறுகள் பிளிறும் பாசறை என்ற பொருள் இவ்வடிகளில் வருதல் காண்க.

### 3. 5. 1. 4. 5. 2 இரு எழுவாய்கள்

முன்னரே கூறியபடி எட்டு இடங்களில் இவ்விகுதியும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களைக் கொண்டு வந்துள்ளன.

அகநானூற்றில் வரும்

"வயந்திகழ் பிமிழ்தரும் ... ... ...
... ... ... ... ... ... ...
கடும்பகட் டியானை ... ... ..." அகம் 93-17

என்ற அடிகளில் திகழ்பு என்னும் காரணவினையெச்சத்தின் எழுவாயாக வயம் என்ற சொல்லும் அது கொண்டு முடியும் இமிழ்தரும் என்னும் பெயரெச்சத்தின் எழுவாயாக யானை யும் வந்திருத்தலைக் காண்கிறோம், "வலி விளங்குதலின் முழங்கும் கடிய பெரிய யானைப்படை" என உரையாசிரியர் எழுதுதல் காண்க. நற்றிணை, குறுந்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இலக்கிய எடுத்துக்காட்டுகளை 3. 5. 1. 3. 5 பிரிவில் காணலாம்.

### 3. 5 1. 4. 6 தாக்கப்பொருள்

இவ்விகுதி இப்பொருளில் வரும் பதினெட்டு இடங்களிலும் இதுவும் இது கொண்டு முடியும் வினையும் இருவேறு எழுவாய்களையே கொண்டு வருதலைக் காண்கிறோம்.

### 3. 5. 1. 4. 6. 1 இரு எழுவாய்கள்

பதிற்றுப்பத்தில்

"... ... ... ... ... சாந்து புலர்பு
... ... ... ... ... ... ... ... ...
... ... ... மார்புகவர் முயக்கத்து" பதி 50-16

என வரும் அடிகளுக்கு உரையாசிரியர் "பூசிய சந்தனம் புலர ... ... ... மார்படைய முயங்கும் முயக்கத்தால்" எனப்பொருள் எழுதியுள்ளமையைக் காண்கிறோம். எனவே புலர்பு என்னும் காலவெச்சத்தின் எழுவாயாக சாந்தும், அது கொண்டு முடியும் (முயங்கும்) முயக்கத்தின் எழுவாயாக நீ (தோன்றா எழுவாய்) என்ற சொல்லும் வந்துள்ளதை உணரலாம்.

இவ்விகுதி இப்பொருளில் வரும் பிற பழந்தமிழ் நூல்களி லும் இதே நிலைதான் காணக்கூடியதாய் இருப்பதை 3. 5. 1. 3. 6 பிரிவில் காணும் எடுத்துக்காட்டுக்களில் காண்க.

### 3. 5. 1. 4. 7 வினையடைப்பொருள்

இவ்விகுதி இப்பொருளில் வரும் பதினான்கு இடங்களி லும் ஒரே எழுவாயே காணப்படுகிறது. இது பொருளைச் சார்ந்தே இவ்விதம் வருகிறது என்பதை முன்னரே கண்டோம்.

அகநானூற்றில்

"... ... பாம்பின் விரைபுநீர் முடுக" அகம் 324-13

என வரும் அடியில் விரைபு என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் முடுக என்னும் வினையெச்சமும் நீர் என்ற ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளன. பிறபழந்தமிழ் இலக்கிய எடுத்துக்காட்டுகளை 3. 5. 1. 3. 7 பிரிவில காண லாம்.

### 3. 5. 1 4. 8 நோக்கப் பொருள்

பழந்தமிழ் இலக்கியங்களில் இவ்விகுதி (புறம் 1, சிலம்பு 1) இரு இடங்களில் மட்டுமே இப்பொருளில் வந்துள்ளது. இரு

இடங்களிலுமே இதுவும் இது கொண்டு முடியும் வினையும் ஒரே எழுவாயையே கொண்டு வரக் காண்கிறோம். இதுவும் பொருள் அடிப்படையிலேயே இவ்விதம் வந்துள்ளது.

புறநானூற்றில்

"... ... நிலங்கவர்பு
விரைந்துவந்து சமந்தாங்கிய
வல்வேன் மலையன் ... ..." புறம் 125-12

என்ற அடிகளில் கவர்பு என்னும் காலவெச்சமும் அது கொண்டு முடியும் தாங்கிய என்னும் பெயரெச்சமும் மலையன் என்ற ஒரே எழுவாயையே கொண்டு வந்துள்ளமையைக் காணலாம்.

இதைப் போன்றே சிலம்பிலும்

"... ... ... நீலி என்போள்
... ... ... ... ... ... ...
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோள்"
. சிலம்பு 23-159

என வரும் அடிகளில் கூடுபு என்னும் வினையெச்சமும் அது கொண்டு முடியும் நின்றோள் என்னும் வினையாலணையும் பெயரும் நீலி என்ற ஒரே எழுவாயையே கொண்டு வரக் காணலாம்.

### 3. 5. 1. 5 காலம்

செய்பு வாய்பாட்டின காலம் பற்றிய உரையாசிரியர்கள் கருத்துக்களை முன்னரே விரிவாகக் கண்டோம். சேனாவரையர் உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்காலம் பற்றி வரும் எனவும், நச்சினார்க்கினியர் இது நிகழ்காலத்திலும் வரினும் இறந்தகாலத்திலேயே அதிகமாக வரும் எனவும், தெய்வச்சிலையார் இது மூன்று காலத்திலும் வரும் எனவும் கூறிச் செல்லுவர். பழந்தமிழ் இலக்கியங்களை நோக்கின் இது இறந்த காலத்தில் மிக அதிகமாகவும், அடுத்து நிகழ்காலத்திலும், பின்னர் எதிர்காலத்திலும் வந்துள்ளமை நன்குத் தெரிய வரும்.

3. 5. 1. 5. 1 இறந்த காலம்

அகநானூற்றில்

"துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
ஒண்செங் குருதி உவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த ... ... ... ..." அகம் 3-7

(அசைந்த நடையையுடைய மரையாவை வலப்பக்கத்தே வீழக் கொன்று வீழ்த்தி அதன் ஒள்ளிய சிவந்த குருதியை ஊற்றி யுண்டு ஆர்ந்து புலால் நாறும் புலி கைவிட்டுப்போன)

என வரிசைப் பொருளிலும்,

"இணரிறுபு உடையும் நெஞ்சமொடு" அகம் 217-18

(மதுகை இற்று உடையும் நெஞ்சத்துடன்)
என துணைநிகழ்ச்சிப்பொருளிலும்,

"தோள்தாழ்பு இருளிய குவையிருங் கூந்தல்"
அகம் 197-10

(தோள்களில் தாழ்ந்து இருண்ட திரண்ட பெரிய கூந்தல்)
என நிலைமைப்பொருளிலும்,

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
... ... ... ... ... ... ...
வாயா கின்றே தோழி ஆய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்னக மடந்தையொடு நட்பே" 
குறு. 157

(அழகிய வீரக் கழலையும் சிவந்த இலையையும் உடைய வெள் ளிய வேலினை ஏந்திய தலைவனோடே பலவாகத் தொக்க வளையணிந்த முன்கையினுடைய நின் மகள் கொண்ட கேண் மை, மணப்பறைகள் ஆரவாரிப்பவும், சங்குகள் முழங்கா நிற் பவும் தலைவன் தன் மனையிடத்தே இறை கொள்ளுதலானே — உண்மையாகியது) எனக் காரணப்பொருளிலும் வரும்

இடங்களில் எல்லாம் இவ்வெச்சம் இறந்தகாலம் காட்டி நிற்பதைக் காண்கிறோம்.

3. 5. 1. 5. 2 நிகழ்காலம்

அகநானூற்றில்

"விண்ணதிர்பு தலைஇய ..." அகம் 163-1

(வானின்கண் முழங்கிக் கூடிய)

என்னும் அடியில் உடனிகழ்ச்சிப்பொருளை உணர்த்தி வரும் நிலையில் இவ்வெச்சம் நிகழ்காலம் காட்டுவதாக உள்ளது.

3. 5. 1. 5. 3 எதிர்காலம்

பதிற்றுப்பத்தில்

"... ... கவரு நெய்வழி புராலின்
பாண்டில் விளக்குப் பருஉச் சுடரழல" பதி 47-5

(எரிக்கப்படும் நெய் வழியுமாறு பெய்து நிரப்புதலால் கால் விளக்கினது பருத்த திரியானது பேரொளி காட்டியெரிய)

எனத் தாக்கப்பொருளிலும், புறநானூற்றில்

"... ... ... ... நிலங்கவர்பு
விரைந்துவந்து சமந்தாங்கிய
வல்வேன் மலையன் ... ... ..." புறம் 125-12

என நோக்கப்பொருளிலும் வரும் இடங்களில் எல்லாம் இவ்வெச்சம் எதிர்காலம் காட்டி நிற்றலைக் காண்கிறோம்.

# 3.6

## பழந்தமிழில் காலவெச்சவிகுதிகள்-6

### -மை, -மல்

#### 3. 6. 1 -மை

செய்யாமை வாய்பாட்டுக் காலவெச்சம் பழந்தமிழ் இலக்கியங்களில் மிக அருகியே காணப்படுகிறது. இவ்விலக்கியங்களில் மொத்தம் முப்பத்துமூன்று இடங்களில் இவ்வெச்சம் வந்துள்ளது (பதி 1, அகம் 7, நற் 1, புறம் 2, பரி 1, கலி 9, குறள் 11, சிலம்பு 1). பழந்தமிழ் நூல்களில் ஐங்குறுநூறு, குறுந்தொகை, பத்துப்பாட்டு, மணிமேகலை ஆகிய நூல்களில் இவ்வெச்சம் காணப்படுவதில்லை. இந்நிலையில் இது மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே வருவது தெளிவு.

#### 3. 6. 1. 1 உரையாசிரியர்கள்

முன்னர்க் குறிப்பிட்டது போல எதிர்மறை எச்ச வாய்பாடுகளைத் தொல்காப்பியர் தராவிடினும் பலவேறு உரையாசிரியர்களும் தந்து சென்றிருப்பது இங்கு உணரத்தக்கது. இளம்பூரணர் செய்யாமை, செய்யாமல் வாய்பாடுகளுக்கு எடுத்துக்காட்டுகள் எதுவும் தருவதில்லை. சேனாவரையர் 229-ம் சூத்திரத்தின் கீழ்

"கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்"

என்பதையும், 236-ம் சூத்திரத்தின் கீழ்

உண்ணாமை

என்பதையும், நச்சினார்க்கினியர் (238)

செய்யாமை

என்பதையும் தந்துநிற்பர். தெய்வச்சிலையார் (229) இவ்வெச்சம் பற்றிக் கூறுபோது

மழை பெய்யாமையின் மரம் வறந்தன

என்ற உதாரணத்தைத் தருவார். இது பொருந்துமா என்பது தெரியவில்லை.

கல்லாடனார் (238)

உண்ணாமை

என்ற எடுத்துக்காட்டினைத் தந்து செல்வார்.

3. 6. 1. 2 -ஆமல்

இவ் விகுதி

எதிர்மறை காட்டும் ஆகார இடைநிலைக்குப் பின்னர் வரும். -மல் விகுதியும் இதுவும் பதில்நிலை வழக்கில் உள்ளன.

3. 6. 1. 2. 1 -ஆ- எதிர்மறைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| எஞ்சாமை | குறைவுபடாது | பதி 90-4 |
| கழியாமை | தாழ்க்காது | அகம் 255-8 |
| வெளிப்படாமை | வெளியிலே தெரியாதபடி | நற் 16-6 |
| அறியாமை | அறிந்துகொள்ளா வண்ணம் | புறம் 386-8 |
| காணாமை | காணாது | பரி 19-64 |
| கேளாமை | கேளாமல் | கலி 108-91 |

| இகவாமை | தப்பாமல் | குறள் 779 |
|---|---|---|
| வாழாமை | வாழாமை | சிலம்பு 28-212 |

### 3. 6. 2 -மல்

செய்யாமை வாய்பாட்டு எச்சத்தைப் போன்றே செய்யாமல் வாய்பாட்டு எச்சமும் எதிர்மறைப் பொருளைக் காட்டி நிற்கும். இதுவும் பழந்தமிழ் இலக்கியங்களில் மிகவும் அருகியே காணப்படுகிறது. பத்துப்பாட்டு ஒழிந்த பிற முன்பழந்தமிழ் இலக்கியங்கள் எதிலும் இவ்வாய்பாட்டு எச்சம் காணப்படுவதில்லை. ஆனால் பின்பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இது காணப்படுவதோடு இடைக்காலத் தமிழ் இலக்கியங்களிலும் அதிகமாக வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. பத்துப்பாட்டு (1), பரிபாடல் (2), கலித்தொகை (11), குறள் (4) சிலம்பு (6), மணிமேகலை (4) ஆகிய நூல்களில் இதனைக் காண முடியும். -மல் விகுதியின் வரவைப் பின்பழந்தமிழ்க் கூறாகக் கருதலாம்.

### 3. 6. 2. 1 உரையாசிரியர்கள்

இவ்வாய்பாட்டு எச்சத்திற்கு உதாரணம் தர வந்த சேனாவரையர் (229)

"கூறாமற் குறித்ததன் மேற் செல்லும்"

என்னும் கலித்தொகை அடியினையும்

உண்ணாமல்

என்பதையும் தந்து நிற்பார். இவரை அடியொற்றி நச்சினார்க்கினியரும் (238)

"மழை பெய்யாமல் மரங் குழையாதாயிற்று"

என்பதைத் தந்து நிற்பார். தெய்வச்சிலையார், இது பற்றி எதுவும் கூறுவதில்லை. கல்லாடனார் (232)

எண்ணாமல்

என்ற எடுத்துக் காட்டினைத் தருவார்.

**3. 6. 2. 2 சூழல்**

1) எதிர்மறை காட்டும் ஆகார இடைநிலைக்குப் பின்னர் வரும்.

**3. 6. 2. 2. 1 -ஆ- எதிர்மறைக்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| தொய்படாமல் | நனையாதபடி | பத்து 10-365 |
| நாணாமல் | நாணமின்றி | பரி 20-74 |
| காணாமல் | காணாமல் | கலி 39-41 |
| சிதையாமல் | அழியாமல் | குறள் 578 |
| வழாமல் | வழுவாமல் | சிலப்பு 3-146 |
| புகாமல் | புகாமல் | மணி 24-68 |

முன்னர்க் குறிப்பிட்டபடி -மல் விகுதி பின்பழந்தமிழ் நூல்கள் மட்டிலுமே காணப்படுகிறது. எனினும் தொல்காப்பியத்தில் ஓரிடத்தில் வருவது குறிப்பிடத்தக்கது.

| | |
|---|---|
| அறியாமல் | பொருள் 534-1 |

எதிர் மறை எச்சங்கள் காட்டும் பொருள், காலம், அவை ஏற்கும் எழுவாய் ஆகியன பற்றிப் பின்னர்க் காண்போம்

## கால்டுவெச்ச விகுதிகள்
### பட்டியல் - 1

| | -உ | | -ф | | | | -ஊ (உ) | -ஆ | -பு | -மை | -மல் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இ கா இடை நிலை | -ஆ.த்- எதிர் மறை | -இ- | -ய்- | எதிர் மறை -ஆ- | -இ அள பெடை- | -ф- இ.கா இ.நி | -ф- இ.கா இ.நி | -ф- இ.கா இ.நி. | -ஆ- எதிர் மறை | -ஆ- எதிர் மறை |
| பதி | 354 | 48 | 132 | 5 | — | 36 | 9 | 3 | 30 | 1 | — |
| ஐங் | 189 | 26 | 109 | 31 | — | 34 | 3 | 1 | 9 | — | — |
| அகம் | 975 | 136 | 805 | 61 | 8 | 192 | 13 | 36 | 115 | 7 | — |
| நற் | 515 | 72 | 502 | 31 | 2 | 95 | 4 | 16 | 53 | 1 | — |
| குறு | 285 | 45 | 156 | 27 | 3 | 41 | 1 | 4 | 32 | — | — |
| புறம் | 739 | 115 | 558 | 18 | 2 | 80 | 7 | 23 | 26 | 2 | — |
| பத்து | 586 | 71 | 495 | 24 | — | 123 | 15 | 16 | 63 | — | 1 |
| பரி | 234 | 75 | 142 | 19 | 1 | 17 | 5 | 8 | 52 | 1 | 2 |
| கலி | 966 | 115 | 405 | 55 | 2 | 64 | 2 | 31 | 123 | 9 | 11 |
| குறள் | 438 | 46 | 203 | 12 | 16 | 16 | — | 5 | — | 11 | 4 |
| சிலம்பு | 933 | 68 | 579 | 34 | — | 39 | 2 | 9 | 7 | 1 | 6 |
| மணி | 880 | 90 | 383 | 24 | — | 18 | 2 | 5 | 8 | — | 4 |

இகா.இ.நி. — இறந்த கால இடைநிலை

பட்டியல் -2

—உ (செய்து போன்றவை)

| | வரிசைப் பொருள் | | துணை நிகழ்ச்சிப் பொருள் | | உடன் நிகழ்ச்சிப் பொருள் | | நிலைமைப் பொருள் | | காரணப் பொருள் | | தாக்கப் பொருள் | | வினையடைப் பொருள் | | நோக்கப் பொருள் | | துணைமை வினை | வேறு முறை | கூட்டு வினை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | | | |
| பதி | 31 | ... | 217 | ... | 36 | 8 | 33 | ... | 1 | 22 | ... | 4 | 2 | ... | ... | ... | ... | 2 | ... |
| ஐங் | 30 | 1 | 117 | ... | 13 | ... | 5 | 1 | 2 | 5 | ... | 1 | 11 | ... | ... | ... | 1 | 3 | ... |
| அகம் | 103 | ... | 672 | ... | 70 | 3 | 69 | ... | 11 | 12 | ... | 5 | 15 | ... | ... | ... | 12 | 2 | 3 |
| நற் | 39 | ... | 377 | 5 | 39 | 1 | 18 | 1 | ... | 11 | ... | 3 | 5 | ... | ... | ... | 11 | ... | 2 |
| குறு | 25 | 1 | 197 | ... | 16 | ... | 12 | ... | 17 | 11 | ... | ... | 1 | ... | ... | ... | 3 | 13 | 1 |
| புறம் | 40 | ... | 559 | 1 | 45 | ... | 35 | 1 | 1 | 8 | ... | 2 | 19 | ... | ... | ... | 14 | 6 | ... |
| பத்து | 41 | 1 | 422 | 2 | 33 | ... | 39 | 3 | 2 | 12 | ... | 2 | 15 | ... | ... | ... | 8 | 2 | 1 |
| பரி | 15 | ... | 170 | ... | 15 | 5 | 10 | 1 | ... | 7 | ... | 3 | 3 | ... | ... | ... | 2 | 1 | ... |
| கலி | 104 | ... | 598 | ... | 126 | 2 | 74 | ... | ... | 2 | ... | 1 | 25 | ... | 1 | ... | 32 | 1 | ... |
| குறள் | 29 | ... | 340 | ... | 35 | 3 | 1 | ... | 4 | 3 | ... | 2 | 10 | ... | .. | ... | 10 | 2 | ... |
| சிலம்பு | 66 | ... | 653 | 3 | 96 | 13 | 44 | 2 | 4 | 13 | ... | 2 | 8 | ... | 1 | ... | 23 | ... | 3 |
| மணி | 93 | ... | 649 | ... | 58 | 11 | 18 | 5 | 5 | 6 | ... | ... | 8 | ... | ... | ... | 22 | ... | 5 |

ஒ.எ - ஒரே எழுவாய், இ.எ - இரு எழுவாய்

பட்டியல்-3

-ф (ஆடி, அசைஇ, போய் போன்றவை

| | வரிசைப் பொருள் | | துணை நிகழ்ச்சிப் பொருள் | | உடன் நிகழ்ச்சிப் பொருள் | | நிலைமைப் பொருள் | | காரணப் பொருள் | | தாக்கப் பொருள் | | வினையடைப் பொருள் | | நோக்கப் பொருள் | | துணை வினை | கூட்டு வினை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | | |
| பதி | 35 | … | 76 | … | 22 | 4 | 20 | … | 3 | 7 | … | 3 | 1 | … | … | . | … | … |
| ஐங் | 24 | … | 90 | … | 26 | … | 15 | … | 7 | 11 | … | 1 | … | … | … | … | … | … |
| அகம் | 109 | … | 605 | … | 146 | 24 | 125 | … | 36 | 11 | … | 3 | 1 | … | … | … | … | … |
| நற் | 50 | … | 465 | 1 | 56 | 2 | 34 | 3 | 10 | 4 | … | 1 | 1 | … | … | … | 1 | … |
| குறு | 24 | 1 | 101 | … | 48 | … | 25 | 3 | 9 | 9 | 2 | 2 | … | … | … | … | … | … |
| புறம் | 40 | … | 465 | 1 | 60 | 3 | 62 | 2 | 12 | 8 | … | 3 | … | … | … | … | … | … |
| பத்து | 70 | 1 | 413 | 2 | 60 | 9 | 46 | 10 | 9 | 15 | … | … | … | … | 2 | … | 3 | 2 |
| பரி | 18 | … | 103 | 1 | 20 | 4 | 14 | … | 6 | 7 | … | … | … | … | 4 | … | 1 | … |
| கலி | 78 | … | 201 | … | 118 | … | 95 | … | 14 | 7 | … | 2 | … | … | … | … | 9 | … |
| குறள் | 40 | … | 113 | … | 36 | … | 14 | … | 3 | 3 | … | 4 | 2 | … | … | … | 16 | … |
| சிலம்பு | 57 | … | 421 | 2 | 96 | 14 | 42 | … | 1 | 12 | … | 2 | 3 | … | … | … | 1 | 1 |
| மணி | 38 | … | 327 | … | 32 | 4 | 5 | 3 | 4 | 7 | … | 2 | … | … | … | … | 2 | 1 |

பட்டியல்-4
—ஊ (உ)

| | வரிசைப் பொருள் | | துணை நிகழ்ச்சிப் பொருள் | | உடன் நிகழ்ச்சிப் பொருள் | | நிலைமைப் பொருள் | | காரணப் பொருள் | | தாக்கப் பொருள் | | வினையடைப் பொருள் | | நோக்கப் பொருள் | | தொழிற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ.எ | இ.எ | |
| பதி | 1 | ... | 3 | ... | 4 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... |
| ஐங | ... | ... | 2 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| அகம் | 5 | ... | 4 | ... | 3 | ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| நற் | ... | ... | 3 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| குறு | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| புறம் | 1 | ... | 4 | 1 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பத்து | 1 | ... | 8 | ... | 3 | 1 | ... | 1 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பரி | ... | ... | ... | ... | 3 | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கலி | ... | ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| குறள் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| சிலம்பு | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| மணி | 1 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |

## பட்டியல்-5

### —ஆ (செய்யா உடன்பாட்டு எச்சம்)

| | வரிசைப் பொருள் | | துணை நிகழ்ச்சிப் பொருள் | | உடன் நிகழ்ச்சிப் பொருள் | | நிலைமைப் பொருள் | | காரணப் பொருள் | | தாக்கப் பொருள் | | வினையடைப் பொருள் | | நோக்கப் பொருள் | | தலைமை வினை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஒ எ | இ எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | ஒ. எ | இ. எ | |
| பதி | ... | ... | 1 | ... | ... | ... | 1 | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | . | ... |
| ஐங் | ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| அகம் | 6 | ... | 18 | ... | 11 | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... |
| நற் | 2 | ... | 9 | ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | 2 | ... | ... | 1 | ... | ... |
| குறு | 2 | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... |
| புறம் | 4 | ... | 13 | ... | 5 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| பத்து | 3 | ... | ... | ... | 11 | ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பரி | ... | ... | 7 | | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கலி | 12 | ... | 5 | ... | 12 | ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| குறள் | ... | ... | 2 | ... | 3 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| சிலம்பு | 3 | ... | 6 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| மணி | ... | ... | 4 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |

பட்டியல்-6

—பு

| | வரிசைப் பொருள் | | துணை நிகழ்ச்சிப் பொருள் | | உடனிகழ்ச்சிப் பொருள் | | நிலைமைப் பொருள் | | காரணப் பொருள் | | தாக்கப் பொருள் | | வினையடைப் பொருள் | | நோக்கப் பொருள் | | தலைமை வினை | தொழிற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஒ எ | இ எ | ஒ. எ | இ.எ | ஒ எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ எ | இ.எ | ஒ.எ | இ.எ | ஒ எ | இ எ | ஒ.எ | இ.எ | | |
| பதி | 1 | ... | 6 | ... | 7 | 1 | 3 | ... | 1 | .. | ... | 5 | ... | ... | ... | — | — | 6 |
| ஐங் | 2 | ... | 3 | .. | ... | ... | 2 | ... | ... | ... | .. | 1 | ... | ... | ... | — | — | 1 |
| அகம் | 12 | ... | 69 | ... | 14 | 2 | 11 | ... | ... | 2 | ... | 1 | 1 | — | ... | — | — | 3 |
| நற் | 1 | ... | 37 | ... | ... | 4 | 4 | ... | ... | 1 | .. | 2 | ... | ... | ... | — | 1 | 3 |
| குறு | 3 | ... | 19 | ... | 4 | ... | ... | .. | ... | 3 | ... | 1 | 1 | ... | ... | — | — | 1 |
| புறம் | ... | ... | 22 | ... | ... | ... | 2 | ... | ... | ... | ... | ... | 1 | ... | 1 | — | — | — |
| பத்து | 2 | ... | 55 | ... | 1 | 1 | 2 | 1 | ... | 1 | ... | ... | ... | | ... | — | — | — |
| பரி | 3 | ... | 32 | ... | 3 | ... | ... | ... | ... | 1 | ... | 6 | 2 | ... | ... | — | — | 5 |
| கலி | ... | .. | 68 | ... | 36 | ... | 9 | ... | ... | ... | ... | ... | 9 | ... | ... | — | — | 1 |
| குறள் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | — | — | — |
| சிலம்பு | ... | ... | 4 | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | 1 | 4 | — | — |
| மணி | ... | ... | 7 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | — | — | — |

# பயன்படுத்திய இலக்கிய இலக்கண நூல்கள்

**அகநானூறு**, 1968 *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**இலக்கண விளக்கம்**, 1972 *சரசுவதி மகால் நூல்நிலையம், தஞ்சாவூர்.*

**ஐங்குறுநூறு**, 1957 *ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை* (முதல் பதிப்பு 1903).

——— 1966 *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**கலித்தொகை**, 1969 *திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**குறுந்தொகை**, 1962 *ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு, சென்னை* (முதல் பதிப்பு 1937).

——— 1965 *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**சிலப்பதிகாரம்**, 1968 *ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை* (முதல் பதிப்பு 1892.)

——— 1972 *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**திருக்குறள்**, 1967 *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.*

**தொல்காப்பியம் மூலம்,** 1967 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — இளம்பூரணர் உரை,** 1971 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — சேனாவரையர் உரை,** 1981 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — கல்லாடனார் உரை,** 1964 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை (முதல் பதிப்பு 1923).

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — தெய்வச்சிலையார் உரை,** 1974 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — நச்சினார்க்கினியர் உரை,** 1952 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.

**நற்றிணை,** 1976 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

**நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும்,** 1953 ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை.

**நன்னூல் விருத்தியுரை,** 1972 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

**நன்னூல் காண்டிகையுரை,** 1974 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

**நேமிநாதம்,** 1973 திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

பத்துப்பாட்டு, 1961 ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை (முதல் பதிப்பு 1889).

——— 1971 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

பதிற்றுப்பத்து, 1957 ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை (முதல் பதிப்பு 1904).

——— 1968 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

பரிபாடல், 1980 டாக்டர் உ. வே சாமிநாதையர் நூல்நிலையம் சென்னை (முதல் பதிப்பு 1918).

——— 1969 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

பிரயோகவிவேகம், 1973 சரசுவதி மகால் நூல்நிலையம். சென்னை.

புறநானூறு, 1956 ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை (முதல் பதிப்பு 1894).

——— 1972 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை (முதல் பதிப்பு 1951).

மணிமேகலை, 1965 ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை (முதல் பதிப்பு 1898).

——— 1972 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

முத்துவீரியம், 1972 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

வீரசோழியம் 1970 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

# உதவிய நூல்களும் கட்டுரைகளும்

அகத்தியலிங்கம், ச, 1972, "வினையெச்சம் பற்றித் தொல் காப்பியர்", தொல்காப்பிய மொழியியல், அண்ணாமலை நகர்.

——— 1979-80, "ஏவல் வினை" மொழியியல் 3, 2 & 3, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1982, சொல்லியல் -2 வினையியல் -1 அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம். அண்ணாமலை நகர்.

——— 1983 சங்கத்தமிழ், பகுதி -1 அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1983 சங்கத் தமிழ். பகுதி- 2 அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1984, சங்கத் தமிழ், பகுதி-3 அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1985. தொல்காப்பியச் சிந்தனைகள்-1, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1985 & 86 "பழந்தமிழில் காலவெச்சங்கள்"

மொழியியல் 9. 1 & 2, 9. 3 & 4, அனைத்திந்தியத் தமிழ் மொழி யியற் கழகம், அண்ணாமலை நகர்.

இசரயேல், மோ, 1965, "துணைவினைகள்", தென் மொழி

——— 1976, இலக்கண ஆய்வு-வினைச்சொல், மதுரை பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை.

இளையபெருமாள், மா. 1974, "சங்க இலக்கியங்களில் வினையெச்சத் திரிபுகள்" இந்தியப் பல்கலைகழகத்தமிழாசிரியர்மன்றம் ஆறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, பாண்டிச்சேரி.

சண்முகம், செ. வை. 1978, தொல்காப்பியரின் சொல்லியல் கோட்பாடு" மொழியியல் 2. 1 அனைத்திந்தியத் தமிழ், மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1984, சொல்லிலக்கணக் கோட்பாடு, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

சுப்பிரமணிய சாஸ்திரி, பி. எஸ். 1930, "தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு", செந்தமிழ், மதுரை.

மாதையன், பெ. 1978 & "வினையெச்ச வாய்பாடுகள்" மொழியியல் 2-2 அனைத்திந்தியத்தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

——— 1978 &, வினையெச்சங்களில் காலம் இந்தியப்பல்கலை, தமிழாசிரியர் மன்றம் பத்தாவது கருத்தரங்குஆய்வுக்கோவை தொகுதி-2,

முத்துச்சண்முகன் & தாமஸ் லேமன், 1984 "இக்காலத்தமிழில் கலப்பு வாக்கியங்கள்" மொழியியல் 7- 3 & 4, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம் அண்ணாமலை நகர்.

Agesthialingom, S. 1961. *Description of the Language of Patirruppattu with Translation, Translation and Index* unpublishedPh.D. Dissertation, University of Kerala, Trivandrum.

——— 1968, "On Verbal Participles in Tamil", *Indian Linguistics*, Vol. 52, Deccan College, Poona.

——— 1970. "On Vinai-y-eccam" *Seminar on Tolkappiyam*, Annamalai University, Annamalainagar.

——— 1979. *A Grammar of Old Tamil with Special reference to Patirruppattu,* Annamalai University, Annamalainagar.

——— 1980a. "Imperatives in Old Tamil", *Indian Linguistics*, Vol. 41, Deccan College, Poona.

——— 1980b. "Auxiliaries and Main Verbs", *Auxiliaries in Dravidian* (Ed. Agesthialingom, S. & Srinivasa Varma, G ), Annamalai University, Annamalainagar.

Andiappa pillai, D. 1970. *Descriptive Grammar of Kalittokai*, Ph.D. Dissertation, University of Kerala, Trivandrum.

Andronov, M. 1959. "On the uses of Participles and Participal nouns in Tamil" *Tamil Culture*, VIII, Madras.

——— 1969,. *The Standard Grammar* **of Modern and Classical Tamil**, New Century Book House Pvt. Ltd. Madras.

Annamalai, E. 1968. *The So-called Adverbs in Tamil*, M. A. Dissertation, Department of Linguistics, University of Chicago, Chicago.

——— 1970. "On moving from a co-ordinate structure in Tamil'' *Papers from the Sixth Regional meeting (of the) Chicago Linguistic Socieiy*, 131-46, Chicago.

Arden, A. H. 1969. *A Progressive Grammar of the Tami Language*, (Reprinted), The Christian Literature Society, Madras.

Balasubramaniyan, K. 1981. *A Descriptive Grammar of Tolka:ppiyam*, Ph.D. Dissertation, Department of Linguistics, Annamalai University, Annamalainagar.

Beschi, J. C. 1848. *A Grammar of the Common Dialects of the Tamil Language*, Madras.

Caldwell, R 1856. **A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages**(Reprinted in 1956), Madras.

Chatterji, S. K. 1926. *The Origin and Development of Bengali Language*, Calcutta.

Chithira Puthira Pillai, H. 1983. *Historical Study of Verbal Suffixes from Early to Middle Tamil*, Ph.D. Dissertation, Department of Linguistics, Annamalai University, Annamalainagar.

Elayaperumal, M. 1958. "The ma:r suffix in Early Tamil Literature", *Indian Linguistics*, Vol. 19, Deccan College, Poona.

——— 1975. *Grammar of Ainkurunu:ru with Index*, University of Kerala, Trivandrum.

Grierson, G. A. 1906. *Linguistic Survey of India*, Calcutta.

Ilakkuvanar, S. 1946. *The Making of Tamil Grammar*, The South India Saiva Siddhanta Works Publishing Society Ltd., Madras.

——— 1963. *Tolkappiam in English with Critical Studies*. Kuralneri Publishing House, Madurai.

Israel, M. 1973. *The Treatment of Morphology in Tolkappiam*, Madurai University, Madurai.

Jesperson, Otto, 1955. *A Modern English Grammar on Historical Principles*, George Allen & Urwin Ltd., London.

Kamatchinathan, A. 1964. *Grammatical Study of Natrrinai with Translation, Transliteration and Index*. Ph.D. Dissertation, University of Kerala, Trivandrum.

Kandaswamy, S. N. 1962. *Paripa:dal — A Linguistic Study - Part I Phonology, Part II Morphology and Syntax, Part III Dictionary*, Mt Litt. Dissertation, Annamalai University, Annamalainagar.

Krishnambal, S. R. 1974, *Grammar of Kurunthokai with Index*, University of Kerala, Trivandrum.

Lazarus, J. 1878. *A Tamil Grammar designed for use in Colleges and Schools*, Madras.

Lindholm, James, M. 1975. *The conceptual basis of the adverbial participles*, Ph.D. Dissertation, University of Chicago.

Lyons, John 1968. *Introduction to Theoretical Linguistics* Cambridge University Press, Cambridge.

Meenakshisundaran, T. P. 1965. *A History of Tamil Langu age*, Deccan College, Poona.

Natarajan, R. 1959. *Manime:kalai* as an *Epic, Appendix-Akara:ti in Tamil*, M.Litt. Dissertation, Annamalai University, Annamalainagar.

Parameswari, T. 1976, *Language of Tirukkural*, M.Litt. Dissertation, Annamalai University, Annamalainagar.

Pope, G. V. 1859, *A Larger Grammar of the Tamil Language in its Dialects to which* are added *the Nannu:l, Ya:pparunkalam* and *other Native Authorities*, Madras.

——— 1911, *A Hand Book of the Ordinary Dialect of the Tamil Language* Oxford University Press, London.

Schiffman, Herold. 1969. *A Transformational Grammar of Tamil Aspectual System (Studies* in *Linguistics and Language Learning, Vol. VII)*, University of Washington Seattle.

Schmerling, Susan 1975. "A Symmetric Conjunction and rules of Conversation", *Syntax* and *Semantics, Vol. 3*, Academic Press, New York.

Shanmugam, S. V. 1972. "Compound Verbal Participles in Tamil", *An Insight into Tamilology*, Coimbatore.

Subramanyam, P. S. 1971. *Dravidian Verb Morphology (A Comparative Study)*, Annamalai University, Annamalainagar.

Subralhmanya Sastri, P. S. 1934. *History of Grammatica Theories in Tamil and their relations to the Grammatical Literature in Sanskrit*, The Journal of Oriental Research, Madras.

———, 1945. *Tolka·ppiyam Collatika:ram with an English Commentary*, Annamalal University, Annamalainagar.

Subramaniyam, S. V. 1965. *Grammar of Cilappatikaram*, University of Kerala, Trivandrum.

——— 1972, *Grammar of Akana:nu:ru with Index*, University of Kerala, Trivandrum

Subramaniyam, V. I. 1962. *Index of Purana:nu:ru*, University of Kerala, Trivandrum.

Sundaram. R. M. 1967. *Grammatical Study of Pattuppattu with Index and Translation*, Ph.D. Dissertation, University of Kerala, Trivandrum.

Venugopal, S. 1984. *The Syntactic Study of the various verbal Participles in Tamil*, Ph. D. Dissertation, Department of Linguistics, Annamalai University, Annamalainagar.

William, Edwin. 1975. "Small clauses in English", *Syntax and Semantics, Vol. 4*, Academic Press, Newyork.

Zvelebil, K. 1961. *Lectures on Historical Grammar of Tamil*, Madras University, Madras.

Zvelebil, K., Glazov, J. J. & Andronov, M. 1967. *Introduction to the Historical Grammar of the Tamil Language*, Part I, Nauga Publishing House, Moscow.

# சொல்லடைவு

## ஆசிரியரின் நூல்கள்

1. உலக மொழிகள் I
2. உலக மொழிகள் II
3. உலக மொழிகள் III
4. உலக மொழிகள் IV
5. உலக மொழிகள் V (திராவிட மொழிகள்-1)
6. உலக மொழிகள் VI (திராவிட மொழிகள்-2)
7. மொழியியல்—வாழ்வும் வரலாறும்
   (டாக்டர் K. புஷ்பவல்லியுடன்)
8. சொல்லியல்—பெயரியல்
9. சொல்லியல்—வினையியல்
10. சங்கத்தமிழ் I
11. சங்கத்தமிழ் II
12. சங்கத்தமிழ் III
13. சங்கத்தமிழ் IV
14. தொல்காப்பியச் சிந்தனைகள் I
15. சங்கத்தமிழ் V (அச்சில்)
16. A Generative Grammar of Tamil
17. The Language of Tamil Inscriptions
    (with Dr. S. V. Shanmugam)
18. Kanikkara Dialect
19. A Bibliography of Dravidian Linguistics
    (with Dr. S. Sakthivel)
20. A Bibliography for the study of the Nilgris Tribes
    (with Dr. S. Sakthivel)
21. A Grammar of Old Tamil
    with special reference to Patirruppattu

---

Wrapper Printed at KARPAKAM ACHAKAM, Madras-600 002.